பெயர் கூறப்பட்டுள்ளன. இசைநுணுக்க மென்பது தெள்ளிய தமிழ்ச் சொல்லாக விளங்குகின்றது. மாபுராணம், பூதபுராணமென்பன வடசொற் றொடரோ, தென் றமிழ்த் தொடரோ என்ற ஐயத்திற்கு ஏதுவா யிருக்கின் றன. தொல்காப்பியம் ஒன்றே இடைச்சங்க நூலென்பது தெளிவாக விளங்குகின்றது.

இடைச்சங்க காலத்தின் முடிவில் ஆண்ட முடத் திருமாறன் காலத்தே ஒரு கடல்கோள் நிகழ, அவ்வரசனே இப்பொழுதுள்ள மதுரையிலோ மணலூரிலோ கடைச்சங்கத்தைத் தொடங்கியதாகத் தெரிகின்றது. இடைச்சங்கத்தார் காலத்திலே கொற்கை என்பது ஒரு துறைமுகமாக இருந்திருத்தல்கூடும். கொற்கையிலே பாண்டியர் அரசாண்டதாகத் தெரிகின்றது. மதுரை தலைநகரான பொழுது கொற்கை இளவரசருக்கு இடமாக விருந்தது. திருவிளையாடற் புராணத்திற் கடைச்சங்கம் நிறுவிய பாண்டியன் வங்கியசேரனென்று கூறப்பட்டது. முடத்திருமாறனுக்கு அப்பெயரமைந்ததற்குக் காரணம் விளங்கவில்லை.

**இறையனு ரகப்பொருளென்பது** பாண்டிய நாட்டிற் பன்னிரண்டியாண்டு நிலைத்திருந்த கருப்பொன்று கழிந்த பின், பாண்டிய மன்னன் தமிழ்ச் சங்கத்தை மீட்டும் நிறுவிய காலத்தே கூடற்பெருமான் பீடத்தின் கீழ்க் கண்டெடுத்ததோர் அகப்பொருணூலாகும். இது வெளிப்பட்ட ஞான்று தொல்காப்பியப் பொருளதிகாரம் மறைவுற்றிருந்தது போலும்! மேற்குறித்த

கருப்பானது, கி. மு. நாலாவது நூற்றாண்டிலே நிகழ்ந்த தாக வரலாற்றாசிரியர் கருதுவதால் அந்நூற்றாண்டின் இறுதியிலே இந்நூல் வெளிப்பட்டிருத்தல் கூடும். இதற்கு நெடுங்காலத்திற்குப் பின்னேயே இந்நூற்கு உரைகாணத் தொடங்கினர். இறையனாரகப் பொருளில் குறிக்கப் பட்ட வற்கடம் வடநாட்டுக் கிரேக்க தூதுவர் குறிப்புக்களிற் பேசப் பட்ட கி. மு. நான்காம் நூற்றாண்டின் இறுதியில் (கி. மு. நூாகூ) இந்தியாவில் ஏற்பட்ட வற்கடமாமெனின் கி. மு. நான்காம் நூற்றாண்டின் இறுதியாதல் கி. மு. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கமாதல் இறையனாரகப் பொருளின் காலமா யிருத்தல் கூடும். திருவிளையாடற் புராணத்திலே உக்கிரகுமார பாண்டியன் காலத்தில் வற்கடம் நிடித்திருந்ததென்று கேட்கப்படுகின்றது. அதுவும் மேற்குறித்தவற்கடமேயாம்.

சங்கத்தார் காலத்திருந்த பன்னிருபடலம், காக்கை பாடினியம், பனம்பாரனார் சூத்திரம், அவிநயம், சிகண்டி யின் இசைநுணுக்கம், மதிவாணனார் நாடகத் தமிழ்நூல், கூத்த நூல், செயிற்றியமென்னும் நாடக வியனூல் முதலிய முத்தமிழிலக்கண நூல்கள் பிற்காலத்து மறைந்தன.

தமிழரது முதற்கழகம் கடல்கொண்ட நாட்டிலே நிலைத்திருந்தகாலை இந்திய நாடு முழுவதும் தமிழ் மக்களே பரவியிருந்தனர். அவர்கள் பெருந் தலைவராகிய சிவனாரது ஆட்சிக்குள் பனிமலையும் அடங்கியிருந்த காலத்தே அவர் திருமணம் ஆண்டு நிகழ நேர்ந்தது. சிவனாரது முதல் அடியவராகிய அகத்தியமுனிவர் பனிமலையினின்று பிற

காலத்தே தென்புலம் சென்றாரென்றால் அவர் தமிழ்ப் பெருநாட்டின் வடகோடியிலிருந்து தென்பகுதிக்குச் சென்றாரென்றே கருத்தாதல் தெளிக. அவர் ஆரிய நாட்டிலிருந்து தென்தமிழ் நாட்டிற்கு வந்தாரென்று சொல்லுதல் வரலாற்றுத் தவறாகும். ஏனெனில் வடநாடு முழுவதும் தமிழ்மக்கள் ஆசிரியர் வருவதற்குமுன் பரவிப் பெருகி யிருந்தமையால் தமிழ் முனியாகிய அகத்தியர் வடபுலம் நின்று தென்புலஞ் சென்றகாலை வடநாடு ஆரிய நாடாக மாறவில்லை. பனிமலை அடிவாரமுதல் பெலுசித் தானம்வரை தமிழ்மக்கள் பரவி யிருந்தமையாற்றான் ஆரியமக்கள் வடமேற்கிலிருந்து இந்திய நாட்டினுட் புகுந்தகாலத்தில் அவருடைய இருக்கு வேதத்துள் தமிழ்க் கருத்துக்களும் சொற்றொடர்களும் புகுவன வாயின. ஆரியர் வடநாட்டிற் புகுவதற்கு முன்னேயே தென்தமிழ் நாட்டிலே மக்கள் உயர் நாகரிக முற்றுத் தமிழ் நான்மறையும் சிவனருள் நூல்களும் உடையராய்த் திகழ்ந்தனரென்றும், சிவனார் திருமணமும் மூவெயிலழி வும், சூரன் போரும் முடிவுற்றன வென்றும் அக் காலத்தை அடுத்தே சிவனார்பாலும் அவர்தம் புதல்வர் பாலும் அறநூல் கேட்டுப் புலமைசான்ற அகத்தியர் முத லாயினோர் முதற்கழகமாகிய தலைச்சங்கத்தை நிறுவின ரென்றுங் கருதுக. முதலூழிச் செய்தி இவ்வாறாக, இரண்டாவது ஊழியில் நிலைநாட்டப்பட்ட இடைச்சங்க காலத்தேதான் ஆரியர் தொடர்பு தமிழர்க்கு ஏற்பட்டது. அக்காலத்திருந்த அகத்தியர் தலைச்சங்க நிறுவிய அகத்

தியரேயாமாயின் அவர் பன்னெடுங்காலம் இருந்திருக்க வேண்டும். அவரல்லரெனின், அவர் குடும்பத்தின் வழி வந்த பிறிதோ ரகத்தியரே இராமாயண காலத்தில் சிறப் பொடு திகழ்ந்திருக்கலாம். இவரைப் பற்றியே கும்பத் திற் பிறந்தமை முதலான பல்வகை ஆரியக் கதைகள் ஏற்பட்டன.

இடைச்சங்க காலத்திலே ஆரியத்தினுடைய கருத் துக்களும் சொற்களும் சிறுபான்மை தமிழ்நாட்டிற் பர வின. தமிழர் மணத்தைக் கந்தருவ மணத்தோடு ஒப்பிட் டுக் கூறும் வழக்கமும் வெவ்வேறு வகைத்தாய மணச் சடங்குகள் நிகழ்த்தும் வழக்கமும் ஆரியக்கலப்பின் பயன்களா மென்க. அகநானூற்றுள் அகூ-ம் பாட்டிற் கூறிய மணநிகழ்ச்சி முறையும் உடன் போக்கிற்குமுன் தலைவற்குத் தோழி கூறும் அறவுரையும் தமிழர்க்கே உரியன. அவைபோல்வன ஆரியக் கலப்பால் வந்தன வல்ல. எண்வகை மணம் ஆரியர்க்குரியன. ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை என்னும் மூவகையுமே தமிழர்க் குள் வழங்கின. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகைப் பகுப்பு ஆரிய வருண முறையைப் பின்பற்றித் தமிழகத்தில் அமைத்துக் கொள்ளப்பட் டதோ என்பது ஓர் ஐயப்பாடு. ஆனால் ஆரிய வகுப்பு முறையில் நான்காவதாய் நின்றவர்களும் தமிழ்நாட்டு வேளாளர்களும் ஒத்த தொழிலுடைய ரல்லர் என்பது யாவர்க்கும் இனிது விளங்கும். வேளாண் மாந்தர் உழு துண்பாரே யன்றிச் ‘ சூத்திரர் ’ போலத் தொழுதுண்

பாரல்லர் என்று ஆசிரியர் தொல்காப்பியனாரே அறுதியிட்டுரைத்தனர். இக்கருத்துப் பற்றியே பிற்காலத்தில் வேளாளரை வைசியருள் அடக்கிப் பேசும் வழக்கம் ஏற்பட்டது. இதுவும் ஒருவாறு தவறுடைத்தே. என்னை? ஆரிய வகுப்பு முறையைத் தமிழ்நாட்டிற்கு உரியதொன்றென்று இது தோற்றுவித்தலின் என்க. தமிழ்நாட்டிலே மருதநிலத் தலைவராகிய வேளாளப் பெருமரபினரின் உட்பகுதியாராகவே அந்தணர், அரசர், வணிகர் என்னும் மூவேறு பிரிவினரும் அடங்குவர். தொழில்பற்றி வகுப்புற்றகாலை, எஞ்சிய அம்மரபினரே வேளாளரென வாளா கூறப்பட்டன ரென்றறிக.

இப்பொழுதுள்ள வடமொழி நான்மறைகளை வியாசர் வகுத்தமைப்பதற்கு முன்னேயே தொல்காப்பியம் முழுமுதல் நூலாக இலங்கிற்றென்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிர உரையில் கூறிப் போந்தனர். முதனூல் இறைவன் கண்ட தென்ற கருத்தும், நிலையிலா மெய்க்கும் அதனுள் நிலவும் உயிர்க்கும்வேறாக அவ்வவற்றிற்குச் சார்பாய்த் தோன்றாத் துணையாய் எஞ்ஞான்றும் இன்பம் ஈயவல்ல தனிமுதற் கடவுள் ஒருவன் உளன் என்ற உயரிய கொள்கையும், அவனது திருவருளைத் 'தாய்' என வழிபடும் முறையும், ஓங்கார முதுமொழியும், வித்தெழுத்து மறைமொழியும் பிறவும் பண்டைத் தமிழ்ப் பனுவல்களினின்று ஆரிய மறைகளுட்புகுந்த அரும் பொருள்களாமென் றுணர்க. இவைகளே சுவேதாசுவதரம் முதலிய சைவ உபநிடதங்களிலும் சைவசித்

தாந்த ஆகமங்களிலும் தமிழ்நூல்கள் மறைபட்ட பிற் காலத்தே பெருமரபிற்றாய்ப் பயின்றுவந்தமையான் அவற்றைத் தமிழ்ச் சைவநன்மக்கள் தம்மநூலென்று போற்றிப் பாராட்டிச் சீராட்டினரென்று தெளிக.

---

## அதிகாரம் ச.

---

# கடைச்சங்ககாலம்

## மூவேந்தரதுகோடிவழி

### பாண்டியர்மரபு

**க**டைச்சங்கப் புலவர்கள் வரலாற்றை ஆராய்வதற்கு முன் கடைச்சங்க காலத்திருந்த மூவேந்தரது மரபு அட்டவணை தெரிந்து கொள்ளுதல் இன்றியமையாதது. பாண்டிய மன்னருள் கடைச்சங்கம் நிறுவிய **முடத் திருமாறன்** காலத்திற்குப் பின், **முதுகுடுமிப் பெருவழுதி** அரசாண்டதாகத் தெரியவருகிறது. முதுகுடுமியும் திருவிளையாடற் புராணத்துட் கூறிய மலயத்துவச பாண்டியனும் ஒருவரே யென்று கொள்ள இடமுண்டு. முதுகுடுமி வேள்விகள் பல செய்ததாகப் புறநானூற்றுட் கேட்கப் படுகின்றது. அவ்வாறே, மலயத்துவசனும் வேள்வி பல இயற்றியதாகத் **திருவிளையாடற் புராணம்** கூறும். முதுகுடுமி என்ற சொற்றொடர்க்கு ஈடாக மலயத்துவசன் என்ற

சொல்லை எக்கருத்துப்பற்றிப் புராண நூலார் அமைத் தனரோ தெரியவில்லை. மலையமாகிய பொதிய மலையில் கொடியை நாட்டினவன் என்று பொருள் கொண்டால் முதுகுடுமி என்ற சொற்றொடர் பொதிய மலையின் உச்சி யைக் குறிப்பதாகக் கருதலாம். தமிழ்ப் பெயர்ச்சொற் களை நேரில் மொழிபெயர்க்காது தமக்குத் தோன்றிய பெயர்களையே அவற்றிற்கு ஈடாக வழங்குதல் வட மொழிப் புராணக் காரர்களது தப்பு வழக்கென்பது திரு விளையாடற் புராணத்துள் பாண்டியர்களுக்கு இட்டு வழங்கும் பெயர்களால் இனிதறியப்படும். தென்னாட்டில் மலையத்துவசனது அருமை மகளாகிய தடாதகைப் பிராட்டியார் அரசாண்ட செய்தி, வடநாட்டிலே சந்திர குப்தர் அரசவையைச் சிறப்பித்த கிரேக்க தூதராகிய செலூக்கசு என்பவர் ஏறக்குறைய கி. மு. ௩௧௨-ல் எழு திய குறிப்புக்களுட் காணப்படுகின்றது. ஆகையால் மலை யத்துவசன் காலம் கி. மு. நான்காம் நூற்றாண்டென்று கருத இடமுண்டு. *

முதுகுடுமிப் பெருவழுதி கடல்கோட்கு முன் இருந் தான் என்பாருமுளர். சங்கப் புலவர் நெட்டிமையார் தலைச் சங்ககாலத்திலிருந்த பஃறுளியாற்றினைத் தாம் முது குடுமியைப்பற்றிப் பாடிய பாட்டினிற் கூறுகின்றார். சிலர் வேறொரு பஃறுளி முதுகுடுமிகாலத்து இருந்திருக்க

* See also Mr. V. A. Smith's History of India, p. 451.

லாம் என்பர். பெருமைபற்றி மறைந்தொழிந்த யாற்றினை யும் புலவர் கூறுதல் கூடும். நெட்டிமையார்பாடலுள்,

‘ யூபம்நட்ட வியன்களம் பலகொல் ’புறம், கடு.

என்னும் அடியில் ‘யூபம்’ என்ற சொல் வடமொழியா கும். தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தில் ‘ ஆவோ டல் லது யகர முதலாது ’’ என்றமையால் யகர ஊகாரத்தை முதலினுடைய யூபம் என்னும் சொல் செய்யுளில் வழங் கும் மரபு தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டதாகல் வேண் டும். இதனாலும் முதுகுடுமி பிற்காலத்தவனே என்பது பெறப்படும். கடல்சுவற வேல் விட்டதாகத் திருவிளை யாடற் புராணத்துள் சிறப்பிக்கப்படும் உக்கிரகுமார பாண்டியன் கதையும் சிலப்பதிகாரத்துள் குறிக்கப்பட்ட வடிவேலெறிந்த கதையும் ஒத்திருந்தாலும் மலையத்துவச னுக்குப் பின்வந்த உக்கிரகுமாரன் சிலப்பதிகாரக் கதைக்கு உரியவனாகத் தெரியவில்லை

“ வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள ’’

என்ற சிலப்பதிகார அடிகளால் பஃறுளியாற்றைக் கடல் கொள்வதற்கு முன்னேயே வடிவேலெறிந்த செய்தி நிகழ்ந்ததாகத் தெரிகின்றது. முற்காலத்து வரலாறுகளைப் பிற்காலத்தே நடந்தனவாகக் கூறுதல் புராணத்தவறுக ளுள் ஒன்று.

முதுகுடுமிப் பெருவழுதிக்குப்பின்சில தலைமுறைகள் கழித்து ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்பவன்

அரசாண்டதாகத் தெரிகின்றது. பொதுயாருகுத தலை யைப் பரணராலும் மாமூலராலும் பாடப்பெற்ற திதியன் என்பவனை இப்பாண்டியன் பாடியுள்ளான். ஆதலால் இப் பாண்டியன் பரணர் காலத்து இருந்தவன் என்பது தெரி கிறது. இவனுக்குப் பின் **கருங்கை ஒள்வாட் பெரும் பெயர் வழுதி** என்பவன் கரிகால் வளவனுடைய அம்மா னாகிய இரும்பிடர்த் தலையார் என்பவரால் பாடப் பெற்றவன்.

குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திரு மாவளவன் என்பவனைக் கரிகால் வளவனாகக் கருதுமிடத்து அவனோ டொத்த காலத்துப் பாண்டியன் வெள்ளியம்பலத்தில் துஞ்சிய பெருவழுதியாவன். பெருந்திரு மாவளவனையும் இப்பெரு வழுதியையும் ஒரே காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்பவர் பாடியுள்ளார்.

இவனுக்குப் பின்னோ முன்னோ **நம்பிநெடுஞ்செழி யன்** என்பவன் அரசாண்டிருக்க வேண்டும். கரிகால் வள வன் வென்ற பாண்டியன் பெயர் தெளிவாக விளங்க வில்லை. நம்பிநெடுஞ் செழியனுக்குப் பின் **ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன்** அரசாண்டான். இவன் காலத் தில் கோவலன் கொலை மதுரையில் நிகழ்ந்ததாகத் தெரி கிறது. இவன் மகன் **வெற்றிவேற் செழியன்** எனப்படு வன். இவனே மணிமேகலை ஆசிரியராகிய சீத்தலைச் சாத்தனாரால் புறத்திற் பாடப்பெற்ற சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் போலும். இவனுக்குப் பின்

---

புறம், ௫௮.

**கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதியும்** அவனுக்குப் பின் **இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனும்** பாண்டிய மன்னராக வீற்றிருந்தனர். பின்னர்க் **கீரஞ்சாத்தன்** என்பவனும் அவனுக்குப் பின் **அறிவுடை நம்பியும்** புலவரால் பாடப் பெற்றனர். இலவந்திகை நன்மாறனைப் பாடிய ஆவூர் மூலங்கிழாரே கீரஞ்சாத்தனையும் பாடியுள்ளார். அறிவுடை நம்பி, இளஞ்சேர விரும்பொறையை வென்ற கோப்பெருஞ் சோழனின் நண்பன். இவனுக்குப் பின்னர்த் **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்** பெரும்புகழ் படைத்தனன். இவனைப் பசும்பூட் பாண்டியனெனவும் சொல்வர். பாண்டியன் நெடுஞ்செழியன் என்பானும் இவனே போலும். கடைச் சங்கத்து முடிவில் அரசாண்ட மன்னன் **உக்கிரப் பெரு வழுதி** என்பான். கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியின் வேறனவன் என்பர். உக்கிரப் பெரு வழுதி பாடல் **நற்றிணையுட்** காணப்படுதலால், நற்றிணை தொகுத்த **பன்னாடுதந்த மாறன் வழுதி** உக்கிரப் பெருவழுதிக்குப் பின் ஆண்டிருத்தல் வேண்டும். **கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி** என்பவன் எக்காலத்தவன் என்பது விளங்கவில்லை.

வானநூல் வல்லார் சிலப்பதிகாரத்துள் மதுரை தீப்பற்றிய காலமாகக் குறிக்கப்பட்ட நாளினையும் கோளினையும் ஆராய்ச்சிசெய்து அக்காலம் 144 A. D. என்று தீர்மானித் திருக்கிறார்கள். அது ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன் துஞ்சிய காலமாகும். முடத்திருமாறன் காலமும் முதுகுடுமிப் பெருவழுதியின் காலமும் அதற்கு

நெடுநாட்கு முற்பட்டன என்று கொள்ள இடமுண்டு. ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன் காலத்திற்கு நாலைந்து தலைமுறைக்கு முன் ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் காலமாக இருக்கலாம். பாண்டியன் ஒருவன் மேலை நாட்டு உரோமாபுரி மன்னராகிய அகத்தசுசீசர் என்பவருக்குக் கி. மு. ருகூ-ல் இருமுறை தூது அனுப்பியதாகத் தெரிகிறது. இதனால் கி. மு. முதலாண்டு தொடங்கித் தொடர்ச்சியாக ஆண்ட பாண்டிய மன்னர் காலத்தே கடைச்சங்கம் சிறப்புற் றோங்கியதாகக் கொள்ளலாம். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் காலத்திற்குப் பின் ஏறக்குறைய பாண்டியர்கள் பதின்மர் கடைச்சங்க முடிவுகாலம் வரை அரசாண்டிருந்ததாகத் தெரிகின்றது. ஏறக்குறைய கி. பி. உரு0 - வது ஆண்டு கடைச்சங்கத்தின் இறுதிக்கால எல்லையாக வைத்துக் கொள்ளலாம். கடைச்சங்க கால எல்லை கி. பி. உஉ0 என்று அறிஞர் சிலர் கருதுகின்றார்கள். ஆகவே கி. மு. முதல் நூற்றாண்டு முதல் கி. பி. மூன்றாவது நூற்றாண்டின் நடுப்பகுதிவரை உள்ள காலத்திலேயே நமக்கு இப்பொழுது விளங்கும் கடைச்சங்கப் புலவருட் பெரும்பாலாரும் அவர்களுக்கு உதவியாயிருந்த மன்னரும் திகழ்ந்தனர் என்பது தெளிவு.

## சோழர் மரபு.

தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன், முசுகுந்தன், காந்தமன் முதலிய மன்னர்கள் கடைச்சங்கத்தார் காலத்திற்கு முன்னேயே அரசாண்டவர்கள். சோழமன்னர் இருபகுதிப் பட்டு உறையூரில் ஒரு

பகுதியாரும், குடவாயில், காவிரிப்பூம்பட்டினம் என்னுமிடங்களில் மற்றொரு பகுதியாரும் அரசாண்டனர். உறையூரில் தித்தன் என்பவன் அரசாண்ட காலத்தில் குடவாயிலிலிருந்த பெரும்பூட்சென்னி கொண்கானத்து நன்னன் என்பவனையும் சேரமன்னனுடைய படைத்தலைவர்களாகிய எற்றை, கணையன் முதலியோரையும் கழுமலப்போரில் வென்று கழுமலத்தைக் கைப்பற்றிக் கொண்டான். பெரும்பூட் சென்னிக்குப்பின் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி சேரமானுடைய பாமளூரைக் கைப்பற்றிக் கொண்டவன். ஆதலால் பாமளூர் எறிந்த இளஞ்சேட் சென்னி என்றும் அவனைக் கூறுவர். இளம்பெருஞ் சென்னி என்றும், இவன் அகத்துள் வழங்கப்படுகிறான். இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி யென்பவன் இவனோ அல்லது உறையூரில் ஆண்ட நலங்கிள்ளியோ தெரியவில்லை. நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னிக்குப்பின் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி காவிரிப்பூம் பட்டினத்தில் அரசாண்டினன். இவனது புதல்வனே கரிகால் வளவ னென்பான். கரிகால் வளவனது அவைக்கண்ணே மாதவி தனது நடனத்தை அரங்கேற்றியதாகத் தெரிகிறது. கரிகால் வளவனுக்குப் பின் கிள்ளிவளவன் அரசாண்டனன். இவன் குராப்பள்ளியில் துஞ்சினன் போலும் இவனுக்குப் பின் நெடுமுடிக் கிள்ளி யென்பவன் காவிரிப்பூம் பட்டினத்தில் அரசாண்ட காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல் கொண்டதாகத் தெரிகிறது.

இச்சோழமன்னர் மரபின் ஒரு கிளையார் காஞ்சி நக ரத்தில் அரசியற்றினர். காஞ்சிபுரத்தில் தொடுகழ கிள்ளி, துணையிளங்கிள்ளி என்பவர்கள் அரசாண்டபின் தொண்டமான் இளந்திரையன் என்பான் அரசு வீற் றிருந்ததாகக் கருத இடமுண்டு. இவன் கிள்ளி வளவ னுக்கும் நாககன்னிகையாகிய பீலிவளை என்பவளுக்குப் பிறந்தவனென்று கூறுவர். இவன் அதிகமான் நெடுமா னஞ்சியின் காலத்தவன். இவன் பரம்பரை முற்றியபின் காஞ்சியில் பல்லவ அரசர் ஆண்டன ரென்ப.

காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல் கொண்டபின் நெடுமுடிக்கிள்ளி அல்லது நெடுங்கிள்ளி என்பவன் உறை யூரில் அரசு செய்த நலங்கிள்ளியின் கோட்டைகளைக் கைப்பற்றிக் கொண்டனன். நலங்கிள்ளியும் இவனும் புலவர் சிலரது கருத்துக்கிணங்கிப் போர்புரிவதைத் தவிர்த்தனர். நலங்கிள்ளிக்கு முன்னும் தித்தனுக்குப் பின்னும் உறையூரில் ஆமூர் மல்லனொடு பொருத போர் வைக் கோப்பெரு நற்கிள்ளியும், குடக்கோ நெடுஞ்சேர லாதனொடு போர் செய்து இறந்த வேற்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியும், அந்துவஞ்சேரல் இரும்பொறை யொடு பகைமைகொண்ட முடத்தலைக் கோப்பெரு நற் கிள்ளி யென்பானும் அரசாண்டனர். இவனே சிலப்பதி கார காலத்தில் உறையூரிலிருந்த பெருநற்கிள்ளி போலும். நலங்கிள்ளிக்குப் பின் நெடுங்கிள்ளியும் அவ னுக்குப் பின் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனும் அரசாண்டதாகத் தெரிய வருகின்றது. இவனுக்குப் பின் கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையாரின் நண்பராக

வீற்றிருந்தான். கலித்தொகையில் முல்லைக்கலி பாடிய சோழன் நல்லுருத்திரன் என்பவன் கோப்பெருஞ் சோழனுக்கு முன்னோ பின்னோ அரசாண்டிருத்தல் கூடும். தலையாலங் கானத்துச் செருவில் வெல்லப்பட்ட சோழ மன்னன் செம்பியனென்பவன். உக்கிரப் பெருவழுதி காலத்தில் அவன் நண்பரா யிருந்த சோழ மன்னன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி யாவன். இவனுக் குப் பின் சோழன் செங்கணான் சிறப்போடு அரசாண்ட தாகத் தெரிகிறது.

## சேரர்மரபு.

பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்பவன் பாரதப்போர் நடந்த காலத்தே அரசியற்றினன் என்பது புறநானூற்று இரண்டாவது பாட்டினால் தெளியப்படும். குடநாட்டை ஆண்ட குட்டுவன் சேரலன் என்பவனை நற் றிணையுள் முடத்திருமாறன் பாடியதாகத் தெரிவதால் இருவரும் ஒரே காலத்தவ ரென்பது தெளிவு. இவர் கட்கு நெடுங்காலத்திற்குப் பின் கி. மு. முதல் அல்லது இரண்டாவது நூற்றாண்டில் உதியஞ்சேரல் என்றும், வானவரம்பன் என்னும் பெயருடைய ஒரு மன்னன் மிகுந்த புகழோடு விளங்கியதாகத் தெரிகிறது. இவனே பதிற்றுப்பத்தில் முதற்பத்திற்குத் தலைவன் போலும். இவனைப் பெருஞ்சோற்று உதியன் என்று கொள்ளுதல் தவறாகும். மோரியர் வடநாட்டில் அரசாண்ட காலம் கி. மு. ௩உக-முதல் கி. பி. கஅச-வரை உள்ள காலம். அவர்கள் தென்னாட்டிற் படையெடுத்து வந்தகாலம்

கி. மு. இரண்டாவது நூற்றாண்டாக இருக்கலாம். அக் காலத்திலேயே வானவரம்பன் அரசாண்டானென்று கொள்ள இடமுண்டு. மோரியரைப் பாடிய மாமூலனார் அவனையும் பாடியுள்ளார்.

வானவரம்பன் புதல்வர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், பல்யானை செல்கெழு குட்டுவனுமாவர். குடநாட்டையாளும் அரசன் குட்டுவனெனப் படுவன். வானவரம்பன் புதல்வரிருவரும் பதிற்றுப் பத்தில் இரண்டாம் பத்திற்கும் மூன்றாம் பத்திற்கும் தலைவராவர். நெடுஞ்சேரலாதன் புதல்வன் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் பதிற்றுப்பத்தில் நான்காம் பத்திற்குத் தலைவன். இவனுக்குப்பின் குடக்கோநெடுஞ்சேரலாதன் என்னும் அரசன் அரசுபுரிந்தான். இவன் வேல்பல் தடக்கைப் பெருநற் கிள்ளியோடு போர் செய்து இறந்தான். அவனோடு ஒத்த காலத்திலோ பின்னோ பெருஞ் சேரலாதன் என்னும் அரசன் மிகப் புகழோடு வீற்றிருந்து வடநாடு சென்று ஆரியரை வென்று அவர்களரசரைச் சிறைசெய்து இமயமலையில் தனது வில்லடையாளத்தைக் குறித்தான் என்பது அகநானூற்றால் விளங்குகின்றது. அவன் கரிகால் வளவனோடு பொருது தோல்வியுற்று வடக்கிருந்தான் என்பது தெரியவருகிறது. இவனுக்குப்பின் குடக்கோ நெடுஞ்சேரலாதன் புதல்வனாகிய செங்குட்டுவன் பதிற்றுப்பத்தில் ஐந்தாவது பத்திற்குத் தலைவன். இவனே கண்ணகிக்குக் கோயில் கட்டினவன். இவன் புதல்வன் குட்டுவன் சேரலையும் ஐந்தாம்பத்திற் பரணர் பாடியுள்ளார்.

சேர அரசர் மூன்று பகுதியினராவர். தொண்டி யென்னும் மேலைக் கடற்கரைப் பட்டினத்தில் ஒரு கிளை யும், குடநாட்டில் ஒரு கிளையும், வஞ்சியில் ஒரு கிளையும் அரசாண்டு வந்ததாகத் தெரிகிறது. இவர்களுள் ஒவ்வொருகிளையார் ஒவ்வொரு காலத்திலே சேரநாடு முழுவதையும் அரசாண்டதாகத் தெரிகின்றது. இம்மூன்று குடும்பங்களுக்கும் மகட்கொடை முதலிய வற்றால் உறவு ஏற்பட் டிருந்ததாகத் தெரிகிறது. தொண்டி நகரத்தின் கண் ஆண்ட மன்னன் கடுங்கோ என்னும் பட்டத்தை யுடையவனாக இருந்தான். செங்குட்டுவனைப் பாடிய பரணரே மாந்தரன் பொறையன் கடுங்கோ என்பவனை அகத்தில் பாடியுள்ளார். பாலை பாடிய கடுங்கோ என்பவரின் செய்யுட்கள் அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, நற்றிணை என்பவற்றுள் காணப்படுகின்றன. அவருடைய தம்பி இளங்கடுங்கோ என்பவர் மருதம்பாடுதலில் வல்லவர்.

செங்குட்டுவனுக்குப்பின் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்பவன் பதிற்றுப்பத்தில் ஆறும் பத்திற்குத் தலைவன். இவன் காலத்திற்கு முன்னோ பின்னோ அந்துவன் சேரல் இரும்பொறை என்னும் பெயருடைய ஒருவன் குடநாட்டினில் ஆண்டு முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளியோடு பகைமை கொண்டிருந்ததாகத் தெரிகின்றது. சேரமான் குட்டுவன் கோதை என்பவன் இவனுக்குப்பின் இருந்தவனாய்ப் பெருந்திருமாவளவனைப் பாடிய எரிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனாரால் பாடப் பெற்றவன்

பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்திற்குத் தலைவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்பவன். இவன் தொண்டி நகர மன்னர் மரபினைச் சார்ந்தவனாய்ச் சேரநாடு முழுவதும் ஆண்ட பெருமை படைத்தவனாவன். சிக்கற்பள்ளியிற் றுஞ்சிய இப்பெயருடையான் இவன்தானோ இவனின் வேறோ தெரியவில்லை இவன் காலத்திற்குப் பின் இரும்பொறை என்ற பட்டமுடையவர்கள் பெரும் புகழோடு சேர நாட்டினை ஆண்டவராவர். அவர் குடக மன்னர் மரபினைச் சார்ந்தவரென்று கருத இடமுண்டு. பசும்பூட் பொறைய னென்பான் கொல்லி மலைக்குத் தலைவனாய் ஔவையாரால் அகம் ௩0௩-ல் பாடப்பெற்றவன். கருவூரேறிய ஒள்வாட்கோப் பெருஞ் சேரலிரும்பொறை சேர நாடு முழுவதும் இப்பட்டத்தோடு முதன் முதல் அரசாண்டவன் போலும். இவனுக்குப் பின் தகடூரெறிந்த பெருஞ் சேரலிரும்பொறை யென்பவன் அரசாண்டனன். அவன் பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்திற்குத் தலைவன். அவன் செல்வக் கடுங்கோவாழி யாதன் புதல்வன். இவனுக்குப் பின் குடக்கோச் சேர லென்னும் அரசன் பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்திற்குத் தலைவன். அவனே இளஞ்சேரல் இரும்பொறை எனப்படுவன். அவன் குட்டுவன் இரும்பொறையின் புதல்வன். இவன் கோப்பெருஞ் சோழன் காலத்தவன். பத்தாம் பத்திற்குத் தலைவன் யாரென்று தெரியவில்லை. மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பவன் பத்தாம் பத்திற்குத்

தலைவனு யிருத்தல்கூடும். யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்பவன் இவனுக்கு முன்னோ பின்னோ அரசாண்டவன். அவன் தலையாலங்கானத்து நெடுஞ் செழியனோடும் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியோடும் போர்புரிந்தவன். இவனே ஐங்குறு நூறு தொகுப்பித்தவன். சேரமான்மாவெண்கோ வென்பவன் இவனுக்குப்பின் ஆண்டவன். அவன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் நண்பன். சேரமான் வஞ்சன் என்பவனும் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை என்பவனும் இவனுக்குப்பின் அரசாண் டிருக்கலாம். சேரமான் கோக்கோதை மாறன் என்பவன் பொய்கையா ரால் பாடப்பெற்றவ னாதலின், சோழன் செங்கணான் காலத்தவனாதல் வேண்டும். நக்கீரனால் அகம் நூசசு-ல் பாடப்பட்ட கோதை மாறன் வேறொருவனா யிருத்தல் வேண்டும். கணைக்காலிரும்பொறை யென்பவன் இரும் பொறை மரபைச் சார்ந்தவனாய்ச் செங்கணானால் சிறை செய்யப் பட்டவன். இவன் காலத்திற்கு முன்பே கடைச் சங்கம் முடிவுபெற்றுவிட்டது.

## குறுநிலமன்னர் வரலாறு.

மூவேந்தர் காலத்திலும் அவ்வேந்தற்குத் துணையா யுந் தனியாயும் பல பல படைத்தலைவரும் குறுநில மன்னரும் திகழ்ந்து புலவரால் பாடப்பெற்றனர். தொண்டை நாட்டிலுள்ள ஆமூர் என்னுமிடத்தில் கொடுமுடி என் னும் வீரன் யானைப்படையுடன் வந்த சேரமன்னனை வென்று தன் ஊரைக்காத்தனனென்பது அகநானூற்

ரூல் விளங்குகிறது. இவ்வாழூரிலிருந்த மல்லன் ஒருவன் சோழன் தித்தனது புதல்வனாகிய போர்வைக் கோப் பெருநற் கிள்ளியால் வென்று கொல்லப்பட்டானென்பது புறநானூற்றால் தெரிகின்றது. கொடுமுடியை எதிர்த்த சேரன் யானைப் படையுடன் சென்றமையால் அவன் பல்யானைசெல்கெழு குட்டுவனாக இருத்தல் வேண்டும். அச்சேரன் காலத்திலேயே நன்னன் என்னும் ஏழின் மலைத்தலைவனும் சேரன் படைத்தலைவர்களாகிய அத்தி, ஏற்றை, கங்கன், கணையன், கட்டி என்பவர்களும் பெரும் பூட் சென்னியை எதிர்த்துக் கழுமலத்தில் போர்புரிந் தார்கள். பெரும்பூட் சென்னியின் படைத்தலைவனாகிய பழையனை அவர்கள் கொன்று விட்டபின் பெரும்பூட் சென்னி மிக்க சினத்தோடு கடும்போர் புரிந்து சேரன் படைத் தலைவனை கணையனைப்பிடித்துச் சிறைசெய்த தோடு கழுமலத்தையுங் கைப்பற்றினன். கட்டி என்ப வன் தித்தனை எதிர்க்கவந்து அவன் கோட்டையில் முழக்கிய வீரப்பாட்டைக்கேட்டு அஞ்சி ஓடினன். கழு மலப் போரைப் பாடினவர் குடவாயிற்கீரத்தனார். தித்த னைப் பரணர் பாடியுள்ளார். அவன் மகள் ஐயை கற்பிற் சிறந்தவளென்று பெயர் பெற்றவள். தித்தன் காலமே ஓல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலமாக இருக்கலாம்.

களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல் காலத்திற்கு முன்னேயே ஆட்சி தொடங்கப் பெற்ற நன்னன் பெருந்துறைச் செருவில் இவனால் வென்றொழிக்கப் பட்டான்.

அதிகன் என்னும் பெயரையுடைய ஒரு குறுநில மன்னனது குடும்பம் நெடுநாளாகச் சிறப்பொடு திகழ்ந்தது. குதிரைமலை அக்குடும்பத்தார்க்குரியதாய் இருந்தது. எழினி என்றும் அக்குடும்பத்தார்க்குப் பெயருண்டு. ஔவையாராற் பாடப்பெற்ற அதிகமான் நெடுமானஞ்சி இக்குடும்பத்தைச் சார்ந்தவன். அதிகமானுக்கு முற்பட்ட காலத்தில் இக்குடும்பத்தைச்சார்ந்த எழினி என்பவன் அவன் காலத்துச் சோழ மன்னனது சொற் கேளாமையால் அச்சோழனது படைத்தலைவனாகிய மத்தி என்பவன் அவ்வெழினியினுடைய பல்லைப் பிடுங்கித் தன் வெண்மணி வாயிற் கதவிற் பதித்தானென்று அகநானூற்றின் உ௧௧, ௩௨௫-ம் பாட்டுக்களால் அறிகிறோம். நன்னன் காலத்திலேயே பிண்டனென்னும் வீரனொருவன் அவனால் வெல்லப்பட்டான். நன்னனது படைத்தலைவனாகிய மிஞிலி என்பவன் ஆய் எயினன் என்னும் வீரனைப் பாழி என்னுமிடத்திற் போரிற் கொன்றான். ஆய் அண்டிரன் என்பவன் கவிரமலைக்குத் தலைவனாய்க் கடையெழுவள்ளல்களுள் ஒருவனாய்ப் பரணராற் பாடப்பெற்றவன். புறநானூற்றுட் குறிக்கப்பட்ட மோசிபாடிய ஆய் என்பவன் இவனுக்குப் பின் வந்தவன் போலும். பொதியிற்குத் தலைவனாய்ப் பரணராற் பாடப்பெற்ற திதியன் இவன் காலத்தவனே.

ஆரியர் பலகாலங்களில் தமிழ்நாட்டிற் புகுந்து போரில் தோல்வியுற்றதாகத் தெரிகின்றது. பரணர் காலத்திலும் அவர்கள் படையெடுத்து வந்தனர் என்பது அகநானூற்றால் விளங்குகின்றது. பாணனென்னும்

வடநாட்டு வீரன் சேரமன்னன் படைத்தலைவனாகி கட்டி என்பவனோடு சேர்ந்து தித்தனோடு போர்புரிய முயன்றானென்றும், அவன் ஆரியநாட்டு மல்லனாகிய ஆரியப் பொருநனால் தோல்வியடைந்தானென்றும் பரணர் பாட்டுக்களால் விளங்குகின்றது. கோசர் என்பார் துளுவநாட்டிற் படையெடுத்து வந்த குழுவினராவர் இவர்களைப் பொலம்பூட் கிள்ளி யென்னுஞ் சோழன் போரில் வென்றனன். இவர்கள் நன்னன் காலத்திற்குப் பின் தென்னாட்டிற் படையெடுத்து வந்தனர். அவர்கள் அன்னிமிஞிலி யென்னும் பெண்மணியின் தந்தையினது கண்ணைக் களைந்ததற்காக அவள் மிகுந்த சினங்கொண்டு திதியனையும் குறும்பியன் என்னுங் குறுநில மன்னனையும் ஏவிக் கோசரைக் கொல்லுவித்துப் பேருவகை யெய்தின ளென்பது பரணர் பாடிய கசுசு-ம் அகப் பாட்டில் விளங்குகின்றது. அஃதை யென்னுங் கொடையாளி கோசரால் ஒருகால் காக்கப்பட்டா னென்பது அகம் ககரு-ல் விளங்குகின்றது. அஃதை என்பவன் கபிலராற் பாடப் பெற்றவன். அகுதை ஒரு சோழன் மகள். அவளைப் பாடியவர் மருதம் பாடிய இளங்கடுங்கோ.

கழுவுள் என்னும் இடையர் தலைவனும் பரணர் காலத்தவனே. அவனது ஊரை வேளிர் பலர் ஒருங்கு சேர்ந்து அழித்தனரென்று பரணர் கூறியுள்ளார். வல்லங்கிழவோ னென்னும் சோழர் மரபினன் ஒருவனையும் பரணர் பாடியுள்ளார். தழும்பன் என்பவனும் அவராற் பாடப்பெற்றவனே. மோரியர், வடுகர் என்னும் வட

நாட்டு வீரர்கள் மாமூலனார், பரணர் என்பாரது காலத்திலே தென்னாட்டிற் புகுந்தனராவர். செங்குட்டுவன், கரிகால்வளவன் என்பாருடைய காலம்வரை பரணர் வாழ்ந்தனராதலின், மேற்கூறிய குறுநில மன்னரும் படையெடுத்து வந்த குழுவினரும் செங்குட்டுவன் காலத்திற்கு முற்பட்டவராவர். நெடுவேளாவி என்பவன் பேகன் மரபைச் சார்ந்தவனும் அவனுக்கு முற்பட்டவனுமாவன். இவன் மாமூலனாராற் பாடப்பெற்றவன். இவன் மறவரென்னும் வீரர் கூட்டத்தை வென்றவன். அவர்கள் கோடைமலைக் குறவர் தலைவன் புல்லி யென்னும் வேங்கட மன்னனாலும் அடக்கப்பட்டார்கள். *

இனிச் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடிய கபிலர் காலத்திலே பாரி, காரி என்னும் வள்ளல்கள் திகழ்ந்தனர். இவர்கள் கபிலராற் பாடப்பெற்றவர்கள். காரியொடு பகைமை கொண்ட வள்ளல் ஓரி என்பவன். எவ்வி என்பவனுங் கபிலராற் பாடப் பெற்றவனே. எவ்வியின் குடும்பமானது நீழலென்னும் ஊரில் நெடுநாளாகத் தழைத்தோங்கி யிருந்தது. பேகன் என்பவன் பரணராலுங் கபிலராலும் பாடப் பட்டுள்ளான். இருங்கோவேள், விச்சிக்கோ வென்னுங் குறுநில மன்னரும் பாரி மகளிரை மணக்கும்படி கபிலரால் வேண்டப்பட்டவர்களே. ஈண்டுக் கூறிய எழுவருங் கடையெழு வள்ளல்களெனப் படுவார்கள்.

நள்ளி யென்பவன் கடையெழு வள்ளல்களுக்குட் பிற்பட்டோனாவன். நப்பசலையாரால் பாடப்பெற்ற ஔவியனும் இவன் காலத்தன் போலும்.

இனிப் பெருஞ் சேரல் இரும்பொறையின் காலத்திலே அதிகமான் நெடுமானஞ்சி, மோசிபாடிய ஆய், பிட்டங் கொற்றன், மலையமான், சோழிய ஏனாதி திருக்கண்ணன், நாஞ்சில் வள்ளுவன், மோசிகிரனாராற் பாடப்பட்ட கொண்கானன்கிழான் என்னுங் குறுநில மன்னர்கள் சிறப்பொடு திகழ்ந்தனர்.

சோழிய ஏனாதி திருக்குட்டுவன், ஏனாதி திருக்கள்ளி, தோயன்மாறன், ஒல்லையூர் கிழான்மகன் பெருஞ்சாத்தன் என்பவர்கள் பெருந்திருமா வளவனைப் பாடிய எரிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனாராற் பாடப்பட்டமையின், பெருஞ்சேரல் இரும்பொறை காலத்துக்கு முற்பட்டோராவர்.

அவ்வாறே, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் நண்பனாகிய சிறுகுடி கிழான் பண்ணனும், அவனைப் பாடிய ஐயூர் முடவனாராற் பாடப்பெற்ற தாமான் தோன்றிக்கோனும், மோரியர் வந்தகாலை மோகூரிலிருந்த பழையனும், ஆவூர் மூலங்கிழாராற் பாடப்பெற்ற மல்லிகிழான் காரியாதியும் பெருஞ் சேரல் காலத்துக்கு முற்பட்டோராவர்.

பெருஞ்சேரல் காலத்துக்குப் பின் மிகச் சிறப்புற்று விளங்கின் குறுநில மன்னன் குமணன் என்பவன். அவன் முதிரமலைக்குத் தலைவன். பெருஞ் சித்திரனாரால் இகழப்பட்ட வெளிமான் பெருந்தலைச் சாத்தனாராற்

பாடப்பெற்ற கடிய நெடுவேட்டுவன், இளங்கண்டீ ரக்கோ, மூவன், இளவிச்சிக்கோ முதலியவர்கள், குமணன் காலத்தவர். புறத்திணை நாகனாரால் பாடப்பட்ட ஓய்மான் நல்லியக்கோடன், ஓய்மான் வில்லியாதன், ஓய்மான் நல்லியாதன், கரும்பனூர்கிழான் முதலியவர்கள் குமணனுக்கு முற்காலத்தவராவர்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்தே திதியன், எழினி, எருமையூரன் முதலிய சிற்றரசர்கள் சிறந்து விளங்கினர். திதியனுக்கும் அன்னி யென்பவனுக்கும் ஒரு பெரும்போர் நிகழ்ந்து அதில் அன்னி யென்பவன் உயிரிழந்தான்.

தேர்வண் மலையன் என்பவன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குத் துணையாய் நின்றவன். நெடுஞ் செழியனைப் பாடிய கல்லாடனாரால் பாடப் பெற்ற பொறையாற்றூர் கிழானும், அம்பர் கிழான் அருவந்தையும், நக்கீரனாரால் பாடப்பெற்ற பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனும், மாங்குடிகிழாரால் பாடப்பட்ட வாட்டாற்றெழினியாதனும் ஒரு காலத்தவரே. வேங்கைமார்பனென்பவன் கானப்பேரெயிலுக்குத் தலைவன். இவன் உக்கிரப்பெரு வழுதியால் வெல்லப்பட்டவன்.

குறுநில மன்னர் சிலர் காலம் மூவேந்தருள் எவர் காலத்தை ஒட்டியதென்று தெளிவாக விளங்கவில்லை. அவர்கள் வல்லார் கிழான் பண்ணன், நெடுவேளாதன், நாலைகிழவன்நாகன், தந்து மாறன், தருமபுத்திரன், ஆதனுங்கன், ஏறைக்கோன், வாணன் முதலியோராவர்.

யவனர் என்பவர் அகம் ௧௪௯-ல் தாயங் கண்ணனா ரால் குறிக்கப்பட்டுள்ளார். அவர் குளமுற்றத்துத் துஞ் சிய கிள்ளிவளவனைப் பாடியவர். அவர்களை நக்கீரனாரும் புறநானூற்றில் ருசு-ல் குறித்துள்ளார்.

---

## அதிகாரம் ரு.

---

## தமிழ்மக்களின் நெஞ்சப்பாங்கும் இலக்கியப் போக்கும்.

இலக்கியமென்பது மக்களுடைய விழுமிய கருத் துக்களைச் செவ்விய சொற்களால் விளக்குங் கருவியாம். இலங்கு இயம் என அச்சொற்றொடரைப் பிரித்துச் சொல்லாலும் பொருளாலும் செம்மைபெற்றொளிரும் நூலெனப் பொருள் கொள்ளின் மேற்செப்பிய கருத்து வலியுறுதல் காண்க.

தலைச்சங்க காலத்திலேயே இயல், இசை, நாடக மெனத் தமிழிலக்கியம் மூவகைப்பட்டதென்பது தொல் காப்பியத்துள் மூன்றையும் பற்றிய குறிப்புக்கள் காணப் படுதலாற் றெளியப்படும். உள்ளக்கருத்தை அழகு பெறத் தெரிப்பது இயற்றமி ழிலக்கியம். இயற்றமி ழிலக்கியத்தைப்பற்றிய ஆராய்ச்சி ஈண்டுச் சிறப்பாக எடுத்துக் கொள்ளப்பட்டது.

தொல்காப்பியர் காலத்தே பல நல்லிசைப் புலவர் கள் திகழ்ந்தனர்.

தலைச்சங்க காலத்து நூல்களுள் யாதும் முழுவதுங் கிடையாமையின் அக்காலத்து மக்கள் நினைவின் போக்கையும் இலக்கிய முறைகளையும் ஆய்வதற்குப் போதிய கருவிகளில்லை. இடைச்சங்க நூலாகிய தொல்காப்பியத்திலுலே விளங்குவது யாதெனின் உடலின்வேறாக உயிர் உண்டென்றும், உயிர் தலைவன் ஒருவனை உடையதென்றும், அத்தலைவன் உயிர், உலகம் என்னும் அவ்விரண்டிற்கும் அடிப்படையான பெருஞ்சார்பாய்ப் பிறப்பிறப் பற்றவனாய் உலக நிலையாமை உணர்ந்து தன்னைப்பற்றி நின்றொழுகும் உயிர்கட்கு எஞ்ஞான்றும் நிலைத்ததோர் இன்பம் ஈயவல்ல னென்றும், இருவினைப் பயனை ஊழ் உண்டென்றும், தமிழர் அறிந்திருந்தார்கள் என்பதே. இறைவன் தனது அருள்பெற்ற பெரியோர்கள் வாயிலாக உலகினர்க்கு முதனூல்களை நல்கினான் என்பதும் பழந்தமிழரின் கொள்கையே. அவர் ஞாயிற்றையும் திங்களையும் இறைவன் இறைவியரின் திருவடிவங்களாகக் கருதி வழிபட்டனர். நெருப்பினையும் அவ்வாறே வழிபட்டனரென்ப. அந்தணர், வானவர், ஆனினம், மழை, வேந்தன் உலகம் என்னும் அறுவகையையும் வாழ்த்தும் மரபு அக்காலத்திருந்தது. அது "அமரர்கண் முடியும் அறுவகையானும்" என்பதனால் விளங்கும்.

வீடுபேறு கருதுவார்க்கு மெய்ந்நூற் பொருளையுந் தவநெறியையும் இனிதுணர்த்தும் திறமைசான்ற அருளாளர் பலர் திகழ்ந்தனர். அவர்கள் பெரும்பான்மையும் மலையிலுங் காட்டிலும் அகத்துறவாதல் புறத்துறவாதல் பூண்டு வாழ்ந்தவர்கள். அவர்கள் முக்கால

மும் உணரவல்ல அறிவர் எனப்பட்டார்கள். அவர்கள் கருதிய பயனைப் பயக்கவல்ல மறைமொழிகள் பல வகுத்தோதினர். அவைகளே தமிழ் மந்திரங்கள். அவர் சொல்வழி நின்றவர் எண்வகைத் தவத்தராவர். அவருள் நாட்டின்கண்ணே நூல்களைக் கற்பிக்குந் துறவிகள் அந்தணர் எனப்பட்டார். பொது வழிபாடு இயற்றும் இடங்களில் கடவுளுக்குத் திருமுழுக்கு முதலியன செய்வோர் பார்ப்பார் எனப்பட்டனர். மூவேந்தரும் மூவேந்தரைச் சார்ந்த வேளிரும் ஒரு மரபினராகவும், வணிகம், உழவு முதலியன கைக் கொண்டோர் பிறிதொரு மரபினராகவும் இருந்தனர். இது தொழில் பற்றிய பிரிவே யன்றிப் பிறப்புப் பற்றிய பிரிவன்று. இப்பிரிவுகள் மருத நிலத்தில் அத்திணைக்குரிய வேளாண் பெருங் குழுவினின்றும் எழுந்தனவாகும். ஏனை நான்கு திணை நிலமக்களும் தத்தமக்குரிய தொழிலை ஆற்றிவாழ்ந்தனர். அவருள் எழுந்த பிரிவுகள் தெளிவுபட விளங்கவில்லை. பிறதொழில்களை மேற்கொண்டோரும் இவருள் அடங்குவர். தொல்காப்பிய மரபியலுட் சேர்க்கப்பட்ட நாற்குல முறை ஆரியரது வகுப்பு முறையைத் தழுவிப் பிற் காலத்தில் எழுந்ததாகும். நாற்குல முறையைப் பற்றித் திருவள்ளுவர் நூலில் யாதுங் காணப்படாமை தெளிக.

அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கினையும் எய்துதற்குரிய நெறிநிற்றலே அறவாழ்க்கை எனப் பட்டது. கருத்தொருமை உடைய தலைவனுந் தலைவியும் கூடிவாழ்ந்து இவ்வுலக இன்பந் துய்த்தபின் இருவரும் தூய உள்ளத்தொடு தவநெறி நிற்றலும் தொல்

காப்பியத்துட் கூறப்பட்டது. நால்வகை நெறி (யாச்சிரமம்) தமிழர்க்குள் இருந்ததில்லை. இல்லறம் துறவறம் என்பனவே அறநூலாரால் கூறப்பட்டன. இதனால் இளமையிற் கல்வியும் தனித்துறவும் விலக்கப்படவில்லை. இல்லறத்திற்குரிய தகுதியை அடைதற்கான கல்வியும் ஒழுக்கமும் இருபாலார்க்குங் கூறப் பட்டன. பரத்தையிற் பிரிவும் அக்காலத்திருந்தது. கள், ஊன் உண்ணல் சிறுபான்மை கேட்கப்படுகின்றது. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும் புலாலும் அறநூலாரால் கண்டிக்தொதுக்கப்பட்டன. ஆடவர்க்குங் கற்புக்கூறப்பட்டது. கல்வி நலஞ்சான்ற பெண்டிர் பலர் அரசர்க்கும் உண்மை அறிவுறுத்தும் உறுதியுடையவராய்த் திகழ்ந்தனர். அரசர்க்குள் அறப்போர் நிகழ்ந்தது. திரை கடலோடியும் பொருள் தேடுதல் அக்காலத்திய வழக்கு. மகளிரை மரக்கலத்தில் உடன்கொண்டு செல்லுதல் அக்காலத்தில் இல்லை. தமிழ்மக்கள் பிறநாட்டு மக்களையும் அன்புடன் வரவேற்கும் பெருந்தகையினராய் இருந்தனர்; இசையிலுங் கூத்திலும் மிகவும் ஈடுபட்டவர்கள். மருத்துவம் இவர்களுக்குள் தழைத்தோங்கியது போலப் பிற எந்நாட்டினரிடையிலும் அக்காலத்தில் இல்லை. நிமித்தம் பார்ப்பதுந் தமிழருக்குள் இருந்ததாகத் தெரிகிறது. எழுத்துக்களின் வடிவு தொல் காப்பியக் காலத்திலேயே பழமையாய்ப் பாராட்டப் பட்டது. ஒலிநூல் முதலிய நுண்ணூல்கள் பலவுந் தமிழர் அறிந்திருந்தனர்.

தொல்காப்பிய நூற்பாவின் செய்யுள்நடை மிக்க பொருமிதமும் நுண்மையும் வனப்பும் வாய்ந்து பிற ஆசிரி

யர்களால் தழுவப்படுவதற்கரியதாம் உயர் நடையாகும். பயனில்லாத ஒரு சொல்லும் அவைகளில் இல்லை. அவைகளின் ஓசைநயம் பிறதமிழிலக்கண நூல்களுள் யாதொன்றினுங் காணப்படுமாறில்லை. இதனாலே இடைச்சங்க காலத்திற் றோன்றிய இலக்கணப் பெருநூல்களின் உயர்ந்த சொன்னடை பிற்காலத்திற் றளர்ச்சியுற்றதென்பது தெளிவு. தமிழ்ப்பெற்றி தொல்காப்பியர் காலம் வரை பெரியதோர் உயர்நிலை யடைந்து பிற்காலத்தே வரவரத் தாழ்ந்ததென்பது போதரும்.

கடைச்சங்க காலத்திலே தமிழ்மக்கள் வடநாட்டிலிருந்து ஆரியராற் கொண்டு வரப்பட்ட பிறதெய்வங்களின் வழிபாட்டையும் கைக்கொண்டனர்; புத்தம் முதலிய பிறசமயங்களுக்கும் தங்கள் நாட்டில் இடங்கொடுத்துச் சமயப் பொறுமையை மேற்கொண்டனர். இராமாயண பாரதக் கதைகள் தென்னாட்டிற் பரவின. மூவேந்தருங் குறுநில மன்னருந் தம்முட் போர்புரிந்து முரணுற்றன ரெனினும் புலவர்கள் அவர்களுக்குள் ஒற்றுமை வேண்டு மென்பதையே அறிவுறுத்தி வந்தனர். யவனர் முதலிய மேலைநாட்டினரோடு கடல் வணிகம் நிகழ்ந்தது. பன்னாட்டு வணிகமக்களுந் தென்னாட்டுத் துறைமுகங்களிற் குழுமினர். அக்காலத்துக் கைத்தொழிற் சிறப்பு மிகவும் பாராட்டத் தக்கது. கடற்போருங் கலங்கரை விளக்கம் முதலியனவும் அக்காலத்திற் நிகழ்ந்தன. பல்வகை மக்களும் உண்டுடுத்துக் கவலையின்றிக் களிப்புடன் வாழ்ந்தனர். கற்புநிலை சிறந்தோங்கிற்று. வடநாட்

டினர் கூட்டுறவால் நாற்குலப்பிரிவு தலைகாட்டிற்று. தென்னாட்டு மன்னர் பயன் கருதிய வேள்வி முறைகளைக் கடைப்பிடித்தனர். சமய உணர்ச்சி குன்றி அறவுணர்ச்சி யொன்றே யாண்டும் நிலவிற்று. இதனால் பிறசமயத்தார் தத்தங் கொள்கையைத் தத்தமக்குத் தோன்றியவாறே பரவச்செய்ய இடம் பெற்றனர். ஆரியக் குருமார்கள் தங் கள் மறைகளைத் தமிழ்மக்கள் நம்பும்படி செய்து பார்ப் பனர் என்னும் பெயரையும் மேற்கொண்டனர். ஆரிய ரும் புத்தரும் தென்னாட்டிற் றிகழ்ந்த சிவநெறிக்குரிய சொற்றொடர்களால் தங்கள் கடவுளர்களையும் கொள்கை களையும் வெளிப்படுத்தத் தொடங்கினர். சமயச் சார்பாய வடசொற்கள் தென்னாட்டில் மிகுதியும் வழங்கலாயின. துன்புற்ற அரசரும் பிறரும் உணர்வின்றி நோன்பிருந்து உயிர்விடும் வழக்கத்தைக் கைக்கொண்டனர். இறந்த வீரரை வணங்கும் வழக்கமும் சிறந்திருந்தது. இசைப் பாடல்களுங் கூத்துக்களும் அரசராலும் செல்வராலும் போற்றப்பட்டிருந்தன. அரசரும் வேளிரும் செந்தமிழ்ப் புலவர்களை மிக்க ஆர்வத்தோடு பாதுகாத்து வந்தனர்.

புரவலரைப் பாடிய தனிப்பாடல்களே பெரும்பான் மையுங் கிடைத்துள்ளன. ஒருவரையும் குறியாது கல்வி ஊழ் முதலியவற்றைக் கூறுந் தனிப்பாடல்கள் மிகச் சிலவே. தமிழிலக்கியம் தனிப்பெருஞ் சிறப்புடையதாய் வடநாட்டினராலும் மதித்துப் போற்றப் பெற்றது. தக்க புலவர்கள் ஒற்றுமைப்பட்டு வாழ்ந்தனர். பரிசு பெற்றார் பெறாதாரை ஆற்றுப் படுத்தினர். பொருள்களின்

இயற்கை நயங்களை உள்ள வாறுணர்த்தும் திறமை சான்ற புலவர்களின் தனிப்பாடல்களே மிகுதியுங் கிடைத்துள்ளன. விழுமிய கருத்துக்கள் பொருந்திய நற்றமிழ் மொழிகளால் அமைந்த அவர்கள் பாடல்களில் பிற்காலத்துச் சொல்லணிகளும் உயர்வு நவிற்சியும் இயற்கைக்கு மாறான செயற்கைப் பொலிவும் அரியனவாதல் காண்க. ஆறறிவுயிர்களின் தன்மையையும் வனப்பினையும் நேரிற்கண்டு நுண்ணிதின் ஆய்ந்து அவற்றைத் தகை சான்ற செவ்விய மொழிகளால் கற்போர் உள்ளம் நினை தொறும் நினைதொறும் மகிழ்ந்தின்புறும் வண்ணம் செய்யுளியற்றும் வன்மை அக்காலத்துப் புலவர்களின் நூலுட் காணப்படுமா றெப்பப் பிற்காலத்துக் காப்பியங் களுட் காண்டலரிது. மக்கள் யாவரையும் ஒரு குடும்ப மெனக் கருதும் விரிந்த நோக்கமும், அறவொழுக்கம் ஒன்றுமேபற்றிக் கணிக்கப்படும் உயர்வு தாழ்வும், நம்பத் தக்க உண்மைகளை எல்லாருள்ளமுங் கொள்ளத்தக்க பொது முறையிற் கூறும் நடுவுநிலையும் அக்காலத்துச் சிறப்பியல்புகளாகும். அக்காலத் திறுதியிலேற்பட்ட புத்தப் பெருங்காப்பியங்களே முதன் முதல் சமயச் சார் பாயகதைகளைத் தழுவி யெடுத்துரைக்கலாயின. அங் காலத்துச் சமய நூல்கள் இக்காலத்தில் கிடைக்கப் பெற வில்லை. கிடைத்துள்ளன பலவும் உலகியலைக் கவினுறத் தெரிக்கும் பொதுத்தன்மை வாய்ந்தனவே. திருமுரு காற்றுப் படையும் பரிபாடலும் சமயச் சார்பானவை யெனினும், பிற்கால நூல்களைப் போல அவற்றுள்

சமயக் கொள்கைகள் விளக்கம் பெறவில்லை. உலகியல் கூறும் இலக்கியத்துள் சமயக் கொள்கைகளை விதந்தோதும் வழக்கம் புத்தராலும் சமணராலும் ஏற்பட்ட தென்பாருமுளர். விருத்தப் பாப்போன்ற பாவகை சிலப்பதிகாரம் போன்றவற்றுட் சுாணப்படினும், அது காப்பியப் பெருவழக்காக அக்காலத்திற் கைக்கொள்ளப்படவில்லை. நாட்டுப்படலம், நகரப்படலம் என்னும் பிரிவுகள் அக்காலத்துக் காப்பியங்களுட் பயின்றில.

மூன்றும் நூற்றாண்டின் பிற்பகுதியாகிய மாணிக்கவாசகர் காலத்திலே ஆரியக் குருக்களுட் பலர் சிவ நெறியைக் கைக்கொண்டு சிவபெருமானையே வழிபட்டனர். ஆரிய வகுப்புமுறை தென்னாட்டில் நிலைபெற்ற தெனினும் அறிஞர் அதனைப் பாராட்டவில்லை. புராணக் கதைகள் மிகுதிப்பட்டன. புத்த மதஞ் சீர்கெட்டொழிந்தது. பல தேவன் வழிபாடு குன்றியது. தில்லையின் சிறப்பும் பிற திருக்கோயில்களின் பெருமையும் போற்றப் பெற்றன. சைவ சித்தாந்தக் கொள்கைகள் எங்கும் பரவின. இப்பொழுது கிடைத்துள்ள அருட்பா மாலைகளுள் முதன்மையானது திருவாசகமே. சமயச் சார்பாய அகப்பொரு ளிலக்கியங்களுள் முதன்மையானது திருச்சிற்றம்பலக் கோவையாரே. கட்டளைக்கலித்துறை புலவராற் கைக்கொள்ளப் பட்டது. மூவேந்தரும் சைவ நன்னெறியை வளர்த்தனர்.

"தென்னவன் சோழன் சேரலன் வரக்கூவாய்"—திருவாசகம்.

என்றதாற் காண்க

கிளி முதலியவைகளை விளித்துரைப்பதும், மகளிர் விளையாட்டு வகைகளைப் புகழ்மாலைக் கருவியாகக் கொள்வதும் ஆகிய பண்டைத்தமிழ் முறைகள் திருவாசகத்துட் காணப்படுமளவு பிற்காலத்துத் துதிநூல்களுட் கண்டிலம். மக்களின் பொதுக்கருத்துக்கள், சமயக்கருத்துக்களோடு நூல்களிற் கலப்புற்றன. மக்களைப் பாடு மரபு குறைவுற்றது. பெருங்காப்பியக் காலம்மாறிக் கடவுட் புகழ்மாலை பாடும் வழக்கம் பரவலாயிற்று.

**நான்காவது ஐந்தாவது** நூற்றுண்டுகளிலே அறம் பொருளின்பங் கூறுங் கீழ்க்கணக்கு நூல்கள் பல தோன்றின. இக்காலத்தே சில ஆரியக் கருத்துக்கள் தமிழரின் நெஞ்சத்துட் புகுந்தன வெனினும், பொதுவாய உண்மைகளைக் கூறுஞ் சிறு நூல்களே அவற்றின் சார்பாகத் தோன்றின. வள்ளல்களை நெஞ்சுருகிப் பாடிய புலவர் பாடல்களும், பெருங் காப்பியங்களும், சிறப்புச் சமய நூல்களும் இக்காலத்திற் றோன்றினவோ வென்பதைத் துணிதற்குரிய நூல்கள்கிடைத்தில. அகவற்பாவினு லாய சமணப் பெருங் காப்பியமாக இப்போது கிடைத்திருப்பது பெருங்கதை யொன்றே. இதுதான் மொழி பெயர்த்து யாத்த காப்பி யங்களுள் முதலாயது. சிலப்பதிகாரமும் மணிமேகலையும் தமிழ்நாட்டுக் கதைகளைக் கூறுவனவே. வடநூற் கதைகளைத் தழுவித் தமிழிற் காப்பியஞ்செய்யும் வழக்கம் இக்காலத்திற்றுன் ஏற்பட்டது போலும்.

**ஆறும் நூற்றுண்டிலே** சைவப் புகழ்மாலைகள் பல வகைச் சிறுகாப்பியங்களாகத் தோன்றின. சைவசித்தாந்

தக் கொள்கைகளை ஒழுங்குபடுத்தி நூன் முறையாகக் கூறும் பெருநூல்கள் இக்காலத்திலேதான் முதன்முத லெழுந்தனவாகும். திருவாசகம் புகழ்மாலைகளில் ஒன்றே. திருமந்திரமும் ஞானமிர்தமும் கலைநூல்களாயின. புறச் சமய கண்டனம் தொடங்கிற்று. புனையுமாற்றல் சிறந் திலங்கும் கல்லாடம், சமயநூல்களிலே இலக்கிய நயங் களை விரிவாக எடுத்தாளு முறையை எடுத்துக் காட்டிய முதனூலாகும். புரவலரைப் பாடும் வழக்கங்குறை வுற் றது. பாவலரைப் போற்றுவாரின்மையாலும் சமயக் கிளர்ச்சியின் மிகுதியினாலுமெனக.

ஏழாம் நூற்றுண்டில்: இந்நூற்றுண்டில் புறச்சமய கண்டனம் சிறப்புற்றது. அதற்கு ஏது புறச்சமயத்தார் கிளர்ச்சியும் அவரது சமயப் பற்றுக்கோடுமேயாம். சம ணர் தஞ்சமயத்தின் உயிரான கொள்கையைக் கைவிட்டு வெளி வேடத்தைப் போற்றி இடர் விளைத்தனர். சைவத் திலே திருக்கோயில் வழிபாடும் நெருப்பு வழிபாடும் ஒருங்கியைந்தன. ஆரிய அந்தணர் சிறப்பாகச் சிவநெறி கடைப் பிடித்தனர். சைவமானது மக்களுள்ளத்திற் றமி ழோடு தொடர்புற்றது. சாதியினுஞ் சமயமே சிறப்புற் றோங்கிற்று. திருவைந்தெழுத்தே வடமொழி மறையின் மெய்ப்பொருளென்பது நிலைப்பட்டது. சைவத்துடன் வைதிகஞ் செறிவுற்றது. வைதிகமுஞ் சைவமாயிற்று. மக்களுள்ளத்தே சமயப்பற்றின் மிகுதியால், சமயப் பொறுமை குறைவுற்றது. தமிழின் பெருமை தலை நின் றது. விருத்தப் பாவிலே புகழ்மாலைகள் பாடும் வழக்கம் பெருவரவிற்றுயது. சொல்லணிகள் மல்கின. அன்பின்

பாடல்களே மிகுந்து காப்பியங்களுங் கலைநூல்களுங் குறைந்து போயின.

எட்டாவது நூற்றாண்டு; இந்நூற்றாண்டின் முற்பகுதியோடு சைவசமய ஆர்வக்கிளர்ச்சி குறைவுபட்டது. புறச்சமய கண்டனங் குறைவுற்றது. மிக்கதொன்று பின் குறைவடைதல் இயல்பே. காப்பியங்கள் குறுகியொழிய, இலக்கணநூல்களும் உரை நூல்களும் எழுந்தன. இக்காலத்திலக்கணத்தே ஆரியச் சாதிக்கொள்கை உறுதியுற்றது. வேளாளர் நான்காம் வருப்பினர் என்ற கருத்துத் தலைகாட்டிற்று. வைணவக்கிளர்ச்சி தொடங்கிற்று. இந்நூற்றாண்டின் பிற்பகுதியிலே வெண்பாயாப்பு புலவரால் போற்றப்பட்டது. கோவை முதலிய பல்வகைச் சிறுகாப்பியங்கள் ஏற்பட்டன.

ஒன்பதாம் நூற்றாண்டு; இந்நூற்றாண்டில் வைணவக் கிளர்ச்சி மிக்கது. ஆரியக் கருத்துக்களுஞ் சொற்களும் பெருக் கெடுத்தன. வைணவப் புகழ்மாலைகள் மிகுந்தன. விருத்தயாப்பே பெரிதும் வழங்கலாயிற்று.

பத்து முதல் பன்னிரண்டாவது நூற்றாண்டு வரை சைவசித்தர் கிளர்ச்சியும், சமண இலக்கியக் கிளர்ச்சியும் தோன்றின. சமணர் தமது சமய போதனையை நேரே மேற்கொள்ளாது, செவ்விய உலகிய விலக்கியங்களால் சமயக் கொள்கைகளைக் குறிப்பிடப் புகுந்தனர். விருத்தப்பா எவ்வகை யிலக்கியத்திற்கும் சிறந்த கருவியாயிற்று. அப்பாவினால் இயற்றப்பட்ட முதற் பெருங்காப்

பியம் இக்காலத்ததே. உயர்வு நவிற்சியும், புனைவுரையும் குலப்பெருமைக் கூற்றும் தமிழ்க் காப்பியத்துட் புகத் தொடங்கின. சமணர் உலக நூனயத்தாற் சைவ சம யத்தை வெல்லத் தொடங்கினர். சோழமன்னர் வீறெய்தி அரசாட்சியை அகலப்படுத்திய காலத்தே மக்களுள் உலகவாழ்க்கைநய வுணர்ச்சி மிகுதிப்படவே, பொதுக் காப்பியங்கள் தலையெடுத்தன. பத்துமுதல் பன்னிரண் டாவது நூற்றுண்டு முடிய எழுந்த விருத்தப் பெருங் காப்பியங்களைப் போலப் பீடுடையன பிற்காலத்துத் தோன்றவில்லை. மக்களியற்கைத் திட்ப நுட்ப ஒட்பங் களுக்கும் நிலவுலக அளப்பருங் காட்சிக்கும் இக்காப்பி யங்களே சிறந்த கண்ணுடியாய்த் திகழ்கின்றன. நடுக் காலத் தமிழ்மக்கள் நாகரிக மனைத்தும் இவைகளிலே சீரிடம் பெற்றுத் திகழ்கின்றன. தமிழ்க் காப்பியங்களுக் கும் புராணம் என்ற பெயர் உண்டாயிற்று. பெரிய புராண மொழிந்த பிறகாப்பியங்களுள் வடநூற் கதைகள் தழுவப்பட்டன. தமிழ்ப்புலவர் வடநூன் முனிவரைப் பெரிது மதிக்கலாயினர். எனினும் தமிழ்ச் சொன்னயங் கள் தழைத் தோங்கிப் பொலிந்தன. வேளாள வள்ளல் கள் தமிழ்ப் புலவரைக் கண்ணுங் கருத்துமாகக் காத்து வந்தனர். செல்வச் செழிப்பால் வண்மை மிகவே ஆரியப் பார்ப்பனரும் நலமுற வாழ்ந்தனர். ஆரியக் கொள்கைகள் மிகுதிப் பட்டன. ஏகான்மவாதம் தமிழ்ப் புலவர்களாற் பாராட்டப்பட்டன. பண்டைத் தமிழர் நாகரிகத்தின் தனிநிலை மறைந்தும் மறையாது மிருந்தது இவ் இடைக் கால மாகும். மன்னர் புலவரைத் தம் பெரியா ரென்று

கருது மரபு குன்றிற்று. தமிழ்ப்புலவர்க்குள் ஒற்றுமைக் கேடு ஏற்பட்டது. கற்றாரைக் கற்றார் காமுறுவர் என்பது சிறிது பிழைபட்டது. கற்பனையாற்றல் போற்றப் பட்டது. காப்பியங்களுள் இயற்கைநலங் குறைவுபட்டது.

பதின்மூன்று பதினான்காம் நூற்றாண்டுகளில் காப்பியக்கிளர்ச்சி குன்றிக் கவியுணர்ச்சி மட்டுப்பட்ட கருவி நூற்காலம் வந்தது. இலக்கண நூலுள்ளும் கற்பனைப் பொருத்தங்கள் நுழைந்தன. மந்திர நூலுஞ் சோதிடமும் பாட்டுப் பொருத்தங்களோடு கலந்தன. எழுத்துக் களுக்குஞ் செய்யுள்களுக்கும் சாதி (வருண) வேற்றுமை யமைக்கப்பட்டன. அதிதேவதைகளும் ஏற்பட்டன. இவற்றால் ஆனந்தக்குற்ற முதலிய கற்பனைக் குற்றங்கள் நூலுட் சுட்டப் பட்டன. பாட்டியற்றுவந்து மனையமைப்பது போலாயிற்று. கற்பனைச் சொன்னய உணர்ச்சியினாலே மக்கள் நெஞ்சங் கட்டுப்பட்டு விரிந்த நுண்ணிய பொருளாராய்ச்சியிற் செல்லாது தியங்கிற்று. வைணவ உரையாசிரியர்கள் காலமுதல், ஆரியத்தாக்கு, சொல்லினும் பொருளினும் விஞ்சியது. சிறு காப்பியங்களும் சிற்றிலக்கண நூல்களும் எழுந்தன. இக்காலத்திலே நன்னூலொன்றே சிறந்த முறையில் அமைந்துள்ளது.

பதினைந்தாவது நூற்றாண்டிலே இரட்டையர் காலம் முதல் சைவக்கிளர்ச்சி ஏற்பட்டுச் சமணர்வலி குன்றியது. உலா, கலம்பக முதலிய சிறு காப்பியங்க ளியற்றப்பட்டன. வண்ணப்பாட்டு வகைகள் மிகுந்தன. இறையன்பின் பெரும்பயனாகத் திருப்புகழ்ப் பெருநூல் எழுந்தது.

புராணக் கதைகளையும் ஆரியச் சொற்களையும் பெரிதுந் தழுவிச் சென்றாலும், இந்நூல் கடவுட் பேரன்பினை விளைப்பதுடன் இன்பச் சுவையையுந் தன்னகத்தே கொண்டிருத்தலால், என்றும் நின்று நிலவுதற்குரியது. இதன் சொல்வளமும் பெருமிதமும் ஒப்பற்றன. கம்ப ராமாயணம் வடநூற் கதையைமட்டுந் தழுவிற்று. வில்லி பாரதம் வடசொற்களையு முடன் கொண்டது. வில்லி புத்தூரார் காலமுதல் தமிழ்ப் பெருங் காப்பிய உயர்வு குன்றத் தொடங்கிற்று. சொன்னய முணர்த்துங் கற்பனைகள் மிகுந்தன. பாரதமும் நைடதமும் அரிச்சந்திர புராணமும் வடநாட்டுக் கதைகளைத் தழுவினவே. ஒரு கதையைக் காப்பிய முழுவதிலுங் கூறுமுறை இவைகளோடு அருகியொழிந்தது. நைடதத்திலே பண்டைத் தமிழரது புனைந்துரை மாறிச் சிறிது தாழ்மைப்பட்ட வடநூற் புனைமுறை மிகுதிப்பட்டது. பெண்டிரின் ஒவ்வொரு பகுதியையும் புனைந்துரைக்குமுறை அத்தன்மையது.

**பதினாறாம் நூற்றாண்டு:** இந்நூற்றாண்டில் தல புராணங்கள் பெருங்காப்பியங்களாகத் தொடங்கின. சேது புராணத் தோற்றத்துடன் இலக்கண விதிகளும் கற்பனைக் கருவியாகப் பயன்படலாயின. அரசர், வள்ளல்கள் என்போரது உதவி குறைவுபட்டமையால் இறைவனையே போற்றுஞ் சிறு காப்பியங்களும் தனிப்பாடல்களுமே சிறந்திலங்கின. மடங்களிலே நூல்கள் பல தோன்றின. சைவ வைணவ ஏகான்மவாத நூல்கள் வெவ்

வேறு மல்கின. வட நூல்களுக்கு மிகுந்த பெருமை ஏற்பட்டுத் தமிழ்ச் சமயக் காப்பியங்களுக்கும் கலைநூல்களுக்கும் வடமொழியில் மூலநூல் இருத்தல் சிறப்பென்ற தப்புக் கொள்கை தலையெடுக்கலாயிற்று. மக்கள் அறிவு ஆரியக்கட்டுகளுக்குள் அடங்கிச் செல்ல வேண்டியதாயிற்று.

பதினேழாம்நூற்றுண்டு: இதில் மன்னர், குறுநில மன்னர் முதலியோர் உதவியினுற் பிள்ளைத் தமிழ், கோவை முதலிய சிறு காப்பியங்கள் கற்பனை நயங்களோடு மக்கண் மீதும் பாடப் பெற்றன. சமயச் சண்டைகள் மிகுதிப்பட்டன. செந்தமிழ் நயங்கள் மகமதியப் புலவர் நெஞ்சத்தையுங் கவர்ந்தன. மகமது நபியைப் பற்றிய பெருங்காப்பியமே பண்டை முறையில் இனிதமைந்தது. மகமதிய வள்ளல்கள் தமிழைப் பேணத் தொடங்கினர். சைவக்கிளர்ச்சி இமயம் வரை எட்டிற்று. இந்நூற்றுண்டிறுதியில் வட மொழிச்சுவை மிகுதிப்பட்டுத் தமிழ்க்கும் வடமொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்ற தப்புக்கொள்கை தலையெடுத்தது. வடமொழி தமிழை முற்றிலும் அடக்கியாண்ட காலமிஃதே.

பதினெட்டாம் நூற்றுண்டு: இந்நூற்றுண்டு முற்பகுதியில் கிறித்துவைப்பற்றிய பெருங்காப்பியம், செந்தமிழிலே ஐரோப்பியப் புலவரொருவராற் பாடப்பெற்றது. கிறித்துவக் கருத்துக்கள் தமிழ்க் காப்பியங்களிலிடம்பெற்றன. வீரசைவ சமயக் கருத்துக்களும் தமிழ் நாட்டிற் பரவத்தொடங்கின. சைவத்தின் பொதுக்கருத்

நுக்கள் தாயுமானுரால் விளக்கமடைந்தன. பல பிற்காலச் சித்தர் நூல்களும் இக்காலத்தெழுந்தன போலும் பல கோட்பாட்டினர் ஒருங்கு கலந்தனர். சமய ஆராய்ச்சியுந் தமிழாராய்ச்சியும் மக்களுள் விரிவாக ஏற்பட்டன. பொதுமக்கட்குப் பயன்படும் உரைநடை நூலும், அகர வரிசை (அகராதி) முதலியனவும் எழுந்தன. அச்சின் முதற்றோற்றமும் அக்காலத்தே நிகழ்ந்தது போலும். குறுநில மன்னர்களும் செல்வர் பலரும் தமிழை வளர்க்கக் கருதிய காலமுமிதுவே. பண்டை மன்னராட்சி அறவே ஒழிந்தது. பதினேழாம் நூற்றாண் டிறுதியில் நிலைபெற்ற கொள்கை பதினெட்டாம் நூற்றாண்டின் பிற் பகுதியிற்குன்றி, வடமொழியும் தமிழும் வெவ்வேறே யென்ற கொள்கை இருமொழியும் நிலைகண்ட ஆசிரியர் சிவஞான முனிவரால் நாட்டப்பட்டது. பிற சமயக் கிளர்ச்சி குன்றிச் சைவ சித்தாந்தம் சிறந்தோங்கிற்று. பதினேழு பதினெட்டு நூற்றாண்டுகளிலே சிறுகாப்பியங் கள் இருவகைப்பட்டன. இறைவனைப் பற்றியன ஒரு வகை. மற்றொருவகை, மக்களுள் அதிகாரத்தாற் பெரி யாரைப் பற்றியன. அவை காமச்சுவை மிக்கனவாய்த் திகழ்ந்தன. இருவகையிலும் சிலவற்றிற்றான் ஆழ்ந்த கருத்துக்கள் காணப்பட்டன. சிவஞானபோதப் பேருரை தோன்றிய காலந்தொட்டு மக்கள் நெஞ்சம் விரிவுறத் தொடங்கிப் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் அதன் பின்னும் ஆங்கிலத் தொடர்பால் ஆரியக் கட்டவிழ்க்கப் பட்டு ஆராய்ச்சி முறையிற் செல்வதாயிற்று.

பத்தோன்பதாம் நூற்றுண்டு: பொது மக்களுக்கு இலக்கியத்தைப் பயன்படுத்த வேண்டுமென்ற கொள்கை நிலைபெற்ற காலம் இந்நூற்றுண்டிலே தானென்று தோன்றுகிறது.

இருபதாம் நூற்றுண்டு: செயற்கைச் சொன்னயத்தைப் பொருட்படுத்தாது பொருணயங் கருதிப் பண்டைச் சங்கநூல்களுக்குச் செல்லும் ஆர்வமும், பொய் புனைந்த கதைகளைத் தொலைத்து மெய்யுணரக்கருதி வரலாற்றுராய்ச்சியினை மேற்கொள்ளும் ஊக்கமும், விழுமிய விரிந்த பண்டைத்தமிழ் நாகரிக முறைக்கேற்பத் தமிழர் குடிவாழ்க்கையைச் சீர்திருத்திச் செம்மைசெய்யும் நோக்கமும், எம்மொழிப் பொருளையும் தனித்தமிழிலே வெளிப்படுத்திப் பயன்றுய்க்க வேண்டுமென்ற உறுதியும் இற்றை ஞான்றின் சிறப்பியல்புகளாம்.

---

## அதிகாரம். கா.

---

## கடைச்சங்கப் புலவர் வரலாறு.

### புறநானூற்றைப் பாடியோர்

கடைச்சங்கப் புலவருள் பரணர் கபிலர் நக்கீரர் என்னும் மூவர் தலைசிறந்தவர். இவர்கள் ஒருவர்க்குப் பின் ஒருவராகப்புகழொடு திகழ்ந்தன ரென்பது வரலாற்றுராய்ச்சினுற் புலனுகின்றது.. பரணர் செங்குட்டுவன் காலத்தவர். அவர்க்கு முற்பட்ட காலத்துப் புலவரை முதற்கண் ஆராய்வாம். முடிநாகராயரும், முடத்திரு

மாறனும், முதுகுடுமிப்பெருவழுதியைப் பாடிய காரி கிழாரும் நெட்டிமையாரும், நெடும்பல்லியத்தனாரும் ஆகிய பெரும்புலவர்கள் கி. மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்னேயே திகழ்ந்தனர். இவர்கட்குப் பின் வந்த புலவருள் மாமூலனார், ஓரம்போகியார், குடவாயிற்கீரத்தனார் மதுரைப் பேராலவாயார், ஊன்பொதி பசுங்குடையார், சாத்தந்தையார், நக்கண்ணையார் முதலிய பாவலர்கள் சிறப்புற்று விளங்கினர். அன்னோர் பாடல்களினாராய்ச்சி இவ்வதிகாரத்துள் எடுத்துக் கொள்ளப்படும்.

### பரணர்க்கு முற்பட்டகாலம்.

கடைச்சங்க காலத்திற்கு முன்னேயே உதியஞ்சேரலாதனை முடிநாகராயர் பாடிய பாட்டுப் புறநானூற்றுள் முதற்பாட்டாக உள்ளது. இப்புலவர் நாகர் மரபைச் சார்ந்தவ ரென்பதை இவர் பெயர் விளக்குகின்றது. இவர் பாட்டினாலே ஐம்பெரும் பூதத்தியற்கை இன்ன வென்பதும், அரசர்க்குரிய சிறப்பியல்புகள் பொறுமை, ஆழ்ந்த சூழ்ச்சி, வலிமை, தண்ணளி என்பனவா மென்பதும், அந்தணர் இமயமலையின் கண்ணும் பொதியின் கண்ணும் அந்திக் காலத்தில் முத்தீவேட்கும் முனிவரென்பதும் அறியற் பாலன. (இங்கே அந்தணரென்றது முனிவர்களை.) உதியஞ் சேரல் கதிரவன் தன்கண் உதித்து மறையவல்ல விரிந்தநாட்டை யுடையவனாய் இருந்தானென்றும், பாரதப் போரில் இருதிறத்தார்க்கும் பெருஞ்சோறு வழங்கினனென்றும், வானவரம்ப னென்னும் பெயருடையானென்றும் அறிகின்றோம். ‘பால்புளிப்பினும் பகல் இருளினும்’ என்பன அக்காலத்துப் பழ

மொழி போலும். முத்தீ விளக்கில் மான்கள் துயிலு மென்றது பாரயம்.

கடைச்சங்கத்தை நிறுவிய முடத்திருமாறன் காலம் தெளிவாக விளங்கவில்லை. திருவிளையாடற் புராணத்தில் கடம்பவனத்திற்குக் கீழ்ப்புறம் மணவூரென்பது இருந்த தென்றும், கடம்ப வனத்தில் மதுரைமாநகரங் கண்டது மணவூர்க் குலசேகர பாண்டியனென்றும் குறிப்பிடப் பட்டிருக்கின்றது. *மதுரை நகரம் உண்டாவதற்கு முன் மணவூரிலாவது கொற்கையிலாவது தமிழ்ச்சங்கம் இருந் திருக்க வேண்டும். அல்லது மணவூரில் பாண்டியரின் ஒரு கிளையும் கொற்கையில் பாண்டிய முடிமன்னரும் முதலில் வீற்றிருந்த பின் மதுரைமா நகரம் பாண்டியர்க் குத் தலைநகரா யிருக்கலாம். வியாச பாரதத்துள் அருச் சுனன் வனவாச பருவத்தில் அவன் தென்னாடு சென்ற போது மணவூரென்னும் ஊரில் சித்திரவாகனன் என் னும் அரசன் ஆட்சி செய்ததாகவும் அவன் மகளாகிய சித்திராங்கதையை அவன் மணஞ் செய்ததாகவும் சொல் லப் பட்டிருக்கின்றது. இதனால் அக்காலத்திற்குப் பின் னையே மதுரை நகரம் ஏற்பட்டிருத்தல் வேண்டுமென்று தெரிகின்றது.

முடத்திருமாறன் குட்டுவன் சேரலென்னுங் குட நாட்டரசனைப் பாடிய பாடலொன்று நற்றிணையிற் காணப் படுகின்றது.

## முதுகுடுமிப் பெருவழுதி. காரிகிழார்

முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் என்னும் புல வர் புறம். ௬-ல் பாடியுள்ளார். காரியென்பது தொண்டை

* திருநகரங்காண், உ.

நாட்டிலிருந்த ஊரென்றும், அது இப்பொழுது இராமகிரி யென்று வழங்கப்படுகிற தென்றும் புறநானூற்றுப் பதிப்பாசிரியர் கூறுகின்றார். கிழார் என்றதால் அவர் வேளாளரென்று அறிகின்றோம். முதுகுடுமியின் நாட்டெல்லையை இவர் குறிக்குமிடத்து வடக்கே பனிமலையும் மேற்குங் கிழக்குங் கடலும் தெற்கே குமரியும் சுட்டப்பட்டன. குமரி ஆறோ கடலோ வென்று தெளிவாகக் காட்டப்பட வில்லை. 'உருகெழு குமரி' என்றதால் சிலர் கடலென்பர். கிழக்குக் கடலைத் தொடுகட லென்றும், மேலைக் கடலைத் தொன்றுமுதிர் பௌவ மென்றுங் கூறினார். அவன் புகழுக்கு வான் எல்லையைப் புலவர் 'ஆனிலையுலகம்' என்றனர். அது அண்டத்தின் முடிவிலுள்ள தென்று சிவ தருமோத்திர ஆகமத்திற் கூறப்பட்டது. அதன் கோபுர வியலுள்,

> " வீற்றிருக்கும் விமலனது சன்னிதியில்
> வெள்விடையும் விளங்கு மந்த
> ஏற்றினயல் நந்தைமுதல் இசைந்துறையும் "
>
> —கோபுரவியல் கக.

என்றது காண்க.

மேற்கூறிய புறப்பாட்டில் முக்கட் செல்வராகிய சிவபெருமான் கோயிலையன்றி வேறொன்றையும் முதுகுடுமி வலஞ்செய்யா னென்றும், பகைவர்பாற் கொண்ட பல பொருளையும் பரிசிலர்க்கு வழங்கிவந்தா னென்றும், நான்மறை முனிவரால் வாழ்த்தப்பட்டானென்றும் புலவர் இயம்பியுள்ளார். முதுகுடுமி சைவனாதலின் இங்கே குறித்த நான்மறை முனிவர் சிவநெறி யொழுகுந் தமிழ்

நாட்டு அந்தணரா யிருத்தல் வேண்டும். கோயிலென்ட தற்கு நகர் என்ற சொல் வந்தமை காண்க. அச்சொல் நகு என்பதனடியாகப் பிறந்து விளக்கமுடைய இட மென்று பொருள்படும். அரசரை ஈகைபற்றித் திங்களுக் கும், பகைவரை வெல்லுந் திறமைபற்றி ஞாயிற்றிற்கும் ஒப்பிடும் பாட்டு மரபு இப்புலவர் செய்யுளுட் காணப் படுகின்றது.

## நெட்டிமையார்.

முதுகுடுமியை நெட்டிமையா ரென்ற புலவர் புறம். ௯, கஉ, கரு-ம் பாடல்களிற் பாடியுள்ளார். நீண்ட இமை யுடைமையால் இவர்க்கு இப்பெயர் வந்ததென்ப. முது குடுமி அறப்போர் செய்யுந் தன்மையுடையா னென் பதும், பாணர்க்குப் பொற்றாமரையும் யானையுந் தேரும் வழங்குபவ னென்பதும், பகைவர் அரண்களை அழித்து அவை இருந்த இடத்தைக் கழுதையைக்கொண்டு பாழ் படுத்தும் வழக்கம் அக்காலத் திருந்ததென்பதும், முதுகுடுமி வேள்விகள் பல வேட்டனனென்பதும் இப் புலவர் எடுத்து விதந்தனர். "நெய்மலி ஆவுதி பொங்க" என்றதனால் ஊன் பயிலாவேள்விகளே அவன் செய்தா னென்று கொள்ள இடமுண்டு. வேள்வி முடிந்த இடத் தில் நினைவுக்குறியாகத் தூண் நடுதல் அக்காலத்துவழக்க மென்பது "வேள்விமுற்றி யூபநட்ட வியன்களம் பல கொல்"* என்றதாற் றெளியப்படும். "நற்பனுவல் நால் வேதம்"† என்றதால் அறம் பொருள் இன்பம் வீடு என் னும் நாற்பொருள் கூறும் நான்மறையென்பது குறிக்கப் படும்.

---

*புறம். கரு: உ0, உக.

## நெடும்பல்லியத்தனார்

நெடும் பல்லியத்தனார் என்னும் புலவர் முதுகுடுமியைப் பாடிய பாட்டினால் அவர் பாண மரபின ரென்பதும், பெருவழுதியின் வண்மையால் வறுமை தீர்ந்தன ரென்பதும் தெரிகிறது. இவர் பாடிய பாட்டு ஒருபாணன் தன் மனைவியாகிய விறலியை அரசன்பால் ஆற்றுப்படுத்ததாக அமைந்திருப்பதால் அது விறலி யாற்றுப்படையாகும்.

## உதியஞ்சேரல்.

உதியஞ் சேரலென்னும் சேர அரசன் கி. மு. இரண்டாம் நூற்றாண்டிற் சிறப்புற்று விளங்கியதாகத் தெரிகிறது. இவனுடைய சிறப்பை இவனுக்குப் பிற்காலத்திற் றிகழ்ந்த வெள்ளி வீதியார் (அகம். சரு) கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, நக்கீரர் முதலிய புலவர்கள் தங்கள் பாடல்களில் (அகம். கருஅ:௩அக) விதந்து கூறியுள்ளார்கள். வெள்ளி வீதியார் பாடலினால் இவன் வேலினாற் கடலோட்டினா னென்றும், மாக்கோதை பாடலினால் இவன் கொழுமூர் என்னுமிடத்தில் அட்டிலமைத்துச் சோறு வழங்கினானென்றும் அறிகின்றோம். இவனது வண்மையும் இவனது முன்னோரது வண்மையும் வியந்து பாடிய பெரும்புலவர் மாமூலனாரென்பார். (அகம். கூரு, க0அ, ௩௫க) இப்புலவர் முக்காலமும் உணர்ந்தவரென்று நச்சினார்க்கினியராற் போற்றப்படுகிறார்.* இவர் அகநானூற்றில் இருபத்தேழு பாடல்கள் பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் நற்றிணை குறுந்

* புறம் கரு: கஎ.

தொகையிலுமுள. இவர் உதியஞ்சேரலை நேராகவிளித்த பாடல்கள் காணப்படாமையானும், அவனுக்குப் பிற்காலத்து நடந்த வரலாறுகளைக் கூறுதலானும் இவர் உதியஞ்சேரல்காலத்துக்குப்பின் பரணரோடு ஒத்தகாலத்தவரென்று கருத இடமுண்டு. ஆனாலும் இவர் அவர்க்கு முற்பட்டவர். இவர் பாடல்களிலே பல குறுநில மன்னருடைய வரலாற்றுப் பகுதிகள் அறியக்கிடக்கின்றன. இவர் நன்னனுடைய பாழியையும்(அகம். கரு), எழிற்குன்றத்தையும் (அகம். ஙசக) பாடியுள்ளார். அவனது வியலூரையும் (அகம். கள) பாடினர்.

### நெடுவேளாவி.

பேகன் முன்னோனாகிய நெடுவேளாவி யென்னுங் கொடையாளியும் இவரால் அகத்துப் பாடப் பெற்றவன். அவன் பொதினியில் ஆட்சி செய்தவன். ஆவிய ரென்னும் ஒரு கூட்டத்தாருக்குத் தலைவன். பொதினி யென்பதே பிற்காலத்தில் பழனியென்று மருவிய தென்ப.

### மாழலனூர்.

மழவரென்பார் அதிகன் என்னுங் குறுநில மன்னனைத் தமக்குத் தலைவனாக வுடையவர். அவர்கள் செம்மறியாட்டுக் கொம்புபோலச் சுருண்டு முதுகினை மறைத்த தலைமயிரையும் செங்கண்ணையு முடையவர்கள். அவர்கள் இருமலை நீக்கும் மண்போன்ற ஒருவகை மருந்தினை வாயிற்கொண்டு வில்லும் தீப்பற்றிய சிறுகோலும் உடையராய் நிரைகவரும் சூழ்ச்சியை அகம். கoக-ல் மாமூலனார் இனிது பாடியுள்ளார். அவர்களது பூந்தொடை விழாவையும் அவர் அகம் கருஎ-ல் குறித்துள்ளார். இன்

னும் இவருடைய பாடல்களால் எவ்வி, கண்ணன், எழினி, புல்லி, பாணன், திதியன் என்னும் பல சிற்றரசர்கள் செய்தியும் அறியக் கிடக்கின்றது. கள்வர் கோமானய் வேங்கடத்தை ஆண்ட புல்லி இவராற் குறிக்கப் பெற்றுள்ளான். பாணன் என்பானது நாடும் வடநாட்டில் உள்ளதாகவே அகம். ௬உரு-ல் விளங்குகின்றது.

மோரியர் என்பார் வடக்கேயிருந்து தெற்கே வந்ததும், தங்கள் தேர் செல்லும்படியாக மலைப்பகுதிகளில் வழியமைத்ததும், மோகூரிலிருந்த பழையன் என்பான் பணியாமையினல் அவர்கள் படையெடுத்து வந்ததும், அவர்கள் வடுகரை முன்னகக் கொண்டு போந்ததும் அகம். உருக, உஅக-ம் பாடல்களால் விளங்கும். நந்தர் என்பார் வடநாட்டில் பாடலிபுரத்தில் கங்கை நீருள் தமது நிதியை மறைத்து வைத்ததை அகம். உகூரு-ல் புலவர் விளக்கி யுள்ளார். கோசர் பொதியிலில் இருந்ததையும் இவர் கூறியுள்ளார். சோழனது வீரனகிய மத்தி என்பவனுக்கும் எழினி என்பவனுக்கும் நிகழ்ந்த போரினை அகம். உகக-ல் கூறினர். பாண்டியரது கொற்கையில் முத்தும் வலம்புரிச் சங்கும் எடுப்பதைப்பற்றி அகம். உ0க-ல் எடுத்துரைக்கின்றார். மோரியரை ஆதனுங்கன் என்பவன் வென்றதாகப் புறம். கஎரு-ல் கள்ளில் ஆத்திரையனர் என்னும் புலவர் பாடினர். அப்புலவர் அவனைப் புறம். ௬அகூலும் பாடியுள்ளார். கள்ளில் என்பது தொண்டை நாட்டிலுள்ள இவரது ஊர். இவர் பாடலொன்று குறுந்தொகையிலுங் காணப்படுகின்றது. ஓரம்போகியா ரென்னும்புலவர் மத்தியின் காலத்திலிருந்

ததாகத் தெரிகிறது. அவர் ஐங்குறு நூற்றில் மருதத்திற் குரிய நூறு பாட்டுப் பாடியவர். அகத்திலும் மருதத் தையே இவர் பாடியுள்ளார். இவரது பாடல்கள் நற்றிணை யிலுங் குறுந்தொகையிலும் வந்துள்ளன. கரிகால்வளவ னுக்கும் பெருஞ் சேரலாதனுக்கும் நடந்த போரினையும் அதிற் சேரலாதன் புறப்புண்பட்டு நாணி வடக்கிருந்த தையும் அகம். ருரு-வது பாட்டிலும், அவன் இமயம் வரைசென்று வெற்றி பெற்றதை அகம். நூசஎ-வது பாட்டிலும் பகர்ந்தனர். இவர் பல்யானைச் செல்கெழு குட்டுவன் காலமுதல் பெருஞ்சேரலாதன் காலம்வரை திகழ்ந்ததாகக் கூறலாம். இவர் பாலைத்திணையைப் புனைந் துரைப்பதில் தலைசிறந்தவர்.

தித்தன், பெரும்பூட் சென்னி என்னும் சோழ மன்னர்கள் ஒரு காலத்தவர்கள். அவர் காலத்திலே திகழ்ந்த சேர அரசன் பல்யானைச் செல்கெழுகுட்டுவனு யிருத்தல்கூடும். தித்தனைப் பரணர் அகம். கூ, கஉஉ, கருஉ உஉகூ-ற் பாடியுள்ளார். வீரைவெளியன் தித்தன் என்ப வன் இவனே வேறோ விளங்கவில்லை. வெளியனென்ற அடைமொழி தித்தனுக்கும் உண்டு.

பெரும்பூட் சென்னியைக் குடவாயிற் கீரத்தனர் என்னும் புலவர் அகம். சச-ற் பாடியுள்ளார். அவன் பகைவரைவென்று கழுமலத்தைக் கைப்பற்றிக்கொண் டதை இவர் எடுத்து இயம்பினர். பெரும்பூட் சென்னி அட்டிற்சாலை வைத்திருந்த இடம் தஞ்சாவூர்ச் சில்லாவில் குடவாயில் என்னும் ஊராகும். இப்புலவரும் அவ்வூரி

னரே. இவர் அகத்தில் பத்துப்பாடல்கள் பாடியுள்ளார். அகம். கூ0-ம் பாட்டில் தொண்டியிலிருந்த பொறைய னென்னும் அரசனைச் சுட்டியுரைத்தார். இச்செய்யுளால் நெய்தல் நிலமாக்கள்சோற்றையும்புளிக்கறியையும் கொழு மீன் இறைச்சியையும் உண்பது அறியக் கிடக்கின்றது. இவர் பாலைத்திணையை மிகுதியாகப் பாடியுள்ளார். இவர் அகம். ௩சரு-ல் நன்னனது ஏழிற் குன்றத்தில் மழை பொழிந்து அருவிபாய்வதையும் கானமர்செல்வி அக்குன் றத்திற்குக்காப்புத் தெய்வமா யிருப்பதையும் கூறியுள் ளார். ௩கூகூ-ல் எவ்வி யென்னுங் குறுநில மன்னனது நீடல் என்னும் பதிக்கண் நெய்தலும் மருதமும் விரவிக் கிடப்பதை விதந்தோதினர்.

பரணரால் அகம். ௩உஉ-ற் பாடப் பெற்ற திதிய னென்னுங் குறுநில மன்னன் ஒல்லையூர் தந்த பூதப்பாண் டியனாலும், மாமூலராலும் பாடப்பெற்றுள்ளான். ஒல்லை யூர் தந்த பூதப்பாண்டியன் காலமும் மாமூலர்பாடிய திதியன், பெரும்பூட்சென்னி முதலியோர் காலமு மொன் றென்று தோன்றுகின்றது. திதியன் பாண்டியனுக்கு நண்பன். அகம். உரு-ல் பாண்டியன் அவனைப் பாடியுள் ளான். இவன் புறநானூற்றில் எக-வது பாடலில் பகை மன்னர் பலர் ஒன்று சேர்ந்து எதிர்த்த இடத்து அவர் களைப் புறங்காணாவிடில் தன்னுடைய மனைவியையும் நண் பர்களையும் தான் பிரிந்து விடுவதாகவும், முறை பிறழ்ந்து நடப்பவனைக் கொண்டு நீதி செலுத்தியோ னுவனென

வும், சிறந்த பாண்டிய நாட்டினைக் கடந்து பிறநாட்டிற் பிறப்பதாகவும் வஞ்சினங் கூறியதால் இவன் மனைவி கற்பிலும் அன்பிலும் சிறந்தவளென்றும், இவன் தன் நாட்டில் அளவற்ற பற்றுடையவ னென்றும், முறைதவறாத செங்கோலுடையவ னென்றும், இவன் நண்பர்களும் மிக மெய்ம்மையான அன்புடையவர்களென்றும் தெரிகின்றது. இவன் இறந்தகாலை இவன் மனைவி தீப்பாய்ந்தனள். தீப்பாயுமுன் றடுத்த சான்றோர்களை நோக்கிக் கைம்மை நோன்பு தனக்காகாது என்றும், கணவன் இறந்தபோது தாமரைப் பொய்கையும் தீயும் ஒரு தன்மையனவாய்த் தனக்கு இருப்பனவென்றும் புறம். உசசு-ற் கூறினள். இவள்பாடியபாட்டினுள் அக்காலத்தே நெய்கலவாதசோற்றினை வெள்ளெள்ளுத் துவையலோடும், புளிசேர்த்து வேகவைத்தவேளைக்கீரையோடும்உண்டு,பாயில்லாதபருக்கைக் கற்கள் மேலே படுத்தல் கைம்மை நோன்புகைக் கொண்டவர்களது வழக்கமென்று தெரிகின்றது. இவள் தலைவிரிகோலமாய்ப் புறங்காட்டிற் சென்று தீப்பாய்வதைக் கண்டு இரங்கி மதுரைப் பேராலவாயார் பாடிய பாட்டு புறம். உசஎ.

ஒல்லையூர், இருங்கோ வேளுக்குரிய ஊர்போலும். அவ்வூரில் ஆயன் செங்கணாரென்னும் புலவர் ஒருவர் திகழ்ந்தனர். அவரது பாடல் அகத்துட் காணப்படுகின்றது.

ஒல்லையூர்க்கிழான் மகன் பெருஞ்சாத்தனைத் தோடித் தலை விழுத்தண்டினார் என்னும் புலவர் புறம். உசரு-ற்

பாடியுள்ளார். அப்புலவர் இளமை நிலையாமையைப் பற்றிப் பாடிய இப்பாட்டில்,

"தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே"

என்றமையால் அப்பெயரெய்தினர் போலும்!

தித்தன் மகன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளி முக்காவனாட்டு ஆமூர் மல்லனைப் பொருது கொன்றடைந்த வெற்றியைச் சாத்தந்தையா ரென்னும் புலவர் புறம். அ0, அ உ-ற் புகழ்ந்து பாடினர். இவர் திணை மொழி பாடிய கண்ணஞ் சேந்தனாரின் தந்தையென்ப.

பெருங் கோழியென்னு மூரிற் சிறப்புற்றிருந்த நாய்கன் ஒருவன் மகள் நக்கண்ணையாரென்னும் புலவர், போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் மீதுள்ளகாதலால் கைக்கிளையாகப் பாடிய பாடல்கள் புறம். அக, அச, அரு. அக்கிள்ளியின் செவிலித்தாயாகிய காவற்பெண்டு என்பவள் அவனைக் காணும் இடம் செருக்களமென்று அவன் வீரத்தைப் பாடியபாட்டு, அசு. அது ஏறாண் முல்லை யென்னுந்துறை.

பெரும்பூட் சென்னிக்குப் பின் அரசாண்ட நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி என்பவன் சேரமானது ஊராகிய பாமமூர் என்னும் ஊரை முற்றுகைசெய்து வென்றவனாவான். இவன் மிக்க வன்மையுடையவன். ஊன் போதிபசுங் குடையார் என்பவர் இவனைப் புறநானூற்றுட் பாடியுள்ளார். அவர்பாடிய புறம். க0-வது பாட்

டினுள் இம் மன்னன், மக்களை அளந்தறிவதில் திறமை யுடையவ னென்பதையும், ஒழுக்கம், இரக்கம், ஆய்ந்து செயல், வீரம் என்னுந் தன்மைகளை யுடையவனாய், நறு மணங் கமழும் தாளிப்புடைய உணவை விருந்தினர்க்கு அளிப்பவ னென்பதையும் குறிப்பித்தனர். இவர்பரிசில் கடாநிலையாகப் பாடியது புறம். உ0௩. புறம். ௩எஅ-ல் இளஞ்சேட்சென்னி தென்பால் பரதவரென்னும் கூட்டத் தாரையும் வடபால் வடுக ரென்பாரையும் வென் றோட்டி யதனைக் கூறியுள்ளார். அவர்பாற் கொண்ட மிகுந்த அணிகலங்களைப் புலவர் தம்முடைய உறவினர்க்குக் கொடுத்தகாலை அவர்கள் நெடுநாளிருந்த வறுமை தீர்ந்து பெருமகிழ்ச்சியால், சீதையை இராவணன் கவர்ந்து சென்றபோது அவள் கீழே யெறிந்த அணிகளைக் கண் டெடுத்துத் தவறாக அணிந்த குரங்கின் கூட்டம் போல, விரலில் அணிவதைச் செவியில் அணிந்தும் செவியிலணி வதை விரலிலணிந்தும் அரையிலணிவதைக் கழுத்தி லணிந்தும் கழுத்திலணிவதை அரையிலணிந்தும் இடர்ப் பட்டனரென்று இயம்பினர். இதனால் இவர் நகைச்சுவை பயக்கும் பாடல் பாடுவதில் வல்லவ ரென்று தோன்று கின்றது. இராமன் கதை இப்பாட்டினுள் வந்தது உற்றுநோக்கத் தக்கது.

இளஞ்சேட் சென்னியை அகம்: ௩எ௫-ல் இடை யன் சேந்தன் கொற்றனா ரென்னும் புலவர் பாடினர்.

## பரணரும் அவர் காலத்துப் புலவரும்.

கடைச்சங்கத்தார் காலத்துச் சிறந்து விளங்கிய பெரும்புலவர் மூவருள்ளும் முற்பட்டவர் **பரணராவார்.**

இவர் அகநானூற்றுள் ஏறக்குறைய ௩௪-பாடல்களும், புறத்துள் கரு-பாடல்களும் பாடியுள்ளார். நற்றிணையி லும், குறுந்தொகையிலும் இவர் பாட்டுக்களுள்ளன.. பதிற்றுப்பத்தில் ரு-ம்பத்து இவரால் பாடப்பெற்றது. இவர் இன்ன ஊரார், இன்ன குலத்தாரென்று தெளிவாய் விளங்கவில்லை. பதினோராந் திருமுறையில் சிவபெரு மான் திருவந்தாதி யொன்று இவர் பாடியதென்ப. நெடுங் கழுத்துப் பரணர், வன்பரணர் என்பவர் இவரின் வேறு வர். பரணிநாளிற் பிறந்தமையால் இப்பெயர் வந்த தென்று கூறுவாருமுளர். செங்குட்டுவனை இவர் பாடி யிருப்பதால் இவர் அவன் காலத்தவரென்பது தெளிவு. உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியின் ஆயுதச் சிறப் பையும் படைச்சிறப்பையும் இவர் உவமை நயந் தோன் றப் புறம். ௪-ற்பாடியுள்ளார்.

> " தாயில் தூவாக் குழவி போல
> ஓவாது கூஉம்நின் உடற்றியோர் நாடே "

என்றது காண்க.

குடக்கோ நெடுஞ்சேரலாதனும், வேற்பல் தடக் கைப் பெருநற்கிள்ளியும் போர்செய்து வீழ்ந்து இறந்த விடத்துப் பரணர் பாடிய பாட்டு புறம். சுந-வது. அத னுள் நால்வகைச் சேனையும் செயலற்றிருந்த இரக்கமான நிலையை எடுத்துரைத்தார். அதிகமான் நெடுமானஞ்சி யைப் பரணர் தமக்கு முன் பாடியதாக ஔவையார் புறம். கூகூ-ற் கூறியுள்ளார். செங்குட்டுவனது போர்க் களத்தை ஏர்க்களத்திற்கு உவமித்து இவர் பாடிய பாட்டு

புறம். ௩௬௬. தழும்பன் என்பவனைப்பற்றிப் புறம் ௩௪அ-லும் தித்தன் என்னும் சோழனைப்பற்றி ௩௫௨-லும் இவர் குறித்துள்ளமையால், அவர்கள் இவர் காலத்திற்கு முற்பட்டவர்களென்று கருத இடமுண்டு.

வையாவிக்கோப் பெரும்பேகனை இவர் பாடிய புறம். கசக-வது பாட்டு பாணாற்றுப் படையாகவும் புலவராற்றுப் படையாகவு மிருக்கிறது. அப்பாட்டிற் பேகனென்பான் மறுமை நோக்காது வறுமை நோக்கி ஈயும் வண்மையுடையவ னென்றும், புறம். கசஉ-ல் அவன் கொடைமடம் படுத லல்லது படை மடம் படானென்றும் பாடினர். அவன் மயிலுக்குக் குளிர் நீங்குதற் பொருட்டுப் போர்வை கொடுத்தவனென்பது புறம். கசக-வது பாட்டாலும், கசரு-வது பாட்டாலும் விளங்குகின்றது. பேகனால் கைவிடப் பட்ட கண்ணகி யென்பவளை அவன் மீண்டும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று அவனைப் புறம் கசஈ-வது, கசரு-வது பாட்டுகளில் இவர் வேண்டியுள்ளார்.

தித்தனைப்பற்றி அகம். ௬, கஉஉ-லும், செழியன் கூடற்போரைப் பற்றி அகம். கக௬-லும், பசும் பூட் பாண்டியனைப்பற்றி க௬உ-லும், கரிகால்வளவனைப்பற்றி ௧உரு-லும், அவன் வேளிர் பதினொருவரை வெண்ணிப் பறந்தலையில் வென்றதைப்பற்றி உசசு-லும், மாந்தரின் பொறையன் கடுங்கோவைப்பற்றி கசஉ-லும், செங்குட்டுவனைப் பற்றி உகஉ-லும் பாடியிருப்பதால் இவர் காலத்துப் பெரு வேந்தர்களுள் இவராற் பாடப் பெறுதாரில்லை.

கரிகால் வளவன் மகளாகிய ஆதிமந்தி தன் கணவனாகிய ஆட்டனத்தியென்னும் சேர அரசனைக் காவிரிப்புதுப் புனல் விழாக்கொண்டாடும் கழார்ப் பெருந்துறையில் தப்பவிட்டு வருந்திக் கடற்கரைக்குச் சென்று மருதி யென்பவளது உதவியால் அவனைக் கண்டு மீட்டுவந்த கதையினை அகம். எசு. உஉஉ, உருசு-ம் செய்யுட்களில் இவர் குறித்துள்ளார்.

இவர் குறுநில மன்னருள் சோழன் வீரனாகிய மத்தி யென்பவனை அகம். சு-வது பாட்டிலும், பரிசிலர்க்கு யானையும் நன்கலனும் அளிக்கும் அஃதை யென்பவனை அகம். எசு-வது பாட்டிலும், கழுவுள் என்பவனை கருரு-வது பாட்டிலும், நன்னனை கருஉ, உருஅ, உ௰அ-ம் பாட்டுகளிலும், பொதியிற் றலைவனாகிய திதியனை ருஉஉ-வது பாட்டிலும், சோழன் படைத் தலைவனாகிய பழையன் என்பவனை ருஉசு-லும், கோசராற் கண் களையப்பட்ட அன்னி யென்பவன் கதையை உகூஉ-லும், ஆய் எயினன், மிஞிலி என்பவருக்குள் நடந்த போரினை கசஅ-லும், எவ்வி நீரேர் கிழவோன் என்பவனை உகூகூ-லும், வல்லன்கிழான் என்பவனை ருருசு-லும் பாணன், ஆரியப் பொருநன் என்பவர்களை ருஅகூ-லும் குறித்துரைத்தனர்.

பரணர் ஆரியரைப்பற்றி உஎசு-ரு௰சு என்பவைகளிற் பேசியுள்ளார். கொல்லி மலையிலுள்ள கடவுள் எழுதிய பாவையைப்பற்றி அகம். கூஉ-லும், கவிரமலையிலுள்ள சூர்மகளைப்பற்றி ககூஅ-லும் இவர் பாடியிருக்

கின்றார். இவர் ஆலமுற்றம் என்னுமிடம் சிவனார்க்கு உரியது என்று கூறிய அகம். கஅக-ல் அவரை,

"நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆலமுற்றங் கவின் பெறத் தைஇப்
பொய்கை சூழ்ந்த பொழின்மனை மகளிர்
கைசெய் பாவை துறைக்க ணிறுக்கும்"

என்றது காண்க.

பரணர் ஆனைகளை மிகுதியாகவுடைய ஆயைப் பற்றி அகம். கருஉ-லும், பிறவிடங்களிலுங் குறித்துள் ளார். இவர் மருதம், குறிஞ்சி, பாலையென்னும் முத்தி ணையுமே மிகுதியாகப் பாடியுள்ளார். அக்காலத்தில் இரவலர்க்கு ஆம்பல் இலையில் சுடுசோற்றினை இனிய புளிப்புடைய பிரம்பின் பழங்களோடு கலந்து விடியற் காலத்தில் இடுவதை இவர் அகம். கூகூ-ல் குறித்தமை காண்க. இவர் செங்குட்டுவனைப்பாடி உம்பற்காட்டு வரும் படியையும் அவன் மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலா கப் பெற்றனர்.

இவரோடு ஒரு காலத்தவரான **கழாஅத்தலையார்** என்னும் புலவர் குடக்கோ நெடுஞ்சேரலாதன் பொருது வீழ்ந் திறந்ததைக்கண்டு நெஞ்சம் வருந்திப் பாடிய பாடல் புறம். கூஉ. போர்க்களத்தில் பருந்தும் பேயும் பொருந்துவதைப்பற்றியும், பல்வேறு மொழிகள் பேசும் படைகள் துணைபுரிவதைப் பற்றியும் இப்பாட்டினுள் இயம்பினர். இறந்த வீரரின் பெண்டிர் 'பச்சிலை தின்று குளிர் நீரில் முழுகாது கிடந்தனர்' என்றமையால், அங்ஙனஞ் செய்தல் அக்காலத்துக் கைம்மை வழக்க மென்று தெரிகிறது. மேலும் அப்பெண்டிர் போர்க்களத்

திற் சென்று தங்கணவருடன் உயிர்விடுங் கற்புடைய ராய்த் திகழ்ந்தனரென்றும் விளங்குகின்றது. அவர் புறம். சுசுரு-ல் பெருஞ் சேரலாதன் கரிகாலனொடு பொருது வடக்கிருந்தானைக் கையறு நிலையாகப் பாடினர். சுசுஅ-லும் அவர்உயிர் போகாதுபோர்க்களத்திற் கிடந்து வருந்துபவனைப் பற்றி இரங்கிப் பாடினது காண்க. இவர் பாடிய பாடல்கள் மிகுதியுங் கையறுநிலையே. இருங்கோ வேள் என்பவன் இவரை இகழ்ந்ததாகப் புறம். உ0உ-ல் கபிலர் கூறுவதால், இப்புலவர் கபிலர்க்கு முற்பட்டவ ரென்பது தெளிவு.

உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னியையும் பேக னையும் பெருங்குன்றூர்கிழார் என்னும் புலவரொருவர் பாடியுள்ளார். இப்புலவரும் சேரமான் இளஞ்சேர லிரும் பொறையைப் பதிற்றுப்பத்திற் பாடிய பெருங்குன்றூர்க் கிழாரும் ஒருவரேயென்னில், இவர் பரணர்க்குப்பின் வந் தவராய்ப் பேகன் காலத்திலே மிகவும் இளைஞராயிருந்து நெடுங்கால மிருந்திருக்கவேண்டும். இவரைப் பற்றிப் பின் ஆராய்வோம். அவ்வாறே அரிசில் கிழாரும் நீண்ட ஆயுளுடையரா யிருந்திருத்தல் வேண்டும். வன்பரணர் என்பவர் பரணருக்குப் பிற்பட்டவர். அவரும் பேகனைப் பாடியுள்ளார். நெடுங்கழுத்துப் பரணரென்பவர் வேத் தியல் என்னுந் துறையைப் புறம். உககக-ற் பாடினர். இவர் பாடிய வேந்தன் இன்னுரென்று விளங்கவில்லை. இவர் பாடியபாட்டினுள் பாணரை நோக்கி இனி தூய வெள்ளிய ஆடையுடுத்துப் பறவைகள்போல் ஆரவாரம் செய்தலையொழித்தல் வேண்டுமென்றும், பண்ணுகிய

இரங்கற்பண்ணைப் பாடுவதால் போர்க்களத்தைவிட்டு நா கனை ஓட்டலாமென்றுங் கூறியது காண்க.

செங்குட்டுவன் காலத்தோடு ஒத்த காலத்தவனாகிய கரிகால் வளவனது அம்மானாகிய இரும்பிடர்த் தலையா ரென்பவர் கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி யென்னும் பாண்டியனது வீரத்தையும், இரவலர்க்குக் குறிப்பறிந்து கொடுக்கும் அவன் வண்மையையும் புறம். ந-வது பாட்டில் பாடியுள்ளார். அப்பாட்டினுள் இவர் 'பெருங்கையானை இரும்பிடர்த்தலை யிருந்து' என்றமை யால் இவருக்கு இப்பெயர் வந்ததுபோலும். செங்குட்டு வனது முன்னோனாய்க் கரிகால்வளவனோடு பொருது புறப் புண்நாணி வடக்கிருந்த பெருஞ்சேரலாதனைப் போர் நடந்த இடமாகிய வெண்ணியிலிருந்த புலமை மிக்க குயத்தியாரோருவர் புகழ்ந்து பாடிய பாட்டு புறம். சுசு. இதனுள் கரிகாலன் கடற்போர் செய்வதில் வல்லவ னென்றும், வெற்றியடைந்த அவனைப்பார்க்கிலும் வடக் கிருந்த சேரலாதனே சிறந்தவனென்றும் புலவர் பாடி னதுகாண்க.

கரிகாற் பெருவளத்தானைப் பாடிய மற்றொரு புல வர் கருங்குழலாதனா ரென்பவர். அவர் புறம். எ-வது பாட்டில் அவனது வண்மையையும் எழிலையும் வீரத்தை யும் நாட்டு வளத்தையும் இனிதெடுத்து இயம்பினார். புறம். உஉச-ள் அவன் பாணரைப் பாதுகாத்தமையும் வேதவேள்வி முடித்தமையும் கூறி, அவன் இறந்தமை

பால் முதுவை மகளிரெல்லாம் அணிகளைந்தன ரென்றும் உலகமே இரங்கத்தக்க தென்றும் உரைத்தார்.

கரிகாலனைப் **பட்டினப் பாலையிற்** பாடினவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார். இவர் அவனிடம் பதினாறு நூறாயிரம் பொன் பரிசிலாகப் பெற்றார். பொருந ராற்றுப் படையிலும் இவன் கதை கூறப்பட்டுள்ளது. இவனால் வெண்ணியில் வெல்லப்பட்ட பாண்டியன் கருங்கை யொள்வாள் வழுதிக்குப் பிற்பட்டவனாதல் வேண்டும். குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனும் கரிகாலனும் ஒருவரேயென்றால், பெருந்திருமாவளவனைப் பாடிய புலவர்களும் கரிகால் வளவன் காலத்தவரேயாவர். அகம். கசக-ல் கரிகாலனைப்பாடிய நக்கீரர் பெருந்திருமா வளவனுக்குப் பின் நெடுங்கால மிருந்திருக்கவேண்டும். அல்லது அவர் தலையாலங்கானத்து நெடுஞ்செழியனைப்பாடிய நக்கீரரின் வேறாவர்.

பெருந்திருமாவளவனைப் பாடியபெரும்புலவர் காவிரிப்பூம் பட்டினத்துக் **காரிக்கண்ணனார்**. காரிக் கண்ணனாரென்பது கருங்குருவியின் கண்போன்ற கண்ணையுடையவரென்று பொருள்படும். இவர் குலத்தால் வணிகர். அகத்துள்ளுங் குறுந்தொகையுள்ளும் இவர்பாடியிருந்தாலும் புறநானூற்றினுள்ளேயே இவர் பாடல்கள் மிகுதியுங் காணப்படுகின்றன. அகம். கOஎ-ல் தேக்கிலையில் வடுகர் தயிர்ச்சோறுண்ணும் வழக்கத்தை இவர் குறித்தது காண்க. அவரைக் "கல்லா நீண்மொழிக் கதநாய் வடுக' ரென்றார். புறம். ருஅ-ல் இப்புலவர் பெருந்

திருமா வளவனும் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்த போது அவர்களை நோக்கி இருவரும் ஒற்றுமை யுடையராயிருக்க வேண்டுமென்றும், புறங்கூறுவார் சொற்கேட்டுத் தம்முள் பகைக்கொள்ளக் கூடாதென்றும் ஒற்றுமையால் இருவரும் நாடுகள் பலவற்றை வென்று எல்லா மலைச்சிகரங்களிலும் புலிப் பொறியையுங் கயற் பொறியையும் பொறிக்க வேண்டுமென்றுங் கூறியது மிகவும் அழகா யிருக்கின்றது. புறம். ருஎ-ல் நன்மாறனை நோக்கிப் பகைவர் நாட்டுக் காவல் மரங்களை வெட்டுதல் கூடாதென்று இவர் வற்புறுத்துவதால், அவை அக்காலத்தே மிகப் புனிதமாகக் கருதப் பட்டன வென்பது தெரிகிறது.

பெருந்திருமா வளவனைப் பாடிய மற்றொரு புலவர் உறையூர் மருத்துவன் தாமோதரனார் என்பவர். இவர் புறம். கூ0-ல் வளவனைக் கடற்கரையிலிருந்து உப்புச் சுமைதாங்கி மலைக்கேகும் வலிய பகட்டிற்கு உவமித்தார். தாமோதரனாரென்ற பெயரால் இவரைத் திருமால் சமயத்தவரென்ப.

அவனைப் பாடிய மற்றொரு புலவர் கோனாட்டு எரிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனாரென்பவர். இவர் குட்டுவன் கோதையையும் இலவந்திகை நலங்கிள்ளி சேட் சென்னியையும் பாடியிருப்பதால், அம்மன்னர் திருமா வளவன் காலத்தவரா யிருக்கலாம். இவர் குறுநில மன்னர்களாகிய ஏனாதி திருக்கிள்ளியைப் புறம். ககூஎ-லும், ஈர்ந்தூர் கிழான் தோயன்மாறனைப் புறம். கஅ0-

னும், ஏனாதி திருக்குட்டுவனைப் புறம். ருகசு-லும் பாடியுள்ளார். பரிசில் நீட்டித்ததற்காகப் பெருந் திருமாவளவனை இவர் கடிந்து பாடிய புறம். கருஎ-ம் பாட்டில் அறிவில்லாதவருடைய செல்வத்தைப் பார்க்கிலும் நல்லறிவாளரது வறுமையைத் தாம் உவப்பதாகக் கூறியுள்ளார்.

> " மிகப்பே ரெவ்வ முறினு மெனைத்து
> முணர்ச்சி யில்லோ ருடைமை யுள்ளேம்
> நல்லறி வுடையோர் நல்குர
> வுள்ளுதும் பெரும யாமுவந்துநனி பெரிதே "

என்றது காண்க.

பரணர் பாடிய அஃதையின் சிறப்பை வெள்ளெருக்கிலையார் என்பவர் புறம். உருரு-ம் பாட்டினுட் குறித்துள்ளார். அவர் எவ்வியைப் பாடிய இரண்டு பாட்டுகளும் அவன் இறந்த பின் பாடப்பட்டவைகளே. புறம். உருசு-ல் எவ்வியின் மனைவி யானையடியளவு மெழுகிய சிறிய இடத்தின்கண்ணே புல்மேல் அவனுக்குப் பிண்டம் வைத்தலைக் குறித்திருப்பது மிகவும் இரக்கத்தை உண்டாக்கக் கூடியது.

பரணர் பாடிய பசும்பூட் பாண்டியன் தலையாலங்கானத்து நெடுஞ்செழியன் அல்லன். மதுரைக் கணக்காயனாரும் (அகம். ருரு அ), நக்கீரரும் (அகம். உருரு) அவனைப் பிற்காலத்தே தமது பாட்டிற் குறித்தனர். அகம். உருக-ல் அவனைப் பாடிய மதுரை ஈழத்துப் பூதன்றேவனார் எக்காலத்தவ ரென்று விளங்கவில்லை. அவர் விலங்கின் குறிப்புக்களை அறிவதில் மிகவல்லவர்போலும். அகம் அஅ-ல் தினைக்கதிரைத் தின்னவரும் பன்றி பல்லிக்குறி பார்த்து வருமென்றும், அசுணமா வண்டின் ஒலியை

யாழோசையோ வென்று கருதுவதாகவும் கூறினது காண்க. ஆரியரைப்பற்றி இம்மென்கீரனார் என்னும் புலவர் அகம் ௩௬அ - ல் பாடி இருக்கின்றார். இவர் குறிஞ்சி பாடுவதில் வல்லவர். இவர் தலைவி இம்மென்று அலமரா நிற்பதாகச் செப்பினமையான், 'இம்மென்' என்ற அடைமொழி இவர் பெயருக்கு ஏற்பட்டது.

சோழர் வல்லத்துப் புறங்காட்டில் ஆரியப்படையினை வென்றதைப் பாவைக் கொட்டிலார் என்னும் புலவர் அகம். ௩௩௬-ல் பாடியுள்ளார். இவர் பாடிய பாட்டில் சேரிப்பரத்தை இற்பரத்தையை இகழ்ந்து கூறிய பகுதி மிகவும் நகைச்சுவை விளக்கவல்லது. யானையின் இரக்கத்தினாலே பாகன் பிழைத்திருப்பதுபோலத் தன் விழவின் கண் வாராமையால் இற்பரத்தை பிழைத்திருப்பதாகச் சேரிப்பரத்தை பேசினாள்.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழிய னென்பவன் செங்குட்டுவன் காலத்தவனே. அவன் புறத்துள் பாடிய ௧௮௩-பாட்டில் கல்வியின் பெருமையை மிகவும் அழகாக விளக்கினன். அதுவருமாறு;

" வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும். "

இவனுக்கு முன்னே பின்னே நம்பி நெடுஞ்செழி யன் என்னும் அரசன் ஆண்டனன். அவனது சிறப் பைப் பேரெயின் முறுவலாரென்னும் புலவர் புறம். உருகூ-ல் நயமிகப் பாடியுள்ளார். இவர் அப்பாட்டினுல் உலகத்திலுள்ள எல்லாவகை யின்பங்களையும் அவன் நுகர்ந்தனன் எனவும், பல்வகை மக்களிடத்து அவரவர் தகுதிக்கேற்ப நடக்குந் தன்மையும் வண்மையு முடை யனு யிருந்தனனெனவும், இனி அவனுக்கு யாது நேரினு மதுபற்றிக் கவலையில்லையெனவுங் கூறினுர். இவர்,

"வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத்தா னிரப்பறியல
னிரந்தோர்க்கு மறுப்பறியலன்"

என்ற அடிகளால் அவனது தகுதியை விளக்கினது காண்க. இப்புலவர் பெயரால் இவர் சோழநாட்டி லுள்ள பேரெயி லென்னுமிடத்தில் வாழ்ந்தவரென்ப. முப்புர மெரித்த சிவபெருமானது திருப்பெயரை உடையவ ரென்றுங் கூறுப.

வஞ்சிநகரத்தி லரசுசெய்த மாந்தரன் பொறையன் கடுங்கோவைப் பரணர் அகத்துள் பாடியுள்ளார். இக் குடும்பத்தைச் சார்ந்த பாலைபாடிய பெருங்கடுங்கோ வென்பவர், அகநானூற்றுள்ளும் புறநானூற்றுள்ளும் சிலபாடல்கள் பாடியுள்ளார். இவர் பாடல்கள் நற்றிணையி லும் உள்ளன. கலித்தொகையில் முதலாவதாகிய பாலைக் கலி இவர் பாடியது. இவர் யாண்டும் பாலையைப் பாடி யுள்ளார். இவரைப் பேய் மகள் இளவெயினி யென்னும்

புலவர் புறநானூற்றுப் பதின்ேறாம் பாட்டிற் பாடினர். பேய்மகள் என்றது பேய்த் தெய்வத்தை வழிபட்டு வருவதால் அதன் வெறி உற்றவளென்பது கருத்து. எயினி யென்றதால் எயினர் மரபினள் இவள் என்பது தெளிவு. இவள் பாடிய பாட்டினுள் மங்கையர்கள் மணற் பாவை செய்து அதற்குப் பூக்கொய்து சாத்துதலும், ஆற்று நீரிற் பாய்ந்து விளையாடுதலும், அரசர்கள் பாண ருக்கும் விறலியர்க்கும் முறையே பொன்னணி கலமும் வெள்ளிநாராற் ெறாடுத்த பொற்றாமரைப் பூவும் பரிசாகக் கொடுப்பதுங் கூறப்பட்டன.

பெருங் கடுங்கோவின் தம்பி மருதம் பாடுவதிற் சிறந்தவர். இவர் அகத்துட் பாடிய கசுசு-ம் பாட்டில் அஃதை யென்னும் பெண்ணின் றந்தை, சோழசேர பாண்டியரைப் பருவூரென்னு மிடத்திற் பொருது வென்ற ெனன்றுங் கூறியுள்ளார். இவர் அகம். கஎசு-ல் மருதநிலக் கருப்பொருளாகிய தாமரை முதலிய வற்றை மிகவும் அழகாகப் புனைந்துரைத்தார். இப்புலவர்,

"கழைகண் டன்ன தூம்புடைத் திரள்காற்
களிற்றுச் செவியன்ன பாசடை மருங்கிற்
கழுநிவந் தன்ன கொழுமுகை யிடையிடை
முறுவன் முகத்திற் பன்மலர் தயங்கப்
பூத்த தாமரைப் புள்ளிமிழ் பழனத்து"

என்றது காண்க.

இப்பாட்டினுள் 'புல்லுளைக் குடுமிப் புதல்வர்' என்றதால் அக்காலத்தில் குழந்தைகளுக்கு அழகிய சிறு குடுமி வைப்பது வழக்கமென்பது தெரிகின்றது.

குடக்கோ நெடுஞ் சேரலாதன் புதல்வன் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைப் பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்துப் பாடியவர் காக்கை பாடினியார் நச்செள்ளையார். இவர் அணிகலனுக்காக ஒன்பது துலாம் பொன்னும், நூறாயிரங் காணமும் பெற்று அரசன் பக்கத் திருக்கும் சிறப்பும் அடைந்தார். இவர் பாடல்கள் புறநானூற்றிலும் குறுந்தொகையிலும் உள்ளன. குறுந்தொகையில் உகO-ம் பாட்டில் "விருந்து வரக்கரைந்த காக்கையது பலியே" என்று காக்கையைச் சிறப்பித்துப் பாடினமையாற் காக்கை பாடினியார் என்ற பெயர் பெற்றனர். வீரத் தாயொருத்தி தன் மகன் போர்க்குப் பின் வாங்கினு னென்று கேள்விப் பட்டு அங்ஙனம் அவன் செய்தால் தனது மார்பினைத் துணிப்பதாக வஞ்சினங் கூறிக் கையிற் கொண்ட வாளோடு போர்க்களத்திற் சென்று தன் மகன் போரிற் பட்டு வீழ்ந்து கிடந்ததைக் கண்டு பெற்றபோழ் தினும் மிக உவந்ததாகப் புறம். உஎஅ-ல் இவர் பாடியுள்ளார். அவ்விடம் வருமாறு:

"செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே"

## கபிலரும் அவர்காலத்துப் புலவரும்.

கபிலர் பிறந்த ஊர் பாண்டிய நாட்டிலுள்ள திருவாதவூரென்று வேப்பத்தூரார் திருவிளையாடலால் தெரிகின்றது. அதனுள், "காதல்கூர் பனுவல் பாடும் கபிலனார் பிறந்த மூதூர்" என்றது காண்க. ஆனால் இவர் பாண்டியனைப்பற்றி மிகுதியாகப் பாடினதாகத் தெரிய

வில்லை. புறம். ௩௩௭-ல் சோழ அரசன் ஒருவனைப்பாடிய விடத்துக் கபிலநகரென்னும் ஓர் ஊரைப்பற்றிக் கபிலரே பேசுகின்றார். அது சோழ நாட்டில் உள்ளதாய இப்புலவருடைய ஊராயிருந்தாலும் இருக்கலாம். 'யானே, பரிசிலன் மன்னு மந்தணன்' என்று இவரும், 'புலன் அழுக்கற்ற அந்தணாளன்' என்று நப்பசலையாரும் கூறினமையால், இவர் அந்தணரென்பது தெரிகிறது.

வையாவிக்கோப் பெரும்பேகனைக் கண்ணகியையேற்றுக்கொள்ளும்படி பரணர் பாடியதுபோலக் கபிலரும் புறம். கசங-ல் அவனை வேண்டிப் பாடியிருக்கின்றார். அதனுள் மழையை வேண்டியும் மழையின்மையை வேண்டியும் குரவர் பலிதூவிக் கடவுளை வழிபடுதல் குறிக்கப்பட்டது. இவர் மழைபோலக் கண்ணீர் பொழிந்து மார்பினை நனைத்துக்கொண்டு குழல்போல இரங்கிக் கண்ணகி யழுதலையுங் குறிப்பித்தார். இதனாற் பரணர் கபிலர் என்னும் இருவரும் ஒரு காலத்தவரென்று தெரிகிறது. இவனைப் பாடுகையில் பரணர் முதியவராயும் கபிலர் இளைஞராயும் இருந்திருக்கவேண்டும். இருவரும் நண்பரென்பது பண்டைக் கதையாகும். பதிற்றுப்பத்தில் ரு-ம் பத்துப் பாடியது பரணர். ரு-ம் பத்துக்குரிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு அரசு வீற்றிருந்தான். ௬-ம் பத்திற்குரியவன் முப்பத்தெட்டு ஆண்டு அரசு வீற்றிருந்தான். ஏழாம்பத்திற்குரியவன் செல்வக் கடுங்கோ வாழியாதன். இவனைப் பாடியவர் கபிலர். இவன் அவருக்கு நூறாயிரங்காணங் கொடுத்துக் குன்று

மேலேற்றிக் கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான். இவர் பத்துப்பாட்டிற் குறிஞ்சிப் பாட்டுப் பாடியவர். ஐங்குறுநூற்றிற் குறிஞ்சித் திணையைக் குறித்து நூறு பாட்டு இவராற் பாடப்பட்டன. கலித் தொகையில் குறிஞ்சியைப் பாடியவரும் இவரே. நற்றிணை யுள்ளுங் குறுந்தொகையுள்ளும் இவர் பாடிய பாடல்கள் உள்ளன. பதினெண் கீழ்க்கணக்கில் இன்னாநாற்பது இவராற் பாடப்பட்டது. சங்கநூல்களில் இவரது பாடல் கள் ஏறக்குறைய இருநூற்று அறுபதுக்கு மேலிருக்கின் றன. பதினோராந் திருமுறையில் மூன்று நூல்கள் இவ ராற் பாடப்பட்டன என்ப. தொல்காப்பியத்திற்கு ஓர் உரை இவராற் செய்யப்பட்டதென்று சொல்கின்றார்கள். அது இப்பொழுது வெளி வரவில்லை. அஃதையென்னும் மதுரை வள்ளலை இவரும் புறம். கசஎ-ற் பாடியுள்ளார்.

சேரமான் கடுங்கோவாழியாதனைப் புறம். ஏ-ல் கபி லர் பாடிய பாட்டு இயன் மொழியென்னுந் துறையின் பாற்படும். திங்களும் ஞாயிறும் அவனுக்கு ஒப்பாகா வென்று இவர் அவனைப் புகழ்ந்தார். புறம். கச-ல் செல் வக்கடுங்கோ வாழியாதன் கபிலர் கையைப் பிடித்து உம் முடைய கைகள் மெல்லியனவா யிருக்கின்றனவே யென்று கூற, அரசன் கை வலிதாயிருப்பதற்கும் தன் கை மெலிதாயிருப்பதற்கும் ஏதுக் கூறுவார்: யானையை யுங் குதிரையையும் வன்மையோடு பிடித்து நடத்தவும், வில்லின் நாணை இறுகப்பிடித்து அம்பைச் செலுத்தவும், பரிசிலர்க்கு அணிகலன்களை யமைக்கவும் பயன்படுவதால் அரசன் கைகள் வன்மை யுடையன வாயினவென்றும்,

அவனளிக்கும் சோற்றையுங் கறியையும் ஊனையும் துவையையும் உண்டு வருந்துஞ் செயலல்லது வேறு செயலினைப் பரிசிலர் கைகள் அறியாவாதலின் அவருள் ஒருவராகிய தமது கை மென்மையுடையதா யிருந்ததென்றுங் குறிப்பித்தார். இவர் போர் வன்மையில் முருகனுக்கு இவ்வரசனை உவமித்தது காண்க. காரி, ஓரி என்பவர்களைப்பற்றிக் குறுந்தொகையிலும் நற்றிணையிலும் இவர் கூறியுள்ளார். அகத்துள் இவர் பாடிய பாடல் யாவும் குறிஞ்சிக்குரியனவே. அகம். உ0ங-ல் இவர் பாலையைப் பாடியுள்ளார். அதனுள்ளுந் தலைவன் தலைவியர்க்குப் பிரிவுகூறாது உடன்போக்கே கூறினர்.

புறத்துள் பாரியைப்பற்றி இவர் பாடிய பாடல் புறம். க0உ. இவர் பாரியைப்பாடியதும் விறலியாற்றுப்படை; புறம். க0கூ-ற் பாரி தன்பால் வந்தயாவர்க்கும் வரையாது கொடுப்பவன் என்பதை விளக்கினர். புறம். க0எ-ல் அவன் வண்மையால் மாரிக்கு ஒப்பாவான் என்பதை இவர் மிகவும் நயமாகக் கூறியுள்ளார். இவர்,

> "பாரி யொருவனு மல்லன்
> மாரியுமுண் டீண் டுலகுபுரப் பதுவே."

என்றது காண்க.

கபிலர் புறம். க0அ-ற் பாரியின் பறம்புமலை, அவனைப் பாடினவர்களுக்குச் சொந்தமென்று கூறிப் புகழ்ந்தனர். இவர் க0கூ-ற் பறம்பு மலையில் நெல்லும், பலாப்பழமும், வள்ளிக்கிழங்கும், தேனுஞ் செழித்திருக்கும் வளத்

தைப் பாடி மூவேந்தருந் தமது படை வலியால் அத னைக் கைப்பற்றுதல் முடியாது: ஆடல் பாடல் வல்ல ராய்ப் பாரிபாற் சென்றால் பரிசிலாக அதனைப் பெறலாம் என்றனர். புறம். கக0, கககம் பாட்டுக்களிலும் இக் கருத்துக்களையே வலியுறுத்திப் பாடினர். புறம். கக0-ம் பாட்டினால் பாரி யென்பவன் பரிசிலர்க்கு முந்நூறு ஊர் கொடுத்ததாகத் தெரிகிறது. மூவேந்தரும் பறம்பு மலையை முற்றுகை செய்து கைப்பற்றிப் பாரியையும் வஞ் சித்துக் கொன்றனர். ஆயகாலை கையறு நிலையாகப் பாரி மகளிர் பாடிய பாட்டு புறம். ககஉ. அது மிகவும் இரக் கத்தை விளைவிப்பது.

பாரியின் மகளிர்க்குக் கணவரைத் தேடிச் சென்ற காலை கபிலர் பறம்பு மலையை நோக்கிப் பாடிய பாட்டு புறம். ககங முதல் கஉ0 முடிய உள்ளனவாகும். புறம். உ00-ல் விச்சுக்கோன்பாற் கபிலர் சென்று முல்லைக் கொடிக்குத் தேர் வழங்கிய பாரியின் புதல்வியரை அவன் மணந்துகொள்ள வேண்டுமென்று விரும்பினர். அவன் மறுத்தபின் இருங்கோவேள் என்பவனிடஞ் சென்று அவனைப் பாரி மகளிரை மணக்கும்படி இவர் வேண்டிப் பாடிய பாட்டு புறம். உ0க. அதனுள் இவர் இருங்கோ வேளின் முன்னோர் வரலாற்றைக் கூறினர். அப்பாட்டி னுட் போந்ததுவரை யென்றது, இருங்கோவேளின் நாட் டிற்கு வடக்கண் இருந்த நாடாகும். துவார சமுத்திர மென்னும் இடமென்றும் அதனைக் கூறுவர். இவ்வேளுக் குப் புலிகடிமா லென்ற பெயர் உண்டு. ஒரு முனிவனது தவத்திற்கு இடையூறியற்றிய புலி யொன்றினைக் கொன்

றமையால், இவனுக்கு இப்பெயர் வந்ததென்ப. இருங்கோவேள் பாரி மகளிரைக் கொள்ள மறுத்தமை கேட்டுப் புலவர் வெகுண்டு பாடின பாட்டுப் புறம். உ0உ. இதனுள் இவ்வேளினுடைய முன்னோனொருவன் கழாத்தலையாரென்னும் புலவரை இகழ்ந்தமைக்காகச் சிற்றரையம் பேரரையம் என்னும் இரண்டு பகுதியுள்ள ஒரு பழைய ஊரினை இழந்தனனென்று இவர் கூறினர்.

பின்னர், புலவர், எவ்விபாற் சென்றனர். எவ்வியும் மறுத்தவழிப் பார்ப்பார் சிலருக்குப் பாரிமகளிரை மணஞ்செய்வித்துத் தான் பின் வடக்கிருந்தபோது பாடிய பாட்டுப் புறம். உஙசு. இதனுள் பாரியைப் புகழ்ந்து பாடி அவனோடு உடன் இறவாததைப்பற்றித் தன்னைக் குறை கூறி அவனை விளித்து 'இப்பிறப்பில் நீயும் யானுங்கூடி இன்புற்றிருந்தமைபோல மறுபிறப்பிலும் இடைவிடாத காட்சியினையுடைய நின்னோடு கூடிவாழ்தலை உயர்ந்த விதி கூட்டுவதாக' என்றுரைத்தனர்.

இவர் மலையமான் திருமுடிக்காரியைப் பாடிய பாட்டுக்கள் புறம் கஉக, கஉஉ, கஉங. அவை மிகவும் நயமானவை. புலவர்க்கு அவரவர் தகுதி யறிந்து கொடுக்க வேண்டுமென்பதைப் புறம் கஉக-ட் குறித்தனர். இவர்;

"..............பரிசில் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிது
மீத லெளிதே"

என்றது காண்க.

இவர் புறம். ௧௨௨-ற் காரி தன் மனைவியைத் தவிர வேறெதையும் இரவலர்க்குக் கொடுக்கும் வண்மையுடையா னென்பதைக் குறிப்பார்,

> " வடமீன் புரையுங் கற்பின் மடமொழி
> யரிவை தோளள வல்லதை
> நினதென விலைநீ பெருமிதத் தையே "

என்றார்.

புறம். ௧௨௪-ல் அவன் வண்மையை இவர் இன்னொரு விதமாகக் குறித்தனர்; ' இரவலர் நல்லநாட் பாராது புள் நிமித்தம் தீயதா யிருப்பவும் அவன்பாற் போகக் கூடாத காலத்திலே போய் நயமில்லாத சொல்லைச் சொன்னாலும் அவர்கள் ஒன்றும் பெறாது சும்மா திரும்பமாட்டார்' என்றனர்.

> " நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
> பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
> வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொள "

என்றது காண்க.

## எழுபெரு வள்ளல்கள்.

கபிலர் காலத்திலே மூவேந்தர்க்கு வேறாக வேளிராய எழுபெரு வள்ளல்கள் புலவர்க்கு வரையாது வழங்கி அவரைப் போற்றி வந்தனர். அவர் யாவரென்பது,

> " முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவு
> மரசுடன் பொருத வண்ண னெடுவரைக்
> கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
> பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசைக்

கொல்லி யாண்ட வல்வி லோரியுங்
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனு
மூரா தேந்திய குதிரைக் கூர்வேற்
கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியு
மீர்ந்தண் சிலம்பி னிருமுங்கு நளிமுழை
யருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப்
பெருங்க லுடன் பேகனுந் திருந்துமொழி
மோசி பாடிய வாயு மார்வமுற்
றுள்ளி வருந ருலைவுநனி தீரத்
தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங் கெழுவர் ''

என்னும் புறப்பாட்டினால் (கருஅ) விளங்கும்.

பேகன் என்பவனைப் பற்றி முன்னேயே கூறினோம். பாரியைப் புறத்திணை நன்னாகனாரென்பவர் பிற்காலத்தே பாடினர். இவர் புறத்திணைகளைப் பாடுவதில் திறமை வாய்ந்தவர்போலும். இவர் ஓய்மான் நல்லியக் கோடனையும் (புறம். கூஎசு) பாடினர். இவனே சிறுபாணாற்றுப் படைத்தலைவனுமாவன். சிறு பாணாற்றுப் படையில் கஉஉ-ம் வரியில் ஓவியர் பெருமகன் என்று இவனைக்கூறியிருப்பதால் இவன் ஓவியர் என்னுங் குழுவுக்குத் தலைவனென்று தெரிகிறது. அவன் ஊர் மாவிலங்கை யென்று இப்பாட்டினுட் கூறப்பட்டது. "பெருமாவிலங்கைத் தலைவன்'' என்றது காண்க. பாரி இறந்ததற்காகப் புலவர் வருந்துமிடத்துப் பாரியை இவர் கண்டவ ரென்பதும், அவனுக்குப்பின் நல்லியக் கோடனால் இவர் ஆதரிக்கப் பட்டவ ரென்பதுங் விளங்குகின்றது. இவன் மரபிலிருந்த ஓய்மான் வில்லி

யாதன் என்பவனைப் புறம். ௩எகூ-ல் இவர் பாடியுள்ளார். இப் புலவருடைய பெயர் நாகனென்று முடிதலால் இவர் நாகர் மரபைச் சார்ந்தவ ரென்ப.

மலையமான் திருமுடிக்காரி யென்பவன் எழுவள்ளல்களில் ஒருவன். இவன் கோவலூரில் அரசுபுரிந்தவன். முள்ளூர்க் கானகம் என்னும் ஒரு மலைக்காட்டையுடையவன். நற்றிணை கO௭-ல் இவன் முள்ளூர் என்னுமிடத்தில் ஆரியரைவென்று ஓட்டினதாகக் கூறப்பட்டது. இவனைக் கபிலர் புறத்துட் பாடினது முன்னமே கூறினேம். இவனைப்பாடிய மற்றொரு புலவர் மாறோக்கத்து நப்பசலையார். மாறோக்கம் என்பது கொற்கையைச் சூழ்ந்தநாடு. இவர் நற்றிணை ௩O௪-ள் கணவனைப் பிரிந்தமையால் தன் மேனியின்மேற் பசலை பரவிற்றென்று கூறினர். அப்பசலை காரணமாக அவருக்கு அப்பெயர் வந்தது போலும். புறம். கஉகூ-ம் பாட்டிற் காரியை அவர் பாடினர். அதனுட் பாணருக்குப் பொற்றாமரை சூடுங் காரியின் வண்மையையும் அவனது யானைப்போர்த் திறமையையும் வியந்து கபிலர் அவனைப் பாடினமையும் இவர் குறிப்பித்தார். இவர் சோழிய ஏனாதி திருக்கண்ணனை கஎச-ம் பாட்டிற் பாடியுள்ளார். புறம். ௩அ௩-ல் அவிய னென்பவனைப் பாடியுள்ளார். நப்பசலையார் தாம்பாடிய புறம். உஅO-ல் கைம்மை நோன்பைக் கூறியுள்ளார். அப்பாட்டு யாரைப்பற்றியதென்பது விளங்கவில்லை. இன்னும் இவர் குளமுற்றத்துக் கிள்ளிவளவனைப் புறத்துட் பாடினர்.

காரியை அம்மூவனார் என்னும் புலவரும் பாடினர். அகம். நுடு-ல் அவன் கோவற்கோமானென்றும், பெண்ணையாற்றை யுடையனென்றுங் குறிப்பித்தார். அகம். நுடு-ல் இவர் பாலையைப் பாடியிருந்தாலும் பிற நான்கு பாட்டில் நெய்தலையே சிறப்பித்துள்ளார். அகம் கO-ல் தொண்டியென்னும் மேலைக் கடற்கரைப் பட்டினத்தைச் சிறப்பித்துள்ளமையால் இவர் சேர நாட்டுப் புலவரென்று கருதப்படுகின்றார். அகம். நுஎO-ல் திருமகளைக் 'கடல்கெழு செல்வி' யென்றனர். நற்றிணையுள்ளும் இவர் பாடல்கள் வந்துள்ளன.

காரியொடு பொருது அவனை வென்றழித்தவன் ஓரியென்று சிறுபாணாற்றுப் படையுட் கூறப்பட்டது. ஓரியென்பவன் கொல்லிமலைக்குத் தலைவன். இவனைப் பாடிய புலவர் வன்பரணர்.

இவர் பாடிய புறம். கருஉ-ல் பரிசில் விடையென்னுந் துறையமைந்துள்ளது. அது புகழ் செப்பியவனுக்கு அரசன் பரிசிலளிப்பதைக் கூறுவது. வேட்டையிற் சிறந்தவனென்று ஓரியைப்பாடிய பரணர் விறலியர்க்கு விரைவில் அவன் பரிசளிப்பதை இப்பாட்டினிற் கூறினார். இதனுள் பாணர் இசைமுறை இருபத்தொரு துறையுடையதென்று குறிப்பித்தார். வலிவு மெலிவு நடு என்னும் மூன்றிடங்களிலும் ஏழிசை யமைத்துப் பாடத் துறை இருபத்தொன்றாதல் காண்க. அடுத்த பாட்டினுள்ளும் இவர் ஓரியின் வண்மையை மிக அழகாகப் புனைந்துரைத்தார். ஓரியாற்சென்ற தம் சுற்றத்தார் வெள்ளிநாரால் தொடுத்த பொன்னரி மாலைகளையும்

யானைகளையும் பெற்றமையால் பசி நீங்கிச் செல்வச்செருக் குற்று ஆடுதலையும் பாடுதலையும் மறந்தனரென்றனர். இவர் புறம். உருஎ-ல் காட்டிற் கணவனையிழந்து வருந் தும் முதுபாலைப் பாட்டு மிகவும் இரக்கத்தை விளைப்பது.

கழைதின் யானையார் ஓரியைப்பாடிய பாட்டு புறம். உ௱ச. இவர் பாடியபாட்டினுள் ஓரி தமக்கு ஈட வில்லையாயினும் தான் அவனை வெறுப்பதில்லை யென்று கூறினர். இரப்பதையும் ஏற்பதையும்பற்றிச் சில நீதிகள் கூறியுள்ளார். பரிசில் பெறுதவிடத்து இரவலர் புறட் படும்போது நேர்ந்த நேரத்தையுங் குறியையுங் குறை கூறுவதன்றித் தமக்கு ஈயாத அவனைப் பழிக்கமாட்டா ரென்றனர். இப்புலவர் அகம். உ௱அ-ல் இவர் இவனது கொல்லிமலையைப் புகழ்ந்துள்ளார். இவனைக் கல்லாடனா பிற்காலத்தே பாடியுள்ளார். அஃது அகம். உ0க

கடையெழு வள்ளல்களில் மற்றொருவன் கண் டீரக் கோப்பெருநள்ளி என்பவன். இவன் மலைநாட்டைச் சேர்ந்த தோட்டிமலைக்குத் தலைவன். இவனை வன்பரண ரும் பெருந்தலைச் சாத்தனாரும் பாடியுள்ளார். நள்ளியின் சிறப்பைச் சிறுபாணாற்றுப்படையிலுங் காணலாம்.

ஆய் என்னும் வள்ளல் பொதியின்மலைத்தலைவன். இவன் ஆய்குடியென்னும் ஊரில் வீற்றிருந்தான். இவ னையே ஆய் அண்டிரன் என்றுங்கூறுவர். இவன் சிவ பெருமானுக்கு நாகப்பாம்பின் நீலவுடை யொன்றினை

கொடுத்தானென்று சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது. (கூகூ முதல் கூகூ வரையுள்ள பகுதிகள்). இவன் பரணரால் அகத்துட் பாடப்பட்ட ஆயின் வேறுவன். இவனை ஏணிச்சேரி முடமோசியார் மிகவும் வியந்து பாடினமையால், 'மோசிபாடிய ஆயு' மென்ற மொழி எழுந்தது. புறம். கஉஎ-ல் ஆய் தனது யானையைப் பாணர் முதலிய பரிசிலர்க்குக் கொடுத்துவிட்டமையால் அவை கட்டப்படுந் தறியின்கண்ணே காட்டுமயில்கள்விளையாடின என்றனர் புலவர். புறம். கஉகூ, கஙக முதலியவைகளில் அவனை அவர் அண்டிரன் என்றது காண்க; புறம். கங0-ல் கொங்கரை மேலைக் கடற்கண்ணே நடந்தபோரில் இவன் வென்றனனென்று குறித்தார்; புறம். கஙக-ல் ஆய் புன்னைப் பூமாலையுடையவனென்றார்; கஙஉ-ல் அவனையன்றிப் பிறரைத் தன் நாவு புகழ்ந்தால் அது பிளக்கப்படவேண்டுமென்றார். பிறர் புகழைக் கேட்குந் தன்செவி பாழுங் கிணறுபோலத் தூர்ந்துபோகக் கடவதென்றார்; தென்றிசைக்கண் ஆய்குடியும் வடதிசைக்கண் இமயமும் இல்லாவிடில் உலகம் நிலைபிறழ்ந்து விடுமென்றார். புறம். கஙங-அவர் பாடிய விறலியாற்றுப்படை; புறம். கஙச-ல் ஆய் பயன் கருதாது கொடுப்பவன் என்பார்,

"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆய் அல்லன்"

என்றனர். கஙரு-ம் பாட்டும் அவனை அவர் பாடியதே. புறம். உசக-ல் அவனை வானோர் சிறப்பாக எதிர்கொள்வரென்றார். ஙஎச, ஙஎரு-ம் அவர் அவனைப் பாடியனவே. முடமோசியா ரென்றமையால், இவர் முடவர்போலும்

மென்ப. புறம். கஅ-ல் இவர் முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளியைச் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறைக்கு இன்னுனென்று விளக்கினர். அவனுடைய யானையைக் கடலின் கண்ணே செல்லும் மரக்கலத்திற்கும், உடுக்களின் நடுவே செல்லும் மதிக்கும் இவர் உவமித்தார். ஆயைப் பாடிய பிறிதொருபுலவர் ஓடைகிழாராவர். அவர் பாடிய கஅசு-வது பாட்டு, தமது வறுமைகூறிப் பரிசில் கேட்டதாகும். ஆயைப்பாடிய மற்றொருவர் குட்டுவன் கீரனரென்பவர். இவர் அவன் இறந்ததற்காகக் கையறுநிலை பாடியவர். புறம். உசo பாட்டால். இப்புலவர் குடநாட்டரசரைச் சேர்ந்தவரென்று தெரிகின்றது.

அதிகமான் நெடுமானஞ்சியென்னும் வள்ளலைப் பற்றி இங்குச் சிறிது ஆராய்வாம். இவனுக்குக் குடிப்பெயர் எழினியென்றுங் கூறுவர். இவர் பரணரால் அகம். நஎஉ-ற் பாடப்பட்டமையாலும், பெருஞ்சேரல் இரும்பொறை காலம்வரை இருந்தமையாலும் இவன் நெடுங்காலம் அரசியற்றியவனாவன். மாமூலனரால் மத்தி வென்றதாகக் கூறபட்ட எழினி இவன் மரபைச்சார்ந்த முன்னேன்போலும். அகம். கசுஎ-ல் மாமூலனரால் குறிக்கப்பட்ட கண்ணன் எழினி என்பவனும் இவனுக்கு முன்னவனேயாகும். இவன் குலத்தைச்சார்ந்த எழினியென்னும் மற்றொருவன் பிற்காலத்தே தலையாலங்கானத்து நெடுஞ்செழியனால் வெல்லப்பட்டான். இவன் குதிரை மலைக்குத் தலைவன்; சேரபரம்பரையைச் சார்ந்த

வன்; அரசர் எழுவரைவென்று அவர்க்குரிய உரிமை களைப் பெற்றவன். இவன் தொண்டைமான் இளந்திரை யன் என்பானிடத்து ஔவையாரைத் தூதுவிடுத்தவன். இவனுடைய ஊர் தகடூர். இவனைச் சேரமான் பெருஞ் சேரல் இரும்பொறை வென்று கொன்று இவன் ஊரைப் பிடித்தான். பரணருக்குப்பின் இவனைப் பாடிய புலவர் கள் பொன்முடியா ரென்பவர். அவர் பாடிய பாடல்கள் புறம். உகக, ௩கO, ௩கஉ. உகக-ல் முருகன் கோட் டத்தை இவர் குறித்துள்ளார். ௩கO-ல் புதல்வர்க்குச் சிறு குடுமிவைக்கும் வழக்கம் அறியக்கிடக்கின்றது. அஞ் சிலாந்தை மகள் நாகையாரென்னும் பெண்புலவர் அதி கமா னெடுமானஞ்சியை அகம். ௩டுஉ-ற் பாடியுள்ளார். அதியன் விண்ணத்தனாரென்பவர், அஞ்சியின் சுற்றத் தாராய் அகநானூற்றுள் செய்யுட்செய்த புலவரு ளொருவர்.

அதிகமானஞ்சியை மிகுதியும் பாடியிருப்பது ஔவையார். அவர் அவன்மகன் பொருட்டெழினியை யும், நாஞ்சில் வள்ளுவனையும்; தொண்டைமானையும் பாடி யுள்ளார். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு இவை களிலும் இவர் பாட்டுகள் காணப்படுகின்றன. இவர் தம்மை விறலியாகத் தோன்றும்படி பாடல்கள் பாடியுள் ளார். அதுபற்றிப் பாணர் மரபினரென்பாரு முளர். அங் ஙனம் பாடுதல் ஒருவகைப் பாமரபு என்று கொள்பவர் அக்கருத்தினைக் கொள்ளார். ஆத்திசூடி, கொன்றைவேந் தன், மூதுரை, நல்வழி முதலிய நூல்கள் செய்தது இவர்

தாமோ வென்பது ஓர் ஐயப்பாடு. அவைபாடிய ஒளவை யார் கம்பர்காலத் திருந்ததாகக் கேட்கின்றோம். கம்பர் காலத்திற்குஞ் சங்க காலத்திற்கும் இடையீடு ஆயிரம் ஆண்டுகட்கு மேலாக இருக்கும். அன்றியும் பின்னுள்ள நூல்கட்கும் தொகைநூலிற் காணும் ஒளவையார் செய் யுட்களுக்கும் சொல்நடை வேறுபாடு பெரிதும் உண்மை காண்க. இனி ஒளவையார் சுந்தரமூர்த்தி நாயனார் காலத் தில் வாழ்ந்திருந்து அவர் கயிலாயஞ்சென்றகாலை அவர்க்கு முன்னாக பிள்ளையாரால் கயிலைக்கு ஏற்றப் பெற்றதாகக் கூறும் வழக்கமும் உண்டு. இதற்குத்தக்க ஆதாரம் இல்லை. அங்ஙனமாயின் கம்பர் காலத்தில் அவர் நிலவுல கத்தில் வாழ்ந்திருத்தல் கூடாது. ஆகவே கம்பர் காலத் திருந்த ஒளவையார் மற்றொருவர் என்பது தெளிவு.

ஈண்டுக் கடைச்சங்க காலத்திருந்த ஒளவையார் செய்யுட்களே ஆராயற்பாலன. புறம். உாகூ-ல் அதிக மான் பரிசில் நீட்டித்ததற்காக வாயிலோனைச் சினந்து பாடியவிடத்து மரந்துணிக்கும் மழுவுடைய தச்சனுக்குக் காட்டகத்து யாண்டுச்சென்றாலும் அக்காடு பயன்படு மாறுபோலத் தாம் எத்திசைக்கட் போனாலும் அத்திசை யில் தமக்கு உணவு கிடைக்குமென்றனர். இவர்,

"எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறே"

என்றது காண்க.

இவர் அதிகமானது வீரத்தையும் வண்மையையும் பல பாடல்களிற் புகழ்ந்தனர்; புறம். கூ0-ல் புலியை எதிர்க்கும் மான் இல்லையாதல்போலவும், வானிலெழு

கின்ற ஞாயிற்றிற்குமுன் இருளில்லையாதல் போலவும், மணல் பறக்கவுங் கல் பிளக்கவும் நடக்கவல்ல பகட்டிற்குப் போதற் கரிதாய வழியில்லையாதல் போலவும் அதிகமானை எதிர்க்கும் வீரர் இல்லையென்று குறிப்பித்தார். இவர் புறம். கூக-ல் அதிகமான் தமக்குப் பெரிய மலையின் விடரில் அரிய கருநெல்லியின் உச்சியிற் பழுத்த கனியை அதன் அருமையையும் பெருமையையும் நோக்காது சாவு நீங்கும்படியாகத் தனக்குக் கொடுத்ததனால் நீலகண்டப் பெருமான்போல அவன் நீடு வாழவேண்டுமென்று வாழ்த்தினார்;

" பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன்போல மன்னுக "

என்றது காண்க.

இதனால் இவரது சிவனடிப்பேரன்பு நன்குவிளங்கும். தன்மாட்டு அதிகமான்வைத்த கருணை மழலைச் சொல்லுடைய குழந்தைபாற் றந்தையருக்குள்ள அருள் போல்வதென்று இவர் வியந்து பாராட்டுமிடத்துத் 'தன்னுடைய சொல்லானது யாழிசைபோல் இனிமையாயது மன்று, அளவு நயமுடையதுமன்று, பொருட்பெற்றியுடையதுமன்று, மழலைபோல்வது' என்றமையால் இவரது நன்றியறிவுந் தாழ்மனமும் இனிது விளங்கும்; அவன் பொருது புண்பட்டு நின்றகாலைப் பாடிய பாட்டு புறம். கூரு. இதனுள், வாளிற்படாத மன்னரைத் தருப்பைப் புல்லிற் கிடத்தி வாளோச்சி யடக்கஞ்செய்யும் நெறிச்செய்கை குறிக்கப்பட்டது. புறம். கூச-ல் பெரிய யானையானது தன்பால் நெருங்கி விளையாடுஞ் சிறு பிள்ளை

களைத் துன்புறுத்தாது நிற்றல்போலத் தம்மைப் போல் வார்க்கு அதிகன் இனியனென்றும், பகைவர்க்கு அக்க ினிறுபோல இன்னாதவன் என்றும் இவர் குறிப்பித்தார். இவன் ஔவையாரைக் காஞ்சி நகரிலிருந்த தொண்டைமான்பால் தூது விடுத்தனன். தொண்டைமான் ஔவையார்க்குத் தனது படைக்கலக் கொட்டிலைக்காட்ட அவர் பாடிய பாட்டில் (புறம். ௯௫) தொண்டைமானுடைய படைக்கலங்களைப் புகழ்வதுபோலவும், அதிகமானுடைய படைக்கலங்களை இகழ்வதுபோலவுங் கூறி உண்மையாக முன்னையவற்றைப் புகழ்ந்தார். தொண்டைமானது படைக்கலங்கள் கொல்லனது கொட்டிலில் நுனி முறிந்து கிடப்பனவென்றுங் கூறியது காண்க. புறம். ௯௯-ல் அதிகமான் கோவலூரைப் பிடித்து வெற்றியடைந்ததைக் கூறுமுகத்தான் அவன் முன்னோர் சிறப்பையும் எடுத்துக் கூறி, அவன் நாட்டுவளத்தையும், கரும்பினை முதன் முதல் அவன் முன்னோர் அவ்விடத்தே கொண்டுவந்தமையையும், அவன் ஏழரசரை வென்றுபெற்ற அடையாளத்தையும் விதந்தோதிப் பாடுவார்க்குப் பாட அரியவனென்றும் பரணர் அவனைப் பாடியதாகவுங் கூறினர். புறம். ௱௧-ம் பாட்டினுள் அவனுடைய ஈகையையும், அவன் இரவலர்க்கு என்றும் இன்முகங் காட்டித் தப்பாது பரிசிலளிக்குஞ் சீரினையும் இவர் மிகவும் அழகாகப் புகழ்ந்துள்ளார். அதுவருமாறு:

“ ஒருநாட் செல்லினும் இருநாட் செல்லினும்
பலநாட் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ ”

அதிகமான் புதல்வன் பொகுட்டெழினியைப் புறம். ௯௯-ம் பாட்டினுள்ளும் ௧0௨-ம் பாட்டினுள்ளும் இவர் பாடியுள்ளார்; இவற்றுள் அவனது வண்மையைப் புகழ்ந்ததனோடு அவன் மகளிர் மனங்கவர் கண்ணினனென்றும், தன்கீழ் வாழ்வார்க்கு நிறைமதிபோறலின், துன்பமாகிய இருள் அவர்க்கு எக்காலத்தும் இல்லையென்றுஞ் செப்பினர். இவர் புறம். ௨௩௫-ம் பாட்டினுள் அதிகன் இறந்த நாளைக்குறித்துத் துயருறு மிடத்து அவனது அன்பின் செயல்களைப் பலபடப் பாராட்டி யுள்ளார். அதில் இவர் அவனது அரிய மார்பின்கண் தைத்த வேல் நுண்ணிய ஆராய்ச்சியுடைய அறிவாளிகளின் நாவில் வீழ்ந்ததென்றார்.

"இனிப்பாடு வாருமில்லை பாடினர்க்கொன் றீவாருமில்லை
தண்ணறுமலர் நீர்த்துறைக்கட் குடப்படாது கழிந்தாற்போல
பிறர்க்கொன் றீயாது வீயும் உயிர்பல"

என்றனர்.

ஔவையார் வீரரது உண்டாட்டைப் பற்றி ௨௯௯-ற் கூறியுள்ளார். புறம். ௨௮௯, ஒரு சிறுவன் இறந்ததற்காக வருந்துகின்ற பாட்டாகத் தோன்றுகின்றது. இறந்த உடம்பைப் பாடையிற் கிடத்தலும், அதன்மேற் றூய வெள்ளாடைகொண்டு போர்த்தலும் இதனுட் கூறப்பட்டன. புறம். ௨௯௫-ற் போரிற் சிறப்பெய்தி மாண்டதைக்கேட்ட ஒருவனது தாய்க்கு முலை சுரந்ததை இவர் வியந்தனர். அஞ்சியின் மகன் பொகுட்டெழினியைப் பாடிய புறம். ௩௯௨-ற் பகைவரது நிலத்தைக் கழுதை பூட்டிய கலப்பையால் உழுத

லும், வரகுங் கொள்ளும் விதைத்தலுங் கூறப்பட்டன. அவன் இரவலரது கந்தைத் துணியை நீக்கி உயர்ந்த கலிங்கங் கொடுத்து அவர்க்கு உயர்ந்த உணவு கொடுப்பதனையும் இவர் விதந்தனர்.

ஔவையார் நாஞ்சில் வள்ளுவனைப்பாடிய புறம். கச0-ல் ஏற்பார் தகுதியறிந்து பரிசிலளியாது தன் தகுதியை நோக்கிப் பெரிய யானையைக் கொடுத்தான் என்றார். அகநானூறு ௩0௩-ல் மூவேந்தராலும் பாரியின் நகரானது முற்றுகையிடப்பட்டகாலை கபிலர் கிளிகளாற் செந்நெற் கதிர்களைக் கொணர்வித்துப் பாரி குடிகட்கு உணவளித்தார் என்று ஔவையார் கூறியுள்ளார். நாஞ்சிப்பொருநனை **ஒருசிறைப்பெரியனு** ரென்பவரும் பாடியுள்ளார். இவரது பாடல்கள் குறுந் தொகையிலும் நற்றிணையிலும் வந்துள்ளன. புறம். க௩எ-ல் நாஞ்சின் மலையின் செழிப்பை இவர் இனிது பாடினர். அவனைப் பாடிய மற்றொரு புலவர் **கருவூர்க்கந்தப்பிள்ளை** யென்பார். இவர் பாடல்கள் குறுந்தொகையிலும் வந்துள்ளன. இவர் புறம். ௩அ0-ல் நாஞ்சிற்பொருநனது வீரத்தையும் வண்மையையும் பாடியுள்ளார். மருதன் இளநாகனாரென்பவரும் நாஞ்சில் வள்ளுவனைப் பாடியுள்ளார். இவர் பாடிய புறம். க௩அ பாணாற்றுப்படையாகும். க௩௯-ம் இவர் பாடியதே.

பிட்டங்கொற்றனென்பவன் சேரமான்பெருஞ்சேரலிரும் பொறையின் படைத்தலைவன். சேரமான் அதிகமானை வென்றகாலை அவனது குதிரை மலையைச்

சேரமான் கொற்றனுக்குக் கொடுத்தான். இவனது வண் மையைப் புறம். கசு௮-ற் கருவூர்க்கந்தப்பிள்ளை மகன் சாத்தனார் பாடியுள்ளார். வடமவண்ணக்கன்றாமோதர னார் என்பவரும் இவனது வண்மையைப் புறம். கஎ௨-ற் பாடியுள்ளார். வண்ணக்கன் என்ற சொல் நாணய சோத னைக்காரர் என்று பொருள்படும். இவர் வடநாட்டினர் போலும்! தாமோதரன் என்பது திருமாலின் பெயர். இதுவே யேதுவாக இவரைத் திருமால் வழிபாட்டின ரென்பாருமுளர்.

அதிகமானை வென்ற பெருஞ்சேரலிரும்பொறை யை மோசிகீரனார் என்னும் புலவர் நன்கு பாடினர். புறம். ருO-ற் சேரமானது அரச முரசு வைத்திருந்த கட்டிலில் அப்புலவர் அறியாது துயின்றதைக் கண்டு சேரமான் அவனுக்கு ஊறு செய்யாது அவன் தூங்கி யெழுந்திருக்கும் வரை கவரிகொண்டு வீசினதாகவும், அதற்காக இவர் அவனைப் புகழ்ந்து பாடியதாகவும் அறி கின்றோம். மோசிகீரனார் பாடிய புறம். க௮கூ-ல், இவர்

“ நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம். ”

என்று மன்னர் சிறப்பை யுணர்த்தினர்.

மோசிகீரனார் கொண்கானன்கிழான் என்பானைப் புறம். கருச, கருரு, கருகூ-ற் பாடியுள்ளார். புறம். கருகூ-ற் கொண்கானம் என்னும் மலையானது வண்மையையும் வெற்றியையு முடையதென்று அவர் பாடியுள்ளார்.

சேரமான் பெருஞ்சேர லிரும்பொறையைப் பதிற்றுப்பத்திற் பாடியவர் அரிசில்கிழா ரென்னும்

புலவர். இவர் க நூறாயிரங்காணம் சேரமானிடம் பரி சாகப் பெற்றவர். இவர்க்குச் சேரமான் தனது அர சிருக்கையையும் அரண்மனையையுமே கொடுக்க விரும் பினனென்பது தெரியவருகின்றது. அரிசில் என்பது சோழநாட்டிலுள்ள அரியலூரென்பாருமுளர். இவர் வையாவிக்கோ பெரும்பேகனைப் பாடினரென்று முன் னமே குறிக்கப்பட்டது. புறம். கசசு-ற் பேகனைப் பிற பரிசில்கள் ஒன்றுந் தான் கேளாததாகவும், கண்ணகியை மீட்டும் ஏற்றுக்கொள்ள அவன் புறப்படுவதையே தாம் வேண்டிக்கொள்வதாகவும் அவர் கூறியுள்ளார். புறம். உ௬0-ல் இப்புலவர் அதிகமான் இறந்த தற்காக வருந்திக் கூற்றத்தை நோக்கி 'உழவன் வித்தினை உண்டதுபோல உனக்குப் பல்லுயிர் கொடுக்கும் ஒருவன் உயிரை உண்ட மையால், உலகத்து வறியவரைப் பார்க்கிலும் நீ வறுமை யடைந்தாய்' என்றனர்.

பெருஞ்சேரவிரும் பொறைக்குப்பின் குடக்கோச் சேர விரும்பொறை அல்லது இளஞ்சேர விரும்பொறை யென்பவன் பதிற்றுப்பத்தில் கூ-ம் பத்திற்குத் தலைவ னாய் விளங்கினன். கூ-ம் பத்துப் பாடியவர் பெருங்குன் றூர் கிழாரென்பவர். இவர் பாடல்கள் அகநானூற்றிலும் குறுந்தொகையிலும் நற்றிணையிலும் வந்துள்ளன. இவர் பதிற்றுப்பத்திற்காக ௬உ-ஆயிரங்காணம் பரிசில் பெற் றார். இவர் கரிகால் வளவனின் றந்தையாகிய உருவப்பஃ றேர் இளஞ்சேட் சென்னியைப் புறம். உசுசு-ற் பாடின ரெனில் இவர் நெடுங்காலம் நிலவுலகத்தில் வாழ்ந்தனரா

தல் வேண்டும். அல்லது இவர் பெயருடைய மற்றொரு புலவர் இளஞ்சேட்சென்னியைப் பாடியிருக்கவேண்டும். இவர் புறம். கசஎ-ற் கண்ணகி காரணமாகப் பேகனைப் பாடினர். குடக்கோச்சேர விரும்பொறை பரிசில் நீட்டித்த தற்காகப்புறம். உக0-லும், உகக-லும் அவனைச் சினந்து தாம்விரைவில் அவனைவிட்டுப் போய்விடுவதாக இவர்பாடியுள்ளார். அப்பாடல்களுள் இவரைக் கவலையோடு எதிர் பார்த்திருக்கும் இவனது மனைவி மக்களது நிலைமையை மிகவும் உருக்கமாக இவர் எடுத்துக் காட்டியுள்ளார்;

"வல்சி யின்மையின் வயின்வயின் மாறி
யில்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்
பாஅ லின்மையிற் பல்பாடு சுவைத்து
முலைக்கோண் மறந்த புதல்வனொடு
மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற் படர்ந்தே"

—புறம். உகக.

என்றது காண்க.

சேரமான் சிக்கற் பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோவாழியாதன் என்பவன் பதிற்றுப்பத்தில் ஏழாம்பத்திற்கு உரியவனின் வேறுவனெனின், சிக் கற் பள்ளிற்றுஞ்சிய இவன் அவனுக்குப்பின் ஆண்டிருக்க வேண்டும்.

இவனைப் புறம். ஙஅஎ-ற் பாடியவர் **குண்டுகட் பாலியாதன்** என்னும் புலவர். இவருடைய பாடல் ஒன்று நற்றிணையிலும் வந்துளது. குண்டுகண் என்பது 'ஆழ மான கண்' என்றும், பாலியென்பது 'இவருடைய ஊர் என்றும் புறநானூற்றுப் பதிப்பாசிரியர் கூறுகின்றார்.

சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறை இளஞ்சேர லிரும்பொறைக்குப் பின்னுவது, பெருஞ்சேர லிரும்பொறைக்கு முன்னுவது அரசாண்டிருக்க வேண்டும். இவனைப் பாடிய புலவர் நரிவெரூஉத்தலையா ரென்பவர். இவர் சேரமானைக் கண்ட நாளில் தன் உடம்பு வேறுபட்டு நல்லதாகப் பெற்றாரென்று தெரிகிறது. இவர் புறம். ரு-ல் அரசன் நாட்டினைத் தனது பிள்ளைபோற் காக்கவேண்டுமென்று அறிவுறுத்தினர். புறம். கக௫-ல் முதியோரை நோக்கி நன்னெறி ஒழுகவேண்டுமென்று இவர் அறிவுமொழி கூறியுள்ளார். இவர்,

"நல்லது செய்த லாற்றீ ராயினு
மல்லது செய்த லோம்புமின்"

என்றது காண்க.

இப்புலவரது பாடல்கள் குறுந்தொகையிலும் வந்துள்ளன.

## குமணன் காலம்

பெருஞ்சேரலிரும்பொறை அதிகமானை வீழ்த்தினதோடு கடையெழு வள்ளல்களின் காலம் முடிவாகின்றது. அவர்கள் காலத்திற்குப் பின் குமணன், இளங் கண்டீரக்கோ, இளவிச்சிக்கோ, கடியநெடுவேட்டுவன் முதலிய கொடையாளிகள் திகழ்ந்தனர். அதிகமான்நெடுமானஞ்சியை இகழ்ந்து பாடிய **பெருஞ்சித்திரனாரென்னும்** புலவர் குமணனைப் பெரிதும் வியந்து பாடினவரா

வர். இப்புலவர் அதிகமானைக் காணச் சென்றகாலை அவ ரைப் பாராது பரிசில் கொடுப்ப, அவர் அதை ஏற்றுக் கொள்ளாது சினந்து பாடிய புறம். உ0அ-ல், "நேரிற் கண்டு கல்வியின் தகுதியையறிந்து தினையளவு கொடுத் தாலும் நல்லதென்று வாங்கிக் கொள்வேன்; காணாது எதைக் கொடுத்தாலும் வாங்குவதில்லை" யென்றனர். வெளிமானெனுஞ் சிற்றரசன் இப்புலவரைச் சிறப்பாகப் பேணினனென்று தெரிகிறது, அவர் தம்பி இளவெளி மானை இவர் பரிசில் கேட்டபோது அவன் முகம் மாறிக் கொடுத்த பரிசிலைத் தாம் ஏற்றுக்கொள்வதில்லை யென்று புறம். உ0எ-லும் உ௲எ-லுங் குறிப்பித்தார். வெளிமா னென்பவன் இறந்ததற்காகப் புறம். உ௲எ-லும் உ௲அ-லும் தனது பெரும் வருத்தத்தைத் தெரிவித்துள்ளார். புறம். உ௲அ-ல் தாழியிட்டுப் பிணத்தைப் புதைக்கும் வழக்கம் புலனாகின்றது. அச்செய்யுளுள் மழைமிகுதி யான இரவின்கண் மரக்கலங் கவிழ்ந்துவிட அதன்கண் ணிருந்த கண்ணில்லாத ஊமன் கடலின்கண் ணழுந்தி னாற்போலத் தாமுந் துன்பக் கடலிற்பட்டு உழல்வதாக வும், இறந்துபடுதலே தமக்குத் தக்கதென்றும் புலவர் குறிப்பித்தார்.

அவர் குமணனைப் புறம். கருஅ-முதல் கசுஙு-வரை யுள்ள பாடல்களிற் பாடியுள்ளார். கருஅ-ற் கடை யெழு வள்ளல்களையும் எடுத்து மொழிந்து அவர்கட் குப்பின் குமணனே பெருங் கொடையாளியாகச் சிறப் புற்று விளங்கினனென்றும், முங்கில், சுரபுன்னை,

ஆசினி, பலா முதலிய மரங்களின் செறிவால் குமணனது முதிரமலை மிக வளமுடைத்தா யிருந்ததென்றுஞ் செப்பினர். புறம். கடுசுஅ-ல் வறுமையினால் தனது மனைவி படுந்துன்பத்தை இரக்கமுண்டாகும்படி எடுத்துக்கூறி முகம்மாறித் தரும் பரிசில் யானையாயினும் தனக்கு வேண்டாம், மகிழ்ச்சியுடன் முகம் மலர்ந்து அளிப்பது ஒரு குன்றுமணி யளவாயினும் போதுமென்று புலவர் குறிப்பித்தார். புறம். கசுo-ல் குமணன் இரவலருக்கு நல்லுணவும் பொன்னாற் செய்த அணிகலங்களும் கொடுப்பதைக் கேட்டுத் தமது வறுமை நீங்கத் தாம் அவரிடம் வந்ததாக உரைத்தார். இப்பாட்டினுள் தமது சிறிய புதல்வன் பாலில்லாத தாயின் முலையைச் சுவைத்துப் பால் பெறாது சோறு இருத்தற்குரிய பாண்டத்தைத் திறந்து பார்த்து அதனிலும் ஒன்றுங் காணாது அழ, தாய் குழந்தையைப் புலி வரவு சொல்லி அச்சமுறுத்தவும், அம்புலியைக் காட்டி வருத்தந் தணிவிக்கவும் முயன்று வருந்தினளென்றும் கூறியது காண்க. புறம். கசுக-வது பாட்டுப்பாடி அவர் யானை பெற்றதாகத் தெரிகிறது. அவர் பெற்ற யானையை இளவெளிமானது காவல் மரத்திற் கட்டித் தாம் பரிசில் பெற்றதை அவனுக்கு உரைத்தார். அவர் தாம் குமணன்பாற் பெற்ற பெருஞ் செல்வத்தைக் கொணர்ந்து தம் மனைவியிடம் கொடுத்து வறுமை மிக்க தமது சுற்றத்தார்க்கெல்லாம் அதனை வழங்குமாறு கட்டளை யிட்டாரென்று புறம். கசுங-னாற் றெரிகின்றது. குமணனைப் பாடிய மற்றொரு புலவர் பெருந்தலைச் சாத்தனா ரென்பவர். இவர் பாடல்கள் நற்

றிணையிலும் வந்துள்ளன. இவர் ஆவூர் மூலங்கிழார் மகன் என்பது அகநானூற்றால் விளங்குகின்றது. இவர் அகம். கஙு-ல் பாண்டியனது மறவனாகிய பண்ணி யென் பவனது வண்மையைப் புகழ்ந்துள்ளார்.

புறம். கசுச-ல் தனது தம்பியின் பகைமையால் நாடிழந்து காட்டில் ஒளித்திருந்த குமணன்பாற் சென்று, தமது மிகுந்த வறுமையை எடுத்துக்கூறிப் பரிசில் கேட் டனர். சமையலில்லாமையால் அடுப்பிற் காளான் பூப்ப, பசியால் வருந்திப் பாலில்லாமையால் தொளை தூர்ந்து போன தாயின் முலையைச் சுவைத்து அழுகின்ற பிள்ளை யின் முகத்தைப் பார்த்துக் கண்ணீர் விடுகின்ற மனைவி யின் வருத்தத்தைத் தீர்ப்பதற்காகக் குமணனிடம் புல வர் தாம் வந்ததாகக் கூறினர். குமணன் யாதுங் கொடுக்க வியலாமையால் தன் கைவாளினைப் புலவரிடங் கொடுத்து "என் தலையை அரிந்து என் தம்பியிடங் கொடுத்தால் அவன் உமக்குத் தகுந்த பரிசிலளிப்பா" னென்று கூறின தாகவும், புலவர் அவ்வாளைக் கொண்டுவந்து இளங்குமண னிடம் காட்டிக் குமணன் மொழிந்ததைத் தெரிவித்த தாகவும் புறம். கசுரு-ற் கூறப்படுகின்றது. இவர் புறம். கஙுச-ல் இளங்கண்டீரக் கோவைத் தழுவியும், இளவிச் சிக்கோவைத் தழுவாமலும் இருந்ததற்குக் காரணங் கூறினர். இளங்கண்டீரக்கோ என்பவன் நள்ளி என்னும் வள்ளலின் தம்பி. இளவிச்சிக்கோ என்பவன் பாரிமக ளிரை மணக்க மறுத்த விச்சிக்கோன் என்பானின் தம்பி. விச்சிக்கோன், பெண்கொலை புரிந்த நன்னன்

மரபில் வந்தவனென்றும், பாடுவார்க்குக் கொடாது கரந்
தடைப்பவனென்றும் இப்பாட்டினிற் புலவர் விளக்கினர்.
புறம். உாடு-ற் கடிய நெடுவேட்டுவ னென்பவன் பரிசில்
நீட்டித்ததற்காக அவனை வாழ்த்துவதுபோல அவர்
இகழ்ந்து பாடினர். மூவேந்தராயினும் பேணுதலின்றிக்
கொடுக்கும் பரிசிலை விரும்பேமென்று இதனுள் புலவர்
குறித்தனர். அவர்,

> " முற்றிய திருவின் மூவ ராயினும்
> பெட்பின் றீதல் யாம்வேண் டலமே "

என்றனர். இவன் கோடையென்னும் மலைக்குத் தலைவ
னாகிய வேட்டுவனென்று அறிகின்றோம். மூவன் என்னுஞ்
சிற்றரசன் பரிசில் கொடாததற்காக அவனையும் புறம்.
உாகூ-ல் வாழ்த்துவதுபோல புலவர் இகழ்ந்து பாடினர்.

இதுகாறும் பதிற்றுப்பத்துள் வந்த சேர மன்னரை
யும், அவர் காலத்திலிருந்த கடையெழு வள்ளல்களையுங்
குமணன் முதலிய கொடையாளிகளையும் பாடிய புலவர்
கள் வரலாறு ஆராயப்பட்டது. இவர்கள் காலத்திருந்த
சோழபாண்டிய மன்னரைப் பாடிய புலவர் வரலாறு இனி
ஆராயத்தக்கது.

## நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும்.

சோழர்மரபிலே கரிகால் வளவனுக்குப்பின் மணி
மேகலையிற் கூறப்பட்ட கிள்ளிவளவன் என்பவன் அர
சாண்டனன். அவனுக்கு நெடுங்கிள்ளி, நெடுமுடிக் கிள்ளி
யென்ற பெயர்களு முண்டு. புறநானூற்றுள் காரியாற்றுத்

துஞ்சிய நெடுங்கிள்ளி யென்பவனும் இவனே. அக்காலத்தில் உறையூரில் நலங்கிள்ளி யென்பவன் அரசாண்டதாகத் தெரிகிறது. காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல் கொண்ட பின்னர் நெடுங்கிள்ளி உறையூர்க்குச் சென்று அங்கே அரசாண்ட சோழனாகிய நலங்கிள்ளியின் கோட்டையைப் பிடித்துக்கொண்டதாகவும், நலங்கிள்ளி இவனிருந்த கோட்டையை முற்றுகை செய்ததாகவும் புறநானூற்றுட் கேட்கப் படுகின்றது.

நலங்கிள்ளி உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் கூறிய சொற்கிணங்கிப் போர்செய்தலைத் தவிர்த்து அறஞ்செய்தலை மேற்கொண்டான் என்று அறிகின்றோம். இந்நலங்கிள்ளியையும், நெடுங் கிள்ளியையும், இவர்கட்கு முன்னிருந்த கிள்ளிவளவனையும், இவர்கட்குப் பின்வந்த குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனையுங் **கோவூர்கிழா** ரென்னும் புலவர் பாடியுள்ளார். இவர் பெயரினால் இவர் வேளாளரென்பது தெளிவு. சோழன் நலங்கிள்ளியை இவர் புறநானூற்றுள் ௩க, ௩உ, ௩௩, சரு, சுஅ, ௩அஉ, சா என்னும் பாடல்களிற் பாடியிருக்கின்றார். ௩க-ம் பாட்டில் அவனது படைச் சிறப்பையும் இடைவிடாப் போர்த் தொழிலையும் புகழ்ந்து வட நாட்டுள்ள அரசர்கள் அஞ்சித் தூங்காதிருக்கும் படியாக அவனது படைச்செலவு சிறப்புற்றிருந்த தென்றமையால், வடபுலத்து அரசர்களை இவன் வென்றவன் என்பது தெளிவு. சேரபாண்டியர் இவனுக்குப்பின் வைக்கப்படுவ ரென்பதற்கு அறத்தின்பின் பொருளும் இன்ப

மும் வைக்கப்படுதலை இவர் உவமையாகக் கூறினர். ௩௨-வது பாட்டினுள் பகைவரது நகரங்களை வென்று அவன் பரிசிலர்க்கு அவற்றைத் தருபவ னென்பது குறிக்கப் பட்டது. ௩௩-ம் பாட்டில் பாண்டிய நாட்டிலுள்ள ஏழு அரண்களை அவன் பற்றினன் என்பது வெளியாகின்றது. அக்காலத்தில் சோற்றைத் தயிரோடு கலந்து உருட்டி அதனை வருவோர் ஒவ்வொருவருக்குங் கொடுத்து மகிழ் தல் அரசன் வெற்றியடைந்த காலத்தில் நிகழ்ந்ததொரு செயலாகத் தோன்றுகின்றது. ௪௪-வது பாட்டில் ஆவூ ரிலே உள்ள கோட்டையை நலங்கிள்ளி முற்றியிருந்த போது அவனை எதிர்த்துப் போர்புரியாதும், குடிகளைப் பற்றிக் கவனியாதுந் தானிருந்த வீட்டை அடைத்துக் கொண்டு சும்மாவிருந்த நெடுங்கிள்ளியைப் பார்த்து, 'நீ போர் புரியவேண்டும், அல்லது கோட்டையை நலங்கிள் ளியின தென்று உடன் படல்வேண்டும். இரண்டில் யாதா வது ஒன்று செய்யாதிருத்தல் நீ, நாணம் அடைதற்குரிய நிலையாகும்' என்று புலவர் வற்புறுத்தினமை காண்க.

" அறவை யாயி னினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்த
லறவையு மறவையு மல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவி
னீண்மதி லொருசிறை யொடுங்குத
னாணுத்தக வுடைத்திது காணுங் காலே "

என்றது அது.

புறம். ௪௫-ம் பாட்டில் "நலங்கிள்ளியும் நெடுங்கிள் ளியும் உடன்பிறந்தா ராதலாலும், ஒருகுடிக் குரியா

ராதலாலும், இருவரும் ஆத்திமாலை சூடியவ ராதலாலும் அவர்கள் தம்முள் பொருதல் தவறு. அங்ஙனஞ் செய் தல் ஏனையரசர்க்கு உவகை விளைத்து இருவர்க்கும் இழி வைத் தருமாதலால், சந்து (சமாதானம்) செய்தலே அவர்கள் கட'' னென்று இவர் வற்புறுத்தினார். உறை யூரில் நெடுங்கிள்ளி யிருந்த காலத்து நலங்கிள்ளியிட மிருந்து அவன்பாற் சென்ற இளந்தத்த னென்பவனை ஒற்றுவந்ததாகத் துணிந்து அவன் கொல்லப் புகுந்த காலத்து 'அவன் ஒற்றனல்லன், பாடவல்ல பரிசிலனல் லன்' என்று எடுத்துக்கூறி அவனை உய்யக்கொள்ளப் பாடிய பாட்டு புறம். சஎ. இனி, கூஅ-ம் பாட்டுள் இவர் நலங்கிள்ளியின் வண்மையை எடுத்துக்கூறிப் பசியால் வருந்தும் பாணனை அவனிடை ஆற்றுப்படுத்தினார். கூஅஉ,சா-ம்பாட்டிலும் நலங்கிள்ளியின் வண்மையும் வீர மும் பாடப்பெற் றிருக்கின்றன.

இனி, உறையூர் முதுகண்ணன் சாத்தனா ரென் பவர் சோழன் நலங்கிள்ளியைப் பாடிய பாட்டினுள் நெடுங்கிள்ளியோடு அவன் போர்புரியாது அறநெறி நிற் றலே நலமென்று வற்புறுத்தினர். இவர் குறுந்தொகை யுள் ஒரு பாட்டும் புறநானூற்றில் ஐந்து பாட்டுகளும் இயற்றி யுள்ளார். இவர் உலக நிலையாமையையும், அறம் பொரு ளின்பங்களின் சிறப்பையும் எடுத்து விளக்கு வதிற் றேர்ந்தவர். முதுகண்ணன் என்ற சொல் அரசர்க் கும் பட்டத்துத் தேவிசளுக்கும் உசாத் துணையாக விருந்து ஒழுக்க முறைகளைச் செவியறி வுறுத்துவாரைக்

குறிக்கும். இதனால் இப்புலவர் அரசர்களுக்கு உண்மை களை யறிவுறுத்துந் தகுதியுடையவ ரென்பது கருதப் படும். இவர் புறம். கஉஎ - ம் பாட்டில், திங்களானது வளர்ந்தது குறைதலுங் குறைந்தது வளர்தலும், பிறந் தது இறத்தலும் இறந்தது பிறத்தலும் உண்டென்று யார்க்குங் காட்டுவதாகும் எனக் கூறுகின்றார்; புறம். உஅ-ல் மக்கட் பிறப்பினுள் எட்டு வகைப்பட்ட ஊனத்தை எடுத்து விளக்கிச் செல்வமானது அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றையும் செய்வதற்கு உதவாதவிடத்து அஃததனையுடையானைப் பாதுகாப்ப தில்லை யென்று குறிப்பித்தார். புறம். உகூ-ம் பாட்டில் நலங்கிள்ளி பாணரைப் போற்றுவதும், மகளிரொடு மகிழ் வதும், செங்கோல் செலுத்துவதும், தம்பால் வருவார் யாவர்க்கும் உதவுதலுஞ் செய்ய வல்லானென்பதை யெடுத்துக் கூறி அவனையும் அவனது சுற்றத்தையும் இவர் வாழ்த்தினர். நலங்கிள்ளியின் படைமாட்சியை ஆலத்தூர் கிழாரென்னும் புலவர் புறம். உஉரு-ற் பாடி னர். அப்பாட்டினால் அக்காலத்துப் படைவீரர் பனையின் நுங்கினையும் பழத்தினையுங் கிழங்கினையும் அருந்தின ரென்று விளங்குகின்றது.

நலங்கிள்ளி தம்பி மாவளத்தானென்பவனைத் தாமப் பல்கண்ணனா ரென்பவர் பாடியுள்ளார். இவர் காஞ்சிபுரத் தின் அருகிலுள்ள தாமல் என்னும் ஊரில் வாழ்ந்த புல வர் என்று புறநானூற்றுப் பதிப்பாசிரியர் கூறினர். இவர் பாடிய பாட்டுப் புறம். சங. மாவளத்தானும் இப்புல

வரும் வட்டு விளையாடிய காலத்திற் புலவர் செய்த சூழ்ச்சியால் அரசன் வெகுண்டு வட்டைக்கொண் டெறிந்தனன். அப்போது புலவர் கூறியதாவது "அடைக்கலம் புகுந்த புறவினைக் காத்த பெருமன்னனது மரபில் வந்தும் வெறுக்கத் தக்கன செய்தலால் நினது பிறப்பின்கண் ஐயமுடையேன்" என்பதே. அதுகேட்டு அரசகுமரன் நாணப்பட, அவனைத் தேற்றும் பொருட்டு இப்பாட்டினுள் 'நீ வெறுக்கத் தக்க சொல்லை யான் சொல்லியது தவறு. அங்ஙனமிருக்க, நீ தவறு செய்தாற்போல நாணினாய். தப்பினைப் பொறுப்பது நினதுகுலத்திற் பிறந்தார்க்கு எளிது என்பதை அறிவித்தாய். நீ காவிரி கொழித்த மணலினும் பலநாள் வாழ்க' என்று புலவர் செப்பினர். இவர் பார்ப்பார் குலத்தைச் சேர்ந்தவரென்று தெரிகிறது. "நின் முன்னோரெல்லாம் பார்ப்பார் நோவன செய்யலர்" என்றது காண்க.

நலங்கிள்ளிக்குப் பின் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனென்னுஞ் சோழமன்னன் அரசியற்றிய காலை அவனைப் பல புலவர்கள் பாடினர். புறம். சக-ற் கோவூர்கிழார் அவனைப் பாடினர். அவன் பகைவரை வென்று அவர் நாட்டிற்குச் செய்யுங் கெடுதிகளைப் பற்றிப் புலவர் இதனுட் கூறினர். கிள்ளிவளவன் தனது பகைவனாகிய மலையமான் மக்களை யானைக்கிட்டுக் கொல்ல முயன்றபோது இவர் அவ்வரசனுக்கு இரக்கம் உண்டாகும்படி பாடி அவர்களை உய்யக் கொண்டது புறம். சசு - வது பாட்டிற் காணப்படும். அப்பாட்டு மிகவும் நயமுடையது. புறவினது துன்பத்தை நீக்

கிய சோழன் குடும்பத்திற் கிள்ளிவளவன் வந்தவ னென்றும், மலையமான் மக்கள் கற்றவரது வறுமை யைத் தொலைக்கும் உழுதூண்பெருமரபின ரென்றும், அவர்கள் அச்ச மிகுதியால் அதிர்ச்சி யெய்தி யானை யைக் கண்டு அழுகையை மறந்தனரென்றும், அதனைக் கண்டவுடன் முன்னில்லாத புதிய நிலையடைந்தன ரென்றுங்கூறி, 'இவற்றை யுணர்ந்த மன்னன் விரும்பி யது செய்க, என்று இவர் விடுத்தனர். இன்னும் எ0-ம் பாட்டினுள் பாணன் விறலியரைக் குளமுற்றத்துத் துஞ் சிய கிள்ளிவளவனிடம் ஆற்றுப்படுத்து முகத்தால் தைத் திங்களின்கண் குளிர்ந்த பொய்கையைப் போலக் கொள் ளக் கொள்ளக் குறையாத சோற்றையுடைய நாட்டிற் குத் தலைவன் கிள்ளிவளவனென்றும், அவன்நாடு 'அடு நெருப்பல்லது சுடுநெருப்பறியாது' என்றும் புலவர் புகழ்ந்துரைத்தமை காண்க.

இனி, ஆலத்தூர் கிழாரென்பவர் குளமுற்றத்துக் கிள்ளிவளவனைப் பாடிய புறம். கூச-வது செய்யுளில் 'எந்நன்றி கொன்றார்க்கும........' என்ற கருத்தைக் கூறி அஃது அறநூல் கூறிற்றென்று மொழிந்தனர். தனக்கு உணவளித்த அரசனை வாழ்த்தாமை செய்ந் நன்றி கொல்வதாகும் என்று உரைத்தனர். வட கீழ்த்திசை நின்றுவரும் மாரியின் நுண்ணிய பல துளி யினும் பலகாலம் வாழ்கவென்று அவர் அரசனை வாழ்த் தினர். கூகூ-வது பாட்டினுள் கிள்ளிவளவன் கருவூரை முற்றுகையிட்ட காலத்து ஆண்டுள்ள அரசன் போர் புரியாது வாளாவிருந்தமையால் அவனொடு பொருதல்

தகுதியன்றென்பதைப் புலவர் குறிப்பித்தார். காவல் மரப் பாதுகாப்பும் இச்செய்யுளில் வற்புறுத்தப்பட்டது.

குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடிய மற்றொரு புலவர் ஆலூர் மூலங்கிழாரென்பவர். மூலம் என்றசொல் இவர் பிறந்தநாளைக் குறிக்கும்போலும்; ஆலூரென்பது உறையூருக்கு அருகேயுள்ளது. பசுபதீச்சுவரம் என்பது அதுவே. ஆலூர்கிழாரென்பவர் இவரோ வேறொருவரோ தெரியவில்லை. அவர் புறம். ௩௨௨-ல் மருத நிலத்தின் வளத்தைப்பற்றிக் கூறியுள்ளார்.

புறம், ௩௮-ம் பாட்டினுள் ஆலூர் மூலங்கிழாரைக் கிள்ளிவளவன் 'நீர் எங்குள்ளீர், எந்நாட்டினீர்' என்று வினவியதற்கு விடையாக, அவர் அவனது புகழை வியந்தோதிப் பரிசிலர்க்கு ஈயும் பெருஞ் சிறப்புப் பற்றிப் பகைவர் நாட்டிலுள்ள பரிசிலரும் அவனை மிகவும் நாடுவராதலின், தன்னாட்டிற் பிறந்த புலவரை நினைவில் வைத்தல் அவற்கு எளிதன்றென்பதைக் குறிப்பித்தார். புறம். சா-ம் பாட்டினுள் அரசன் இனிய மொழியையும் எளிய செவ்வியையும் உடையனாதல் வேண்டுமென்றும் அதனால் அவன் புகழ் மிகுமென்றுங் குறிப்பித்தார். புறம். உகூக-வது பாட்டிலே இறந்த ஒரு வீரனது இல்லையும் நடுகல்லையும் பற்றிப் பாடினர். அவ்வீரன் இன்னானென்று தெரியவில்லை. புறம். உகூக-ம் பாட்டில், அவர் இறைவனில்லாத வீடு மழித்த தலையோடு அணிகலன் களைந்த கைம்பெண் போன்றதென்றனர்.

புறம். கஎஎ-ம் பாட்டினுள் குடநாட்டு வேளாளத் தலைவனாகிய காரியாதியினது சோற்றுக்கொடையை அவர் வியந் துரைத்தார். அக்காலத்திற் பனையோலையில் உணவு கோடல் குறிப்பிக்கப்பட்டது. புறம். கசுசு-ம் பாட்டினுள் தனக்குப் பொருளீந்த பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாய னென்பானைப் புலவர் புகழ்ந்துள்ளார்; அக் கவுணியன் சிவபெருமானது நான் மறையுட் குறித்தவாறு உக-துறையும் முற்றிய வேள்வி யியற்றின மரபில் வந்தோனென்றும் நீடு நாணும்படியாக மெய்வழங்கித் தம் துணைவியரோடு பல வேள்விகளியற்றித் தமக்குப் பெருவிருந்து செய்தவனென்றுங் குறிப்பித்து, அவனை இமயம்போல நீடூழி வாழ்க வென்று வாழ்த்தினர்; இதனுள் தம்முடைய ஊர் காவிரிப் பாசனத்திலுள்ள தென்பதையுங் குறித்தார். இவர் பாடல்கள் அகத்தும் வந்துள்ளன.

நல்லிறையனா ரென்னும் புலவனார் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடிய புலவருள் ஒருவராவர். இறையனாரென்று திருவள்ளுவ மாலையிற் சொல்லப்பட்ட புலவர் வேறு; இவர் வேறு. புறம். நகூந-ம் பாட்டினுள், பரிசில் விரும்பி அரசனை வேண்டுவது குறிக்கப்பட்டது; காவிரியின் சிறப்பையும் விதந்தோதியுள்ளார்.

எருகாட்டூர்த் தாயங்கண்ணனாரென்னும் புலவர் இவ்வளவனது வீரத்தையும் வண்மையையும் புறம். நகூஎ-ல் நன்கு பாடியுள்ளார். இவர் அப்பாட்டினுள் வளவன் பாம்பின் உரிபோன்ற அழகிய ஆடையையும்,

அருங்கலம் முதலியவற்றையும் இரவலர்க்கு வழங்கினு னென்றும், அந்தணர் வேள்விகளை ஆதரித்தானென்றும் அவன் நிழலில் வாழும்வரை தமக்கு எப்படிப்பட்ட கவலையும் இல்லையென்றுங் கூறினர். இவர் அகத்துள் எ- பாடல்கள் பாடியுள்ளார். அகம். கசகூ-ல், சுள்ளியாறு கடலொடு கலக்குமிடத்து யவனர் மரக்கலங்களிற் பொன் கொண்டுவந்து 'முசிறி' யென்னுந் துறைமுகப் பட்டினத்திற் மிளகு ஏற்றிப் போயினரென்றும், முசிறியை வளைத்து வெற்றியடைந்து அங்குள்ள பொற் பாவை யொன்றினை ஒரு பாண்டியன் கைப்பற்றிச் சென்ற தாகவுங் கூறியுள்ளார். எருக்காட்டூ ரென்பது திருவாரூருக்கு அருகிலுள்ளது. தாயனென்பது புல வரது தந்தை பெயர்போலும். தாயங்கண்ணியாரென் னும் பெண்புலவர்பாடிய புறநானூறு உ௫0-ல், தலைவனை இழந்த நகரானது கைம்மை நோன்புடைய பெண்டிர் போல்வதென்ற கருத்து வந்துள்ளது. இவர் தாயங் கண்ணனாரது தங்கை யென்பாருமுளர்.

குளமுற்றத்துத் துஞ்சிய வளவனைப் பாடிய மற் றொரு புலவர் வெள்ளைக்குடிநாகனர். இவர் நிலத்திற்கு இறையிருக்க இயலாதபடி அரசனைவேண்டி அவற்றை முற்றூட்டாகப் (முழுப்பரிசாக) பெற்றனர். இவர் பாடிய செய்யுள் புறம். ௩௫. இதனுள், மழை குறைந்தாலுங் குடிகளிடத்தே குற்றங் காணப்படினும் உலகம் அரசனைப் பழிக்குமாதலின், அரசர், உழவர் குடிகளைப் பாதுகாத்து அக்காவலாலே ஏனைக் குடிகளையும் பாது காத்தல் வேண்டுமென்றும், கோட் சொல்வாரது

மொழியைப் பொருட்படுத்தக் கூடாதென்றும் புலவர் குறிப்பித்தனர்.

மாறோக்கத்து நப்பசலையாரும் இவ்வளவனைப் பாடியுள்ளார். இவன் இறந்தபின் அவர் பாடிய பாடல்களில் இவனது உயிரைக் கூற்றுவன் இவனிடம் இரந்து பெற்றிருக்க வேண்டுமென்றும், பாணர் முதலியோர் ஆதரவிழந்தன ரென்றுஞ் செப்பினர்; புறம். ருகூ-ல் ஈகை, போரில் வெற்றி, செங்கோன் முறையென்பன அரசன் கடமைகளாதலால், அவை சிறப்பாகப் புகழத் தக்கன அல்ல என்றனர். இப்பாட்டினுட் சோழமன்னன் ஒருவன் புறவிற்கு அடைக்கலங் கொடுத்த கதையும், தூங்கெயிலெறிந்த செம்பியன் கதையுங் குறிக்கப்பட்டன.

இவ்வளவனைப் பாடிய மற்றொரு புலவர் ஐயூர்முடவன ரென்பவர். இவருக்கு ஐயூர்கிழாரென்னும் மற்றொரு பெயருண்டு. இவரது உறுப்புக் காரணமாக முடவனார் என்ற பெயர் எழுந்தது போலும். இவர் பாடல்கள் குறுந்தொகையிலும் அகநானூற்றிலும் வந்துள்ளன.

இவர் புறம். ருக-வது பாட்டில் வளவனது அளவற்ற ஆற்றலையும் ஏனைத் தமிழ்நாட்டு மன்னரை வெல்லுந் தகைமையையும் எடுத்தோதினர். நீர், தீ, வளி முதலிய இயற்கைப் பொருள்களின் வண்மையை இவனது திறமைக்கு உவமித்தார். 'தண்டமிழ்' என்ற சொற்றொடர் தமிழ்நாடு என்ற பொருளில் வந்தது. கறையான் புற்றிலிருந்து ஈசல்புறப்பட்டுச் சுழல்வதுபோல அரச

னது தயவில்லாதவர் சுழல்வாரென்று இவர் குறிப்பித் தார். கிள்ளிவளவன் இறந்தபின் கையறு நிலையாக இவர் பாடிய செய்யுள் புறம். உஉஅ. இதனுள் இறந்த மன் னனை மூடுதற்குத் தக்க தாழி வனைதல் கூடுமோ என்று குயவனை வினவிப் "பெரிய நிலவட்டம் உருளியதாக வும், பெரிய மேருமலை மண்ணாகவுமன்றோ அவனுக்குத் தாழி வனைதல் வேண்டும்! அஃது உன்னால் முடியாதே" என்றுங் கூறி முடித்தார். புலவர்.

புறம். ௩௯௯-ல் தோன்றி மலைக்குத் தலைவனாகிய தாமான்தோன்றிக் கோனிடத்துப் பல பசு நிரைகளை யுந் தன்னுடைய வண்டிக்கு எருதுகளையுந் தான் பெற் றதை இவர் குறித்துள்ளார். கிள்ளிவளவன் இறந்த பிற் பாடு இம்மன்னனிடம் இவற்றை இவர் பெற்றனர் போலும்! கிள்ளிவளவன் காலத்தே இவர் பிறரிடஞ் சென்றனரல்லர்;

"கிள்ளி வளவ னுள்ளி யவற் படர்தஞ்
செல்லேன் செல்லேன்"

என்றது காண்க.

இவர் அகம். உகக-ல் செல்லூர்க்கோசர் தலைவ னாகிய ஆதன் எழினி என்பவனைப் பாடியுள்ளார்.

ஆடுதுறை மாசாத்தனா ரென்னும் புலவர் குளமுற் றத்துத் துஞ்சிய வளவன் இறந்தமைக்காகக் கூற்று வனை யிகழ்ந்து ஒரு பாடல் செய்தனர். (புறம். உஉஎ). இப்பாட்டினுள் பகைவர் பலரைக் கொன்று கூற்றத் தின் பசியை எளிதிற் போக்குங் கிள்ளிவளவனாகிய வொருவனைத் தான் கொண்டது அவனது பேதைமை

யென்று இவர் குறிப்பித்தார்; அங்ஙனம் அவன் செய்தது வினையை விதைத்துப் பயன் காணாது அதனைக் கெடுத்தது போலும் என்றுரைத்தார். தஞ்சாவூர்ச் சில்லா' வில் ஆடுதுறை என்பது மூன்றிடங்களுக்குப் பெயராக அமைந்துள்ளது. காவிரிக் கரையிலுள்ள வடகுரங்காடுதுறை, தென்குரங்காடுதுறை இரண்டும் பாடல் பெற்ற திருக்கோயில்கள். மற்றொன்று வட வெள்ளாற்றங்கரையிலுள்ளது. மாசாத்தனு ரென்பது சாத்தன் என்னுந் தெய்வத்தின் பெயராதலால், கடவுட் பெயரை மக்கட்கு இட்டுவழங்கும் வழக்கம் அக்காலத்திருந்தமைக்கு இஃதொரு எடுத்துக் காட்டாதல் காண்க. குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் தென்னவன் மரபில்வந்த சிறுகுடிகிழான் பண்ணன் என்னுங் கொடையாளியைப் புறம். களரு-ற் பாடியுள்ளான். அவன் கிள்ளிவளவனது நண்பனென்று கோவூர் கிழார் புறம். எ0-ற் குறித்தனர். அவனைப் புறம். ௩அஅ-ல் மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனாரென்னும் புலவர் பாடியுள்ளார். அளக்கர் ஞாழல் என்பது பாண்டிய நாட்டிலுள்ள ஓர் ஊர். இம் மள்ளனார், வெள்ளி தென்திசையி லிருந்தால் மழை குறைபு மென்று புறம். ௩அஅ-ற் குறிப்பதால் இவர் வான நூல் உணர்ந்தவரென்று தோன்றுகின்றது. இவருடைய பாடல்கள் அகநானூறு, குறுந்தொகை, நற்றிணைகளிலும் வந்துள்ளன. பண்ணனை இரண்டு புலவர்கள் அகநானூற்றிலும் பாடியுள்ளார். அகம். ருச-ல் "அவன் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" என்று புகழப்படுகின்றான்.

## கோப்பெருஞ்சோழன்

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்குப் பின் **கோப்பெருஞ் சோழனைப்** பாடிய புலவர்களது **வரலாறு** ஆராயற்பாலது. கலித்துறையில் முல்லைக் கலி பாடிய சோழன் நல்லுருத்திரன் என்பவன் எப்பொழுது ஆண்டனன் என்று தெளிவாக விளங்க வில்லை. அவன் பாடிய புறம். கசுo-ல் உலோபிகளின் நட்பு கூடாதென் றும் பெருந்தகையாளரின் நட்பு வேண்டப்படுவ தென் றும் வற்புறுத்தினர்.

கோப்பெருஞ்சோழன் இளஞ்சேரலிரும் பொறை யால் வெல்லப்பட்டா னென்பது பதிற்றுப் பத்துள் ஒன்பதாம் பத்தில் "பொத்தியாண்ட பெருஞ் சோழ னையும்" என்ற அடியினுற் கருதற்பாலது.

இச்சோழனைப் பாடியவர்கள்; பிசிராந்தை, பொத்தி யார், புல்லாற்றூரெயிற்றியனர், கருவூர்ப்பெருஞ்சதுக்கத் துப் பூதனர், கண்ணனென்னும் புலவர்களாவார்கள்.

இவர்களுள் **பிசிராந்தையார்** என்பவர் கோப் பெருஞ்சோழனுடைய உயிர்த் தோழராய்க் குமரி முனைக் குப் பக்கத்திலுள்ள பிசிர் என்னும் ஊரிலிருந்த பெருஞ் செல்வர். பிசிர் என்னும் ஊர் பாண்டி நாட்டி லுள்ள தென்பது "தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும் பிசிரோன் என்பவன்" என்று கோப்பெருஞ் சோழன் பாடிய பாட்டடியால் விளங்கும். (புறம். உகரு) கோப் பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் நெருங்கிப் பழ காது போயினும் உணர்ச்சி ஒருமைப் பாட்டால் அளவுகடந்த நட்பொடு திகழ்ந்தனர். அஃது அச்சோழ

மன்னன் வடக்கிருந்து உயிர்துறப்ப முயன்றகாலை பிசிராந்தை யாருக்கும் தன்பக்கத்தில் வடக்கிருப்பதற்கு இட மமைக்கும்படி அவன் சொல்லிய பாட்டினால் விளங்கும். அவை புறம். உகரு, உகசு. பிசிராந்தை யார் கோப்பெருஞ் சோழனுக்கு அன்னத்தைத் தூது விடுத்ததாகப் பாடிய புறம். கூஎ-ம் பாட்டு அவருடைய ஒப்பற்ற அன்பினைக் காட்டவல்லது. அன்னத்தை நண்பர் ஒருவர்க் கொருவர் தூதுவிடுதற்கு இஃதொரு சிறந்த எடுத்துக் காட்டாகும். கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்தபோது அவன் கருதியபடியே அவனோ டுயிர் நீப்பதற்கு வந்த பிசிராந்தையாரைக் கண்டு பொத்தியார் புகழ்ந்து பாடிய பாட்டு மிகவும் அருமை யானது. அது புறம். உகஎ.

“ இசைமர பாக நட்புக் கந்தாக
வினையதோர் காலை யீங்கு வருதல்
வருவ னென்ற கோனது பெருமையு
மதுபழு தின்றி வந்தவ னறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே ”

என்றது காண்க.

பிசிராந்தையார் சோழன் வடக்கிருந்த விடத்திற்குச் சென்றகாலை அவரது இளந்தோற்றத்தைக் கண்ட சான்றோர்கள் அவரை நோக்கி ‘ உம்மைப்பற்றி நாங்கள் கேட்டிருக்குங்காலம் பலவே; நரைநுமக்கு இல்லையாலோ ’ என்றதற்கு அவர் சொல்லிய விடை யாவருடைய எண்ணத்திற்கும் இன்பந் தருவதாகும். அது புறம். கசுக.

" யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனு
மல்லவை செய்யான் காக்கு மதன்றலை
யான்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழுமூரே "

பிசிராந்தையார் பொய்ம்மையை விரும்பாதவ ரென்பதும் சோழன்பாலுள்ள பெருநட்பினால் தன் பெயர் பேதைச்சோழன் என்று கூறுமியல்பின ரென்பதும், நண்பருக்குத் துன்பம்வந்தகாலை தாமுமதனை யுடனுகரும் தன்மையினரென்பதும் கோப்பெருஞ் சோழன் அவரைப்பாடிய புறம். உகரு, உகசு-வது பாட்டுக்களினால் இனிது விளங்கும். அவன்

" புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே
தன்பெயர் கிளக்குங் காலை யென்பெயர்
பேதைச் சோழ னென்னுஞ் சிறந்த
காதற் கிழமையு முடையன் "

" செல்வக் காலை நிற்பினு
மல்லற் காலை நில்லலன் மன்னே "

என்றது காண்க.

புறம். உகரு-ன் ஏனைய அடிகளால் பாண்டிய நாட்டில் அக்காலத்திலே முல்லைநிலத்தில் விளைந்த அவரைக்காயைக் கொய்து விற்கும் இடையர்கள் வரகு அரிசிச் சோற்றினையும் வேளைப்பூக்கலந்த இனிய தயிர்க்கூழையும் அருந்தினர்க ளென்பது தெரிகின்றது.

கோப்பெருஞ் சோழன் பொத்தி என்னும் புலவ ரோடும் உண்மையான நட்புடையவனுப் நெடுங்காலம் அளவளாவி மகிழ்ந்தவ ரென்பது புறம். உகஉ.

“ கோழியானே கோப்பெருஞ் சோழன்
பொத்தி னண்பிற் பொத்தியொடு கெழீஇ
வாயார் பெருநகை வைகலு நக்கே ”

என்பதனுல் விளங்கும்.

இவ்வரசன் வடக்கிருந்து உயிர்விடத் துணிந்த காலைப் பொத்தியாரும் அவ்வாறே செய்யக்கருதினுர். அப்போது அவரைத் தன் மகன் பிறந்தபின் வருக என்று அரசன் பணித்தனன் என்பது புறம். உஉஉ-ல்

“ அழலவிர் வயங்கிழைப் பொலிந்த மேனி
நிழலினும் போகாநின் வெய்யோன் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென ”

எனக்கூறியது காண்க.

அவ்வாறே பொத்தியாரும் மீண்டுவந்து அரசன் இல்லாத உறையூரைக் கண்டு அழுது பாடிய பாட்டு மிகவும் உருக்கத்தைத் தருகின்றது. அது புறம். உஉ0. அரசன் இறந்த விடத்திட்ட நடுகற்கண்டு அவன் புக ழைப் பாடிய பாட்டும் அனையதே. அது புறம். உஉக. மகன் பிறந்தபின் சென்று இடந்தாவென்று பொத்தியார் கேட்டதும், கல்லாகியும் இடங் கொடுத்த சோழனை வடக்கிருந்த பொத்தியார் பாடியதும் யாவர்க்கும் அள வற்ற வியப்பைத் தருவனவே. (புறம். உஉஉ, உஉந.) வடக்கிருத்தல் என்பது துறக்கம் எய்தக்கருதி உலக

நுகர்ச்சியை நீத்து நோன்பினுல் உடலை மெலிவித்துத் தவப்பயிற்சியால் உயிரைவிடுத்தலாம்.

" தீதில் யாக்கையொடு மாய்தல் தவத்தலையே "

என்றது புறம். உகசு-ற் காண்க.

கோப்பெருஞ் சோழன் புலவர்கள் மீது மிக்க பற்றுடையவன் என்பது புல்லாற்றூர் எயிற்றியனார் அவன்றன் மக்கள்மேற் போர்தொடுத்தல் தகாதென்று கழறியபோது, அவன் அவர்கண்மேற் செல்லாமையின் வைத்துணரப்படும். எயிற்றியனாரது பாடல் புறம். உகரு-ஞல் அக்காலத்துந் தந்தையரசு மக்கட்கே உரிய தென்பதும், புகழையும் உயர்நெறி வாழ்க்கையையும் நன்மன்னர் கருதவேண்டு மென்பதும் பெறப்படும். இப்புலவர் அரசர்க் குறுதியான நன்மதி கூறுவதில் மிக்க வீரமுடையவர். கோப்பெருஞ் சோழனேடு அவனது பல நண்பர் வடக்கிருந்து உயிர் துறந்தா ரென்பது,

" பலரா லத்தைநின் குறியிருந் தோரே "

என்று கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனர் புறம். உகக-ற் கூறியதனுற் பெறப்படும்.

இப்புலவர் தாம் அரசனேடு வடக்கிருப்பதற்குப் பிற்பட்டமையால் அரசன் வெறுத்துத் தம்மோடு உரையாடவில்லைபோலு மென்று தான் சொல்லிய பாட்டினுள் குறித்துள்ளார். இவர் கருவூர் என்னும் வஞ்சிமா நகரிலே நான்கு தெருக்கள் ஒன்றுகூடு மிடத்திற் கோயில் கொண்டிருந்த சதுக்கப் பூதத்தின் பெயரினை யுடையவராகத் தெரிகின்றது.

சேய்மைத்தாகிய பலபல விடங்களிலிருந்து பிசிராந்தையார் போன்ற நண்பர் ஒருங்கு வடக்கிருந்தமையைக் கண்ட கண்ணகனாரென்னும் புலவர் தாம் கூறிய புறம். உகஅ-வது பாட்டினுள்,

" என்றுஞ் சான்றோர் சான்றோர் பாலராப
சாலார் சாலார் பாலரா குபவே "

என்று மொழிந்தது உற்று நோக்கத்தக்கது.

பாண்டியர் மரபில் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மகன் வெற்றிவேற்செழியன் காலத்திற் சீத்தலைச் சாத்தனார் மணிமேகலை யியற்றினர். இவனே சித்திரைமாடத்துத் துஞ்சிய நன்மாறன் போலும்! சீத்தலைச் சாத்தனார் மதுரையிற் கூலவணிகம் செய்தமைபாற் கூலவாணிகன் என்னும் அடைமொழி இவர் பெயருக்குச் சேர்க்கப்பட்டது. சீத்தலை யென்பது இவரூரென்று சிலர் சொல்வர். சிலர் இப்புலவர் பிறர் நூல்களிலுள்ள குற்றங்களைக் கண்டு பொறுது தலையிற் சீ வரும்படி குத்திக் கொள்வதனால் இப்பெயர் பெற்றாரென்பர். புறம். ருசு-ல் இவர் நன்மாறனைப் புகழ்ந்து பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை முதலிய நூல்களிலும் வந்துள்ளன. இம்மன்னனுக்குப் பின்பு ஆண்ட பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியாவன்; இவனது அளவற்ற ஆற்றலையும் ஏனைத் தமிழ்நாட்டு மன்னரை வெல்லுந் தகைமையையும் ஐயூர்முடவனாரென்னும் புலவர் புறம். ருக-ல் எடுத்தோதினர்,

இம்மன்னனைப் பாடிய மற்றொரு புலவர் மருதன் இளநாகனா ரென்பவர். இவர் மதுரை மருதன் இள நாகனார் என்றுங் கூறப்படுவர். இவர் கலித்தொகையில் மருதக் கலியைப் பாடினவர். புறம். ருஉ-ல் மாறன் வழு தியின் வீரத்தைப் பாடுமிடத்து, இவர்

" வடபுல மன்னர் வாட வடல்குறித்
இன்னா வெம்போ ரியறேர் வழுதி "

என்றமையால், இவ்வழுதி வடநாட்டரசரைப் போரிற் வென்றதாகத் தெரிகின்றது.

இப்புலவர் அகநானூற்றிற் பல பாடல்கள் பாடி யுள்ளார். இவர் அகம். ருசு-ல், கண்ணன் தொழுனை யாற்றங் கரையில் அண்டர் மகளிருடைய உடைகளைக் கவர்ந்துகொண்டு குருந்தமரமேல் ஏறி யிருந்தது குறிக் கப் பட்டது. இவர் திருப்பரங்குன்றத்து முருகப் பெரு மானை நல்லந்துவனார் பாடியதைப் பற்றியும் இச்செய்யு ளிற் குறித்தனர். பிற பாடல்களிற் கழுவுள், வாணன், கொங்கர், கோசர் முதலியவர்களைப் பற்றியும் இவர் பாடி யுள்ளார். இவர் இறையனாரகப்பொருளுக்கு ஓர் உரை செய்ததாகக் கூறுவர்.

## இலவந்திகை நன்மாறனார்.

கூடகாரத்துத் துஞ்சியவழுதிக்குப் பின் அரசு செலுத்தியவன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன் மாறன். இவனையும் மருதன் இளநாகனார் புறம். ருரு-ல் பாடியுள்ளார். அதனுள் சிவபெருமான் திரிபுரமெரித்த கதை கூறப்பட்டது. அக்கடவுளுடைய நெற்றிக்கண் போலப் பிற அரசரிலுஞ் சிறந்து விளங்கு கின்றவன்

நன்மாறன் என்றதால் இப்புலவர் சைவர் என்பது தெளிவு. இப் பாட்டினுள் முருகப்பெருமானது திருச்செந்திலும் புகழ்ந்துரைக்கப் பட்டது.

" வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி
னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக்
கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவா ழெக்கர் மணலினும் பலவே "

—புறம், ருரு.

இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனைப் பாடிய மற்றொரு புலவர் இடைக்காடனா ரென்பவர். இவர் இடைக்காடென்னும் ஊரைச் சேர்ந்தவர். இவரைப் பற்றித் திருவிளையாடற் புராணத்திற் கூறியிருப்பது ஒருபுறமிருப்ப, இவர் 'ஊசிமுறி' யென்றநூலொன்று செய்ததாகப் பழைய உரைகளிற் காணப் படுகின்றது. சிலர் ஊசிமுறி யென்பது இக்காலத்துச் சுருக்கெழுத்துப் (Shorthand) போல்வது என்கிறார்கள் இவர் புறம். சஉ-ல் இலவந்திகை நன்மாறனுடைய செங்கோன்மையையும் வீரத்தையும் வண்மையையும் எடுத்துக்கூறி,

" மலையி னிழிந்து மாக்கட ணோக்கி
நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லாம் நின்னோக் கினரே "

என்பது பாராட்டத் தக்கது.

இவருடைய பாடல்கள் அகநானூற்றி னுள்ளும் வந்துள்ளன. இவர் முல்லைத் திணையையே மிகுதியும் பாடியுள்ளார். இதனால் இவர் இடையர் மரபினராயுங் காடனென்ற பெயருடையராயுந் திகழ்ந்தனரென்று சிலர் கூறுவர். இந்நன்மாறனைக் காவிரிப்பூம் பட்டினத்துக்

காரிக்கண்ணனார் புறம். ருஎ-ற் பாடினமை முன்னமே கூறப்பட்டது.

இவனைப் பாடிய மற்றொரு புலவர் **வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்.** புறம். ககூஅ-ல் இவனது வண்மையையுஞ் செல்வத்தையும் புகழ்ந்து,

“ ஆலமர் கடவுள் அன்னநின் செல்வம் ”

என்று கூறி, அவனது செல்வம் என்றும் நிலைபெற்றதென்பதைக் குறிப்பித்தார்.

இவர் முழவினைக் கடலொலிக்கு உவமை கூறினமையால் முழவிற்குரிய பெயராகிய ‘ பேரி ’ யென்பது இவரது இயற்பெயராகிய சாத்தனா ரென்பதோடு இணைக்கப்பட்டது போலும்! இவர் நாணய ஆராய்ச்சியாள ரென்பது வண்ணக்கன் என்ற சொல்லால் விளங்குகின்றது.

இலவந்திகை நன்மாறனைப் பாடிய புலவருள் தலையாயவர் **மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரர்.** மதுரை நக்கீரர் என்பவரும் இவரே. இவர் பாடிய புறம். ருசு-ல் அவனை நீலகண்டர், திருமால், பலதேவர், முருகன் என்னும் நான்கு கடவுளர்க்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். இவர் ‘மணிமிடற்றோன்’ என்றது உருத்திரமூர்த்தியையே. அது.

“ கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம் ”

என்ற அடியிற் ‘ கூற்றம் ’ என்பது உருத்திரனைக் குறிப்பதால் விளங்கும்.

இச்செய்யுளுள் யவனர் தேறல் கொண்டு வந்து கொடுப்பது கூறப்பட்டது. இவர் புறம். கஅக - ல்

நிலையாமையை எடுத்துக்கூறிச் செல்வத்தின் பயன் ஈகை யென்றனர். இவர்,

" உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீத
றுய்ப்பே மெனினே தப்புந பலவே "

என்றது காண்க.

புறம். ௩௯௫-ற் சோழநாட்டுப் பிடவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தனை இவர் பாடியுள்ளார். இவர் கபிலர் காலத்துக்குப் பிற்பட்டவர். இவருடைய வரலாறு பின் விரிவாக விளக்கப்படும்.

இலவந்திகை நன்மாறனைப் பாடிய மற்றொரு புலவர் ஆவூர்மூலங்கிழார். புறம். ௧௯௬-வது பாட்டினுள் இவனைப் பரிசில் நீட்டித்ததற்காகச்சினந்து அவனுக்கு முறையறிவுறுத்தி அவன் புதல்வர் வாழ்க வென்று எதிர்மறை வாழ்த்துக்கூறித் தம் இல்லத்திற்கு மீள்வதாயினர். இவர் தம் மனைவியின் கற்பையுந் தமது திண்மையையும் இதனுட் குறிப்பித்தனர். இப்புலவர் இலவந்திகை நன்மாறனுக்குப்பின் ஆண்ட பாண்டியன் கீரன் சாத்தனைப் புறம். ௧௭௮-ற் பாடியுள்ளார். கீரன் சாத்தன் தன்பால் வந்த சான்றோரை வற்புறுத்தி உண்பிப்பவனென்றும், போரில் அஞ்சிப் புறங்கொடுத்தோடு வார்க்குப் பாதுகாப்பாக முன்னிற்பவனென்றும் இவர் கூறினர்.

கீரன் சாத்தனுக்குப் பின் அறிவுடைநம்பி அரசாண்டனன். அவன் கோப்பெருஞ்சோழன் காலத்தவன். அவனைப் பாடிய பிசிராந்தையார் புறம். ௧௮௪-ல் அரசன்

இறைகொள்ளும் நெறியை யறிந்துகொள்ளின் நாடு தழைக்குமென்றும், அன்பில்லாது இறைகொள்ளின் நாடும் மன்னனும் கெடுமென்றுங் கூறினர். பாண்டியன் அறிவுடை நம்பி பாடிய புறம். ஙஅஅ-ல் புதல்வரின் சிறப்பை மிகவும் அழகாக எடுத்துக் கூறியுள்ளார்.

" படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே "

இவருடைய பாட்டு ஒன்று அகத்தும் வந்துள்ளது.

## நக்கீரர் காலம்.

இலவந்திகை நன்மாறன் காலம் முதல் நக்கீரர் காலமென்று சொல்லலாம். மேற்கூறிய மன்னருக்குப் பின் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அரசாண்டனன். இவன் இளமையிலே மிக்க வீரமுங் கல்வியு முடையனாய் விளங்கினன். இவன் புறம். எ௨-ல் நால்வகைப் படையோடுந் தம்மை யெதிர்க்க வந்த அரசரைத்தான் போரின்கண் வென்றேட்டாவிடில் தான் கொடுங்கோலன் ஆகுக என்றும், தான் மாங்குடி மருதன் முதலிய புலவர்களாற் பாடப் படாதொழிக என்றும், தான் வறுமையடைக வென்றும் வஞ்சினங் கூறினன். அகம். ௩௬-ல் இவன் சேரல், செம்பியனென்னுஞ்

சேர சோழ மன்னரையுந் திதியன், எழினி, எருமை யூரன், இருங்கோவேள், பொருநன் என்போரையும் வென்று அவர்கள் முரசினையுங் குடையினையுங் கைப் பற்றினமையை மதுரை நக்கீரர் பாடியுள்ளார். இவனை அகம். ௧௧௬-ல் பரணர் பாடியுள்ளதாகச் சொன்னது தவறு. அங்குக் கூறிய பசும்பூட் பாண்டியன் இவனல் லன். அகம். உ௫௩-ல் கூடற்பறந் தலையில் இருபெரு வேந்தரைப் பொருததாகக் கூறப் பட்டவன் நெடுஞ் செழியனல்லன். நெடுஞ்செழியனை ஆலம்பேரி சாத்தனா ரென்பவர் அகம். ௧௭௫-ற் பாடி யுள்ளார். அவரும் ஆலங்கானத்துப் போரைக்குறித்துள்ளார். இவர் பாடல் நற்றிணையுள்ளும் (௩௯௩) வந்துள்ளது. அகம் அ௧-ல் இவர், கடலன் என்னுங் கொடையாளியின் வீரத்தைவும் வண்மையையும் புகழ்ந்து அவன் ஊர் விளங்கில் என்ப தையும் விளக்கினர். அகம். ௧௪௩-ல், சேரமன்னன் மற வனை பிட்டனையும் பாடினர். இவர் பாலையை மிகுதியும் பாடினவர்.

ஆசிரியர் நக்கீரர் தலையாலங்கானத்துச் செழியன் மீது நெடுநல்வாடை யென்னும் பத்துப்பாட்டின் பகு தியைப் பாடினர். பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப் படை பாடினவர் இவரே. இவருடைய பாடல்கள் மிகுதி யாக அகநானூற்றில் வந்துள்ளன. புறநானூற்றில் இவர் பாடிய பாட்டைப்பற்றி முன்னமே எடுத்து ஓதப்பட் டது. பதினோராந் திருமுறையில் நக்கீரர் பாடியதாகக் கூறும் நூல்கள் இவர் செய்தனவோ வென்பது ஐயப் பாடு. நாலடிநாற்பது என்னும் யாப்பு நூல் ஒன்று இவர்

செய்ததாக யாப்பருங்கல விருத்தியால் தெரிகின்றது, தலையாலங்கானத்துச் செருவென்ற செய்தியை இவர் அகம். உகூ-ற் கூறியுள்ளார். அகம். ௱ள-ல் முசிறியென்னும் மேலைக்கரைப் பட்டினத்தை முற்றிய செழியனை விதந்து ஓதினர். அகம். எஅ-ல் கபிலர் பாரிநகரிலுள்ளவர்களுக்கு முற்றுகைக்காலத்தில் உணவளித்துக் காத்ததைக் குறித்தனர். இவர்,

"உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்"

என்று கபிலரைப் புகழ்ந்தது காண்க.

சேரமன்னருட் கோதையென்பவனது கருவூரையும் ஆன்பொருநையையும் அகம். கூஉ-ற் குறித்துள்ளார். அகம். கஉகூ-ல் திதியன் என்னுங் குறுநில மன்னனுடைய புன்னைமரம் ஒன்றினை அன்னியென்பவன் வெட்டி விட்டதற்காக அவ்வன்னியைக் குறுக்கைப் போர்க்களத்தில் திதியன் கொன்றதை இவர் கூறியுள்ளார்; அகம். உ௱ரு-ல் கோசரைவென்ற பொலம் பூட்கிள்ளியென்னுஞ் சோழன் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்ததாகக் கூறினர். அக்கிள்ளி கரிகால் வளவனோ வேறெவனோ தெரியவில்லை. இவர் அகம். உ௱கூ-ற் காரி, ஓரி யென்பவர்களையுங் கொல்லிமலையையும் பற்றிக் கூறினர்; அகம். உஉள-ல் தழும்பனது ஊணூரைப் பற்றியும், அவனைத் 'தூங்கல்' என்னும் புலவர் பாடினரென்பதையும் இயம்பினர். இவர் ஊணூர்க்கருகே சிறந்து விளங்கிய நிதிமிக்க மருங்கூர்ப் பட்டினத்தையும் அப்பாட்டின்கண் விதந்தோதினர்.

இவர் அகம். உசகூ-ல் வேம்பிநாட்டையாண்ட சிற்றரசனாகிய முசுண்டை யென்பவன் புலவர்க்குக் காளைப் பரிசில் கொடுப்பதை விதந்தோதினர்; அகம். உருகூ-ல், பசும்பூட்பாண்டியன் என்பவன் கொங்கரை வென்றதைக்கூறினர். அதனுள் இவர் வடுகர் பெருமகனாகிய எருமை யென்பானது நன்னாட்டைக் குறித்தனர்; அகம். உளகூ-ல், குட்டுவனது தொண்டி முன்றுறையைப் பற்றிக் கூறினர். இன்னும் ஆசிரியர் நக்கீரர் குயக்கொண்டான் என்பான் சாவவும் பிழைக்கவும் பாடியதாகத் தெரிதலால், இவர் பெருந்தவத்தின ரென்பது போதரும். இவரைப்பற்றிய திருவிளையாடற் புராணக்கதை இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் காலத்தில் நடைபெற்றிருக்கலாம். சங்க நூல்களில் அக்கதையைப் பற்றித் தெளிவான குறிப்பு யாதுமில்லை.

இவருடைய தந்தையாராகிய மதுரைக் கணக்காயனா ரென்பவரும் ஒரு சிறந்த புலவராகத் திகழ்ந்ததாகத் தெரிகிறது. அவர் புறம். கூகூ0-ல் ஒரு படைமுழுவதையும் ஒரு வீரன் எதிர்த்து வென்ற செய்தியைப் பாடியுள்ளார். கணக்காயனா ரென்பவர் பள்ளிக்கூடத்துப் போதகாசிரியர். இவர் அகநானூற்றுள் சில பாடல்கள் இயற்றி யுள்ளார். இவர் அகம். உஎ-ல் கொற்கைப் பெருந்துறையில் முத்தெடுத்ததைக் குறித்தனர். இவர் பசும்பூட் பாண்டியனைப் பற்றியும் அவன் காலத்துப் பாக்கத்துப் பெருந்துறையினையுடைய சோழன் ஒருவனைப் பற்றியும் அகம். கூகூஅ-ற் சிறப்பித்தனர்.

ஆசிரியர் நக்கீரனார் அகத்துப்பாடிய திதியன் அன்னி போரைப் பற்றி வெள்ளி வீதியார் என்னும் பெண்புலவர் அகம். சடு-ற் குறித்தனர். அதனுள் ஆதி மந்தி போலத் தாமுந் தம் கணவனைத் தேடிப் போன செய்தியையுஞ் செப்பினர். இதனை ஔவையாரும் அகம். கசஎ-ற் குறிப்பித்தது காண்க. வெள்ளி வீதியாருடைய பாடல்கள் நற்றிணையிலும் வந்துள்ளன. திதியன் அன்னி யென்பவனைப் பற்றிக் கயமனார் என்னும் புலவர் அகம், கசடு-ற் பாடியுள்ளார். இவர் பாடிய அகப்பாடல்கள் பாலைத் திணைக்கு உரியனவே. இவர் புறம். உருச-ல் ஓர் இளைய வீரன் காட்டிடை இறந்ததற்காக வருந்தும் முது பாலைத் துறையை அமைத்துள்ளார். இவருடைய பாடல்கள் குறுந் தொகையிலும் நற்றிணையிலும் வந்துள்ளன. கயத்தில் முழுகும் பெண்களது கண்களை உப்பங்கழியில் நீர் மிகுந்தவிடத்து மலருங் கருநெய்தற் பூவிற்கு உவமித்தமையால் (குறுந்தொகை க) இவர் இப்பெயர் பெற்றன ரென்பர்.

## மாங்குடிமருதனார்.

தலையாலங்கானத்து நெடுஞ் செழியனால் சிறப்பித்துக் கூறப்பட்ட புலவர் மாங்குடி மருதனா ரென்பவர் மருதனார் பாடிய மதுரைக் காஞ்சிக்குத் தலைவன் நெடுஞ் செழியனே. இவர் மாங்குடி கிழார் எனவும் அழைக்கப் படுவர். இவருடைய பாடல்கள் புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை முதலியவைகளில் வந்துள்ளன. புறம். உச-ல் நெடுஞ்செழியன் வேள் எவ்வியின் மிழலை நாட்டையும், முத்தூர்க் கூற்றத்தையுங் கைப்பற்றியதாகக் கூறி, அவனது பெருமித வாழ்வை விதந்தனர். அவன்

வேள்வி பல செய்ததைப் புறம். உசு-ற் குறித்தனர் இவர் பாடிய புறம். கூகூ௫-ல், அடிமையாக வேலை செய்யும் பழங் குடிகள் இன்னவென் றுரைத்தார்.

" துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை "

என்றது காண்க.

இவர் வாட்டாற் றெழினியாதன் என்பவனைப் புறம். கூகசு-ல் வாழ்த்தி யுள்ளார்.

## கல்லாடனார்.

நெடுஞ்செழியனைப் பாடிய மற்றொரு புலவர் கல்லாடனா ரென்பவர். கல்லாடம் என்பது அவருடைய ஊர் போலும். இவர் தொல்காப்பியத்துக்கு ஓர் உரை இயற்றியதாகத் தெரிகின்றது. இவருடைய பாடல்கள் அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை என்பவைகளிலும், பன்னிருபாட்டியலிலும் வந்துள்ளன. இவர் புறம். உ௩-ல் நெடுஞ்செழியனது கொற்றத்தைச் சிறப்பித்துப் பாடியவிடத்து முருகப்பிரானை விதந்தோதினமையால் இவர் அக்கடவுளிடத்து அன்புள்ளவர் என்று தோன்றுகின்றது. அவனைப் பாடிய புறம். உசு-ல், கைம்பெண்டிர் கூந்தல் களைதலைக் கூறியுள்ளார். அம்பர்கிழான் அருவந்தை யென்னும் வேளினைப் புறம். கூஅரு-ல் இவர் பாடியுள்ளார். அம்பர் என்பது சோழ நாட்டில் உள்ளது. அது,

" காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி யம்பர் கிழவோன் "

என்றதால் இனிது விளங்கும்.

இவர் பொறையாற்றூர் கிழானென்னும் வள்ளலை யும் புறம். ௩கக-ற் பாடியுள்ளார். புல்லியின் வேங்கடத் தைப் பற்றி அகம். அஅ-ல் விதந்தனர். அகம். ககந-ல் அஃதை யென்னும் வள்ளலைப் போற்றிக் கோசரையும் புகழ்ந்துள்ளனர். பிற பாடல்களில் நன்னனை நார்முடிச் சேரல் வென்றதையும், நெடுஞ்செழியனது ஆலங்கானப் போரையும், காரி ஓரியைக்கொன்று கொல்லிமலையைச் சேரர்க்கு ஆக்கியதனையும், பிறவற்றையுங் கூறினர். பிற்காலத்திலே யெழுந்த கல்லாடம் எனப்பட்ட நூல் இவராற் செய்யப்பட்டதன்று. கக-ந் திருமுறையிலுள்ள கண்ணப்பர் திருமறமும் இவர் பெயருடைய வேறொரு வராற் செய்யப் பட்டது போலும்.

## குடபுலவியனார்.

நெடுஞ் செழியனைப் பாடிய மற்றொரு புலவர் குட புலவியனார் என்பவர். இவர் நெடுஞ் செழியனைப் பாடிய புறம். கஅ-ல் உலகத்தில் உண்டி முதலிய செல்வத்தைப் பெருகச் செய்வது அரசர்க்குப் புகழ்தருவது என்று கூறுமிடத்து 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே' யென்றனர். கோடி யென்ற எண்ணைக் கடை யெண்ணாகக் கொண்ட பேரெண்கள் அக்காலத்தில் வழங்கின வென்பது,

"ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய
பெருமைத் தாகநின் னாயுடாளே"

என்று வாழ்த்தினமையாற் றெளியப்படும். அவரது போர்க் களத்தின் சிறப்பையும் புறம். கக-ற் பாடி யுள்ளார்.

## குறுங்கோழியூர் கிழார்.

இந் நெடுஞ்செழியனைப் பாடிய குறுங்கோழியூர் கிழா ரென்பவர், இவன் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேர விரும்பொறை யென்பானைப் போரிற் பிணித்ததும், அவன் அப்பிணிப்பு நீங்கி அரசிருக்கை எய்தியதும் எடுத்துக்கூறி அவனை வியந்துபாடியது புறம். கஎ-வது பாட்டாகும். அதன்கண் தமிழ்நாட்டு எல்லையாகத் தெற்கே குமரியையும், வடக்கே இமயத்தையும், கிழக்கி லும், மேற்கிலும் கடலையும் உரைத்தனர். குறுங்கோழி யைக் கருங்குழி யென்று கூறுவாரு முளர். அவர் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேர விரும்பொறையின் அறிவையுஞ் செங்கோன்மையையும் வியந்து, புறம். உ0-ற் பாடினர். அப்புலவர் அவன் பாதுகாத்த நாடு விண்ணவர் உலகத்துக் கொப்பாகு மென்று, புறம். உஉ-ற் குறித்தனர். இவ் வரசன் யானைக்கண் போன்ற கண்ணை யுடையவனும் சேயென்னும் இயற்பெயரையுடையவனுயு மிருந்தனன்.

## இடைக்குன்றூர் கிழார்.

இடைக்குன்றூர் கிழார் என்பவரும் நெடுஞ்செழிய னைப் பாடியுள்ளார். நெடுஞ்செழியனை இவர் பசும்பூட் செழியன் என்று விதந்தனர். அவன் மிக்க இளமைப் பருவத்தில் எழுமன்னர்களை வென்றதின் பெருவியப்பை எடுத்துரைத்த பாட்டு புறம். எச, எஎ, எஅ, எகூ. குழந்தைகளுக்கு ஐம்படைத்தாலி யணிவது அக்காலத்து வழக்கமென்று புறம். எஎ-ல் விளங்கும்.

## இளங்கீரனார்.

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர விரும்பொறை ஐங் குறுநூறு தொகுப்பித்தனன். இவன் மகனாகிய மாந்த ரஞ்சேர விரும்பொறையைப் பொருந்தில் இளங்கீரனா ரென்னும் புலவர் புறம். ருங-ற் பாடியுள்ளார். இவன்

விளங்கில் என்னும் ஊரைப் பாதுகாத்தவ னென்றும் அழகிய செய்யுள் செய்வாரை மிகவும் போற்றும் இயல் பின னென்றுங் குறித்த விடத்து அவன் தம்காலத்தில் இருந்திலனேயென்று வருந்தியதாக இப்புலவர் கூறினர்.

## கூடலூர்கிழார்.

புறம். உ௨௯-ற் கூடலூர் கிழார் என்னும் புலவர் யானைக்கட்சேய், தாம்குறித்த நாளில் இறந்து விட்டதற் காக வருந்தினர். அப்பாட்டினால் இவர் வானநூல் வல்லவ ரென்பது தெளிவு.

## வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனர்.

இவன் காலத்து இருந்த சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி யாவன். அவன் இவனோடு போர் புரிந்ததாகத் தெரியவருகிறது. இருவரும் போர்புரிந்த காலை சோழனுக்குத் துணையாயிருந்த தேர்வன் மலையன் என்னும் வீரனை வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தன ரென்னும் புலவர் புறம். ௧உ௫-ற் பாடியுள்ளார். அவன் சோழனுக்கு வெற்றி யெய்துவித்த தாகவும், உழுதமாடு வைக்கோலைத் தின்றாற் போலப் பிறர்க்கு நல்லவற்றைக் கொடுத்து எஞ்சியதை உண்பானென்றும் அவர் இப்பாட் டினுட் குறித்தனர்.

## பாண்டரங்கண்ணனும் உலோச்சனும்.

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாண்ட ரங் கண்ணனெ ரென்னும் புலவர் புறம். ௧௬-ற் பாடி யுள் ளார். அவன் பகைவரது வளமிக்க நாட்டை வென்று எதிர்த்ததையும் அவனுடைய யானைகள் அவனுக்கு வெற்றி தரும்படி போர் புரிந்ததையும் இச்செய்யுளின்கண் எடுத்துரைத்தனர். இக் கிள்ளியை உலோச்சன ரென் னும் புலவர் புறம். ௩௭௭-ல் வாழ்த்தியுள்ளார். இவரு டைய பாடல்கள் நற்றிணையிலும் வந்துள்ளன.

## ஔவையார்.

மாந்தரஞ்சேர விரும்பொறைக்குப் பின் சேரமான் மாவெண்கோ வென்பவன் அரசாண்டனன். அவன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்கு நண்பன். அக்காலத்து அரசாண்ட பாண்டிய மன்னன் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியாவன். இம்மூவேந்தரும் ஒருங்கிருந்த விடத்து அவர்கள் முத்தீப்போல் விளங்கினரென்றும், அவர்கள் மூவரும் இரவலர்க்கும் பிறர்க்கும் வண்மை யுடையராய் ஒற்றுமைப் பட்டு நெடுநாள் வாழ வேண்டு மென்றும் ஔவையார் பாடிய பாட்டு, புறம். கூகஎ.

## ஐயூர் மூலங்கிழார்.

உக்கிரப் பெருவழுதி, கானப்போரிலிருந்த வேங்கை மார்பனென்னுஞ் சிற்றரசனை வென்று அவனது கோட்டையைக் கைப்பற்றியதாக ஐயூர்மூலங்கிழார் புறம். உக-ல் பாடியுள்ளார். உக்கிரப் பெருவழுதி அகநானூறு தொகுப்பித்தவன். கானப்பேரென்பது காளையார் கோவிலென்று இப்பொழுது வழங்குகின்றது.

கடலுண் மாய்ந்த இளம்பெரு வழுதி எக்காலத்தவனென்று விளங்கவில்லை. இவர் பரிபாடலில் திருமாலைப்பற்றிப் பாடியிருக்கின்றார். புறநானூற்று கஅஉ-ம் செய்யுளில் விருந்தோம்பலும், புகழ் விரும்பிப் பழியஞ்சுதலு முடையராய்த்

> "தமக்கென முயலா நோன்றாட்
> பிறர்க்கென முயலுந ருண்" மையானே,

இவ்வுலகம் நிலை பெறுவதென்று குறித்தமையான், இவருடைய அறவுணர்ச்சி பெரிதுந் தலைசிறந்தது. நற்றிணை தொகுப்பித்த பன்னாடுதந்த மாறன்வழுதி, உக்

கிரப் பெருவழுதிக்குப் பின் ஆண்டிருத்தல் வேண்டும். இவர்க்குப் பின் வரகுணனும் அவனுக்குப்பின் மாணிக்க வாசகர் காலத்து மன்னனும் அரசு செலுத்தியிருக்கலாம்.

## சேரரது இறுதிக்காலம்.

சேரமன்னருள், சேரமான் மாவெண் கோவிற்குப் பின் இன்னமன்ன ரரசாண்டனரென்பது விளங்கவில்லை. சேரமான் வஞ்சனென்னும் அரசன் திருத்தாமனாரென்னும் புலவராற் புறநானூற்று ௩௯அ-ல், புகழ்ந்து பாடப் பட்டனன்.

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை காலமும் இனிது விளங்கவில்லை. அவன் புறநானூற்று உசரு-ற் பாடிய பாடலால், தன் மனைவி இறந்தபின் தான் உயிர் வாழ்வதைப்பற்றிக் கவன்றதாகத் தெரிகிறது. இதனால் அவனது இல்வாழ்வின் சிறப்பு விளங்கு கின்றது.

சேரமான் கணைக்கா லிரும்பொறை யென்பவன் கோச்செங்கட் சோழனாற் சிறைவைக்கப்பட்டுத் தண் ணீர் கிடைத்த போதும் அருந்தாது மானமிக்கு உயிர் துறக்கும்போது பாடிய பாட்டு புறம். எச. அது யாவ ருள்ளத்தையும் உருக்கவல்லது.

அவனுக்குப் பின் தொண்டியிலாண்ட கோக்கோதை மார்பன் என்பவன் செங்கணாற் பிடிபட்டிருத்தல் கூடும். பொய்கையார் புறம். சஅ-ல், தொண்டியைச் சிறப்பித்து அது தம்மூர் என்று கூறுவது காண்க. புறம். சகூல்-ல், தொண்டி நகரத்தில், மருதமும் நெய்தலும்

மயக்குநயத்தை அழகாகக் கூறியுள்ளார். இவரே தமது அரசனைச் செங்கணானிடமிருந்து மீட்பதற்குக் களவழி பாடினாராவர். இவரும் பொய்கை யாழ்வாரும் வேறு வேறு என்பதை உயர்திரு சுவாமி வேதாசலமென்னும் மறைமலை யடிகள் தக்க ஏதுக்களாளால் நிறுவியுள்ளார். மூவன் என்பவனை வென்று அவன் பல்லைப் பிடுங்கிச் சேரன் தன்னுடைய தொண்டிநகரத்துக் கோட்டை வாயிற்கதவில் அழுத்திவைத்த செய்தியை நற்றிணை கஅ-ல் பொய்கையார் கூறியுள்ளார்.

## சோழர்நிலை

சோழஅரசர் குடும்பத்தில் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குப் பின், செங்கணான் காலம்வரை அரசாண்டார் இன்னரென்று விளங்கவில்லை. செங்கணானுக்கு முன்னும் இளந்திரையன் காலத்திற்குப் பின்னும் காஞ்சிபுரத்திற் பல்லவமன்னர் சிலர் ஏறக்குறைய ௩௱-முதல் ௩௫0 வரை அரசாண்டதாகத் தெரிகின்றது. கோச்செங்கட் சோழன் காலத்தே வடநாட்டரசர் வலிகுறைந்தது. செங்கணான் தன் காலத்துப் பாண்டியர் சேரர் பல்லவர் முதலியோரை வென்று தென்னாடு முழுவதும் தன் குடைக்கீழ் அடக்கி யாண்டமையால், சமுத்திரகுப்தனென்பவன் தென்னாட்டிற் றனது ஆட்சியைச் செலுத்த இயலாதவனானனென்று வரலாற் றாசிரியர்கள் கூறுகின்றார்கள். செங்கணான் காலம். கி. பி. ௩௫0-முதல் ௩அச-வரை யிருக்கலாமென்று வரலாற்றாசிரியர் கருதுவதாலும், அவன் காலத்துப் பாண்டியமரபு சிறப்பொடு திகழக் காணாமையானும், அவன் காலத்திற்கு முன்பே

வரகுணனும், மாணிக்கவாசகப் பெருமானை அமைச்சராகப்பெற்ற மன்னனும் அரசாண்டிருக்க வேண்டும். மாணிக்கவாசகப் பெருமானது திருவாசகத்துள் பல்லவ மன்னரைப் பற்றி யாதுங்காணப் படாமையின் செங்கணான் காலத்திற்கு முன்னேயே, பல்லவராட்சி தொடங்கு முன்னரே, மணிமொழியார் திகழ்ந்தனரென்று கொள்ள இடமுண்டு.

கடைச்சங்க காலத்துப் புலவருள் அக்காலத்து அரசரையுங் குறுநில மன்னரையும் பாடினதாக நமக்கு இப்போது தெரிகிற புலவர் வரலாறு இதுகாறுங் கூறப்பட்டது. அக்காலத்தில் வாழ்ந்து செய்யுட் செய்த பிற புலவர் வரலாற்றை எட்டுத்தொகை நூல்களின் அச்சுப் படிகளிற் பாடினோர் வரலாற்றிற்காண்க. அவருள் ஒருவரை ஈண்டு விதந்தோதி முடிக்கின்றோம்.

## கனியன் பூங்குன்றனார்

கனியன் பூங்குன்றனாரென்பவர் சோதிடம் வல்லவர். புறம் ௧௯௨-ல் உயிர்களின் பெருமை சிறுமை ஊழ் வலியாலுள்ளன வாதலால்,

> "பெரியோரை வியத்தலு மிலமே
> சிறியோரை யிகழ்த லதனினுமிலமே"

என்றனர்.

இப்புலவர் பெருந்துறவி யென்பது,

> "யாது மூரே யாவருங் கேளிர்
> தீது நன்றும் பிறர்தர வாரா
> நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
> சாதலும் புதுவ தன்றே வாழ்த

வினிதெனு மகிழ்ந்தன்று மிலமே முனிவி
னின்று தென்றலு மிலமே ”

என்றமையால் விளங்கும். நற்றிணையிலும் இவர்பாடல் உண்டு.

---

## அதிகாரம். எ.

---

## கடைச்சங்கநூல்கள்.

கடைச்சங்கத்தார் காலத்தில், பன்னூற்றுக்கணக் கான புலவர்கள் பாடற்றிறன் வாய்ந்தவர்களாய் விளங் கினரென்பது **எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, முத் தொள்ளாயிரம், சிலப்பதிகாரம், மணிமேகலை, பதி னெண்கீழ்க் கணக்கு** என்பவற்றைப் பாடிய ஆசிரியர் கூட்டத்தின் வைத்துணரப்படும். கடைச்சங்கப் பிற் காலப் பகுதியில் தமிழ் நாட்டு மூவரசரும் சிறப்புற் றிருந்ததாகவும், குறுநில மன்னராகிய வேளிர் பலர் வள்ளல்களாகத் திகழ்ந்தனரெனவும், மூவேந்தரும் ஒருவரோடொருவர் பொருது ஒவ்வொரு காலத்தில் ஒவ் வொருவர் வெற்றி யடைந்ததாகவுங் குறுநில மன்னரிற் பலர் தமக்குட்போர் விளைத்தது மன்றி மூவேந்தர்க்குத் துணை நின்றதாகவும் அறிகின்றோம். போரில் வெற்றி கொண்டவர்கள் பகையரசரைத் துன்புறுத்தியதாகவும், அவர்கள் நிலத்தைப் பாழ் செய்ததாகவுங் கேட்கப்படு கின்றது. **பாணர், விறலியர், கூத்தர், புலவர், இரவலர்** என்போர் அரசனிடத்துப் பரிசில்பெற்று வாழ்ந்தனர்.

பார்ப்பாருள் ஒரு பகுதியார் வேள்வியைத் தமிழ் நாட்டு முறையில் ஊன்பயிலாது சிவபெருமானைக்குறித்து

நடத்தியதாகவும் அரசனிடத்திற் றக்கபரிசு பெற்ற தாகவும் அறிகின்றோம். சிவபெருமான், முருகன், கொற்றவை யென்னுங் கடவுளர்க்குக் கோயில்கள் இருந்த தாக அறிகிறோம். சிவவழிபாடு சிறப்புற் றோங்கியதாக வுந் தெரிகிறது. வடநாட்டிற் பெரிதும் வழிபடப்பெற்ற பார்ப்பாரில் ஒரு பகுதியாரும், தென்னாட்டுப் பார்ப்பன ரும், வேளாளருள் ஒரு பகுதியாரும், வணிகருட் சில ரும் ஊனொழித் துணவுகொண்டு வாழ்ந்ததாகவும், பெருந் துறவியர் உயர்ந்த கொள்கைகளை மக்களுக்கு அறிவுறுத் தினரெனவும், சோதிடம், மருத்துவம், சிற்பம், மந்திரம் முதலிய பல கலைகளும் வளர்ந்தோங்கின வெனவும், கைத்தொழில், உழவு, வணிகம் முதலியன தழைத் தோங்கினவெனவும், யவனர் முதலிய மேலைத் தேயத் தாரோடு போக்குவரவுங் கடற்போர் முதலியனவும் நிகழ்ந்தனவெனவும், வடநாட்டு ஆரியர், மோரியர் முதலியோரும், தமிழ்நாட்டுக்கருகே வடக்கேயுள்ள வடுகர் என்போரும், தமிழர்க்குப் பகைவராய் வந்தகாலை அவரைப் பொருது தமிழரசர் வென்றனரெனவும், இமயவரம்பன், கரிகாலன், செங்குட்டுவன் முதலியோர் இமயம்வரை படையெடுத்துச் சென்று தங்கள்மாட்சியை நிலை நிறுத்தினார்களெனவும் அறியக்கிடக் கின்றது.

## எட்டுத்தொகை நற்றிணை.

அக்காலத்தைப்பற்றிய மற்றைச்செய்திகள் சங்க நூல்களுள் ஒவ்வொன்றினையு மாராயுமிடத்து நன்கறி யற்பாலன. எட்டுத் தொகையிலடங்கிய நூல்களைத் தனித்தனி ஆராய்வாம். புறநானூற்றுச் செய்யுள் களையே

யிருதியும் இதுவரை புலவர்வரலாற்றின் பொருட்டு எடுத்து விதந்தாம். எட்டுத்தொகையுண் முதல் நின்றது நற்றிணை. இதனுள் கூ-அடிமுதல் கஉ- அடிவரையுள்ள பாட்கள் ௪00 தொகுக்கப்பட்டுள்ளன. இவை பல புலவர்களால் இயற்றப்பட்ட அகப்பொருட்டுறைகளை விளக்குஞ் செய்யுட்களாகும். இவற்றைத் தொகுப்பித்த அரசன் பன்னாடு தந்த மாறன் வழுதியென்ப. உக்கிரப் பெருவழுதியின் பாடலொன்றும் (நற். கூ அ) மாறன் வழுதியென்பவர் பாடிய பாட்டுக்களிரண்டும் (கூஎ-௯௱௧) இதனுட் காணப்படுகின்றன. நற்றிணைப்பாடல் பாடிய மாறன்வழுதி அதனைத் தொகுப்பித்த வழுதிதானோ வேறோவென்பது விளங்கவில்லை. கஎ௫-புலவர்கள் பாடிய பாடல்கள் நற்றிணையிலுள்ளன. இவற்றுட் பல புலவரது காலம் மூவேந்தர் காலத்தை யொட்டியுங் குறுநில மன்னர் காலத்தை யொட்டியும் ஆராயப்பட்டன.

நற்றிணையிற் பண்டை வழக்கங்கள் பல புலனாகின்றன. காதலி சுவரிலே கோடிட்டுப் பிரிந்த தலைமகன் வருநாள் எண்ணுவதும், (நற். ௲உச) காலாற் பந்து விளையாடும் வழக்கமும், காதலர்வரவைப் பல்லி கூறுவதாகக் கருதுவதும் (நற். ௲௲௲), தினைப்புனத்திற் கிளியோட்டும் வழக்கமுநீ (நற். உ௱௯), இரும்பு காய்ச்சிய உலையிலே கொல்லன் பனைமடலிலுள்ள நீர் தெளித்து நெருப்பை அணைப்பதும் (நற், கஉ௲), எருமை மேய்ப்போன் அதன் முதுகி லேறிச்செல்வதும் (நற். அ0) பிறவுங்கூறப்பட்டமை காண்க.

இயற்கை வனப்புப் பல விடங்களில் மிக நயமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. மலைப்பாம்பு யானையைச்

சுற்றி நெருக்குவதும் (நற். உகூக), இளவேனிற் காலத்தில் ஆற்றினில் தண்ணீர் குறைந்து ஒடுங்கிச்செல்வது பாம்பு ஓடும்போது அதன் முதுகு நெளிவது போன்றிருப்பதும் (நற். கஅஎ), பேயின்கைவிரல் முள்முருக்கின் உலர்ந்த துணரைப் போன்றிருப்பதும், மந்தி கடுவனோடு விளையாடுவதும் (நற். ௲௲ச), பெண்யானை தன் கன்றைப் புலியினின்று பாதுகாத்தலும் (நற். அரு) பிறவும் வந்தமை காண்க.

உணர்ச்சிக்கு இன்பந்தரும் எண்வகைச் சுவைகளும் பல பாட்டுக்களிற் றதும்பி நிற்கின்றன. நற்றிணை உச௲-ல் காமக்கண்ணிப் பசலையாரென்னும் பெண்புலவர், தலைவர் தலைவியரைப் பொருளேதுவாகப்பிரிந்தேகுதல் கூடாதென்று குயில் இளவேனிற் காலத்தில் கூவுவதாகப் பாடியதும், (நற். சஉ-ல்) தலைவன் மீண்டகாலை தலைவி முற்றுப்பெறாத கோலத்துடன் எதிர்கொண்டு அழைத்தனள் என்றதும், தலைமகனது உருவெளித்தோற்றம் தலை மகனுக்குப் புலப்பட்டதென்றதும் (நற்-௲ருஉ), நற். ௲௲உ-ல் தலைவனோடு கூடியவழியுந் தலைவிக்கு வளைகழல்வதற்கு ஏது இயம்பியதும், நற்-கூக-ல் தலைவிதூங்காமைக்கு ஏதுநயம்பட உரைத்ததும், நற். கூ௱-ற் செப்பிய கிள்ளைவிடு தூதும், நற். உ௲கூ-ற் றலைமகனது பசலை தலைமகனது மலைக்காற்று வீசின் மாறுமென்று காதற்சிறப்புக் கூறியதும், நற்றிணை ௲கூ-ல் தலைவிக்கு உடம்பு இளைத்து வளைகழலாதபடி அவள் தந்தை சிறுவளையணிந்தனனென்று தலைவி நகைச்சுவைபயப்ப மொழிந்ததும், நற். உஎஎ-ல் மடலேறுவதினும் வேட்கை

நோயால் இறந்துபோவது நன்றென்று குறிப்பித்த தும், நற். உ௬உ-ல் இரவு வரக்கருதிய தலைவனை அவன் வரும்வரை ஆற்றியிருத்தற்பொருட்டு மாலையை நல்க வெனக்கேட்டதும், நற்றிணை ௯௱-ல் தலைமகனை வாயில் மறுத்துத் தோழி பரத்தையர் பலர்கூடி அவனை இழுத்த தைத் தான் பார்த்ததாகக் கூறியதும், நற். அஅ-ல் வரை வின்மையால் தலைவி துயரங்கண்டு, தலைவர் குன்றங்கூட அழுகின்றது, தலைவர்மட்டும் இரங்குவாரிலரெனக் கூறிய தும், பிறவும் எண் சுவைகளையும் இனிது விளக்குதல் காண்க.

சில புலவர்களுக்கு அவர்கள் செய்யுளிற் கண்ட சிறந்த சொற்றொடர்கள் அவர்கள் பெயராகவாதல் அவர் கள் பெயருக்கு அடைமொழியாகவாதல் அமைந்துள் ளன. நற். உ௪உ-வது செய்யுளில் மானை, 'விழிக்கட் பேதை' யென்றமையால் அச்செய்யுளை இயற்றிய புலவர் விழிக்கட்பேதைப் பெருங் கண்ணனா ரென்றழைக்கப் பட்டார். நற். உஅ௪-ல், உள்ளமும் அறிவும் இருபுறம் தம்மை இழுப்பதால் இரண்டு யானைகளால் இருபக்கமும் இழுக்கப்பட்ட பழங்கயிறு இற்றாற் போலத் தமது உடம்பு வருந்தியழியு மென்று பாடிய புலவர்க்குத் தேய் புரி பழங்கயிற்றினா ரென்ற பெயர் கொடுக்கப்பட்டது.

புறாவினை வண்ணப் புறவு எனச் சிறப்பித்தமை யால், வண்ணப்புறக் கந்தரத்தனா ரென்ற பெயர் எழுவ தாயிற்று. இவ்வாறே குறுந்தொகை முதலிய வற்றினும் வந்தது காண்க.

நற்றிணை ௭௰-ற் குருகுவிடு தூதும், நற்றிணை ௱உ-ற் கிள்ளைவிடு தூதும், ௫௪-ல் நாரைவிடு தூதும் வந்தமை

ாண்க. அஉ-ல் முருகவேளும் வள்ளியும் வழுத்தப் ட்டனர்.

அகநானூறு.

அகநானூறென்பது அகத்திணை யொழுக்கத்தைப் ற்றிக் கூறும் சா-பாடல்களின் தொகுதி. இவைகளைப் ாடிய புலவர்கள் கசரு-பேராவர். அவருட் சில புலவர் ள் பெயர் காணப்படவில்லை. இதிலுள்ள பாட்டுக்கள் திின்மூன்று அடிக்குக் குறையாமல் ௩க-அடிவரை யுள் ளவாய்க் காணப்படுதலின், இவற்றினுங் குறைந்த அடி டைய ஐங்குறுநூறு, குறுந்தொகை என்பவற்றின் வேறாக நெடுந்தொகை யென்று இது வழங்கப் படுகின் து. இப்பாடல்கள் மூன்று பகுதியாகப் பகுக்கப்பட் ள்ளன. முதல் கஉ௦-பாட்டும் 'களிற்றியானை நிரை' யெனப்படும். கஉக-முதல் ௩ா-வரை யுள்ளவை 'மணி டை பவளம்' எனப்படும். எஞ்சியபகுதி 'நித்திலக் கோவை' யெனப்படும். அவை வெவ்வேறு திணைக்குரிய ாடல்கள் குறித்த சில எண்களின் முறைப்படி தொகுக் ப் பெற்றுள்ளன.

"ஒன்று மூன்று ஐந்து ஏழொன்பான் பாலை"

யென்றபடி ஒற்றையெண் பெற்ற செய்யுட்கள் பாலைத் திணையைக் குறிப்பன. உ, அ-என்னும் எண்களை முடி ாக உடைய இலக்கங்களை யுடையவை குறிஞ்சித் திணை யைக் குறிப்பன. மருதத்திணை யெல்லாம் சு-என்ற எண் பெற்ற செய்யுட்கள். நெய்தற் றிணையெல்லாம் க௦-என் னும் எண்பெற்ற செய்யுட்கள். இக்கருத்தை அகநா னூற்று முகவுரை யுடையார் நன்குவிளக்கி, எடுத்துக் ாட்டாகக் குறிஞ்சிச் செய்யுட்கள் உ-வது, கஉ-வது,

உஉ-வது, ௩உ-வது என்னு முறைமைக் கண்ணும், அ, கஅ, உஅ, ௩அ-என்னு மித்தொடக்கத்து முறைமைக் கண்ணும் அமைந்துள்ளன வென்று காட்டினர். இவ்வரிசை யமைப்பு மிகவும் வியக்கத்தக்கது. இந்நூலைத் தொகுத்தவர் மதுரை உப்பூரிகுடிகிழார் மகன் உருத்திரசன்மன் என்பர். இவரே களவியல் உரையைக் கணித்தவரு மென்ப. தொகுப்பித்த பாண்டியன் உக்கிரப் பெருவழுதி.

இந்நூலுட் போந்த வரலாற்றுக் குறிப்புகளும், உவமை நயங்களும், பண்டைவழக்கங்களும், இயற்கை வருணனையும், எண்சுவைப் பொருளும் விரிப்பிற் பெருகுமென்று விடுத்தாம். வரலாற்றுக் குறிப்புகள் முன்னேயே சுட்டப்பட்டன. கறையான் புற்றினைத் தோண்டியெடுக்குங் கரடியை இரும்புசெய் கொல்லனுக்கும், பன்றி மயிரைப் பனையின் செறும்பிற்கும், கோழியின் தூவியை முருக்கின் பூங்கொத்திற்கும், கார்மேகங்களைப் பிடிகட்கும், கள்ளின் காரத்தைப் பாம்பின் கடுப்பிற்கும், கற்சுரத்தில் விழுந்த நெல்லியின் பசுங்காயைப் பொற்காசிற்கும், கொன்றைப்பூங் கொத்தினைப் பொன்னணிகட்கும், கோங்கு மலரைப் பொன் தகட்டிற்கும், குரவம்பூவை வெள்ளித் துண்டிற்கும், வானவில்லைக் கிளியின் கழுத்துவரிக்கும், பாம்பின் படவிரிப்பினைக் கோடல் மலருவதற்கும் உவமை கூறப்பட்டன.

அகம். கசО-ல், வெண்கல் உப்பிற்கு விலையாக நெல்வாங்குவதும். கக௬-ல் தலைவன் பரத்தையோடு காவிரியில் நீர் விளையாடுவதும், ௩உக-ல் வேள்வி செய்வார் குண்டத்தின்கீழ் ஆமை வைத்து மூடுவதும்,

கஎ-ல் நடுகல் வழிபாடும், ருக-ல் கணவர் வரவைக் கரு திச் சுவரிற் கோடிட்டு நாள் எண்ணுவதும், மலைத்தெய் வத்திற்குக் குறவர்கள் கள்ளினைப் படைப்பதும், உாஎ-ல் உமணர் கழுதைமேல் உப்புக்கொண்டு போவதும், புள் நிமித்தம் பார்ப்பதும், முருகனை வழிபடுவதும், ருஙரு-ல் தலைவன் விரைவில் மீள்வதை வேண்டி வீட்டிலுள்ள தெய்வங்களைத் தலைவி வணங்குவதும் பிறவும் பண்டை வழக்கங்களாகக் காணப்படும். அகம். அகூ-ல் பண்டை மணவழக்கங்களிற் சில குறிக்கப்பட்டன.. அதில் குளிர ந்த பந்தலிட்டுத் தூயமணல் பரப்பி மனைவிளக்கு வைத்து மாலை நாற்றிக் குற்றமற்ற நற்பொழுதில் பெண்டிர் குழ வையிட, மக்கட்பேறுடைய நற்பெண்டிர் நால்வர் ஈரிதழ் அலரியிட்ட குடநீராட்டி, மணப் பெண்ணினைக் 'கற்பி னிற் றவறாது கணவனுக்கு உகந்தன உதவும் வாழ்க்கைத் துணை ஆகுக' வென்று வாழ்த்துக் கூறுதலும், தலைவி யினது உறவினர் தலைவியைப் 'பேரியற் கிழத்தியா' கெனக்கூறித் தலைவருக்குக் கொடுத்தலும், பாயசப் (உழுத்தங்களி) முதலியவற்றோடு கூடிய பெருஞ்சோற் றினை வந்தவர்க்கு வரையாதளித்தலும் கூறப்பட்டன. வளர்பிறைப் பக்கத்தில் மணச்செய்தி அக்காலத்தில் நிகழ்ந்ததாகத் தெரிகின்றது.

அகம். உசகல் காட்டு நெல்லிக்காயைக் கழற்கா யாகக் கொண்டு செம்முகமந்தி விளையாடுவதும், கசுo-ல் பெண் ஆமையீன்ற முட்டையை ஆண் ஆமை பாதுகாத் தலும், களசு-ல் கானலை யானை மழையென வெண்ணி வாய்திறந்து ஏமாறிப்போவதும், உகூஉ-ல் மழையின்

" இம்மையாற் செய்ததை இம்மையே யாம்போலும்
உம்மையே யாமென்பா ரோரார்காண் "

என்றது காண்க.

ஆசிரியர் மணத்திற்குப் பொருள் வாங்குதல் நன்றன் றென்று பிறிதோரிடத்திற் கூறியுள்ளார்.

## ஐந்திணையைம்பது

ஐந்திணையைம்பது என்னும் நூல் மாறன் பொறையனு ரென்பவராற் செய்யப்பட்டது. மாறனென்ற சொல் பாண்டிய மரபையும், பொறையனென்ற சொல் சேரமரபையுங் காட்டுகின்றது. இந்நூன் முதற்பாட்டில் திருமால், சிவபிரான், முருகன் என்னும் மூவர்க்கும் வணக்கங் கூறப்பட்டது. இந்நூலுள் களிறு பிடியைக் குளிப்பாட்டுதல், கலை பிணையை நீருண்பித்தல், மகளிருக்கு மாந்தளிர் மேனியும், கருங்கூந்தலும் வனப்புத் தருதல், பிரிவாற்றாமையால் வளைகழலுதல், யானை புலிக்கு வெருவுதல், முத்தினை விளக்காகக் கருதுதல் முதலிய கருத்துக்களும், 'கொற் சேரியில் ஊசி விற்றல்' முதலிய பழமொழிகளும் வந்துள்ளன.

## ஐந்திணையெழுபது

ஐந்திணையெழுப தென்பது மூவாதியாரென்பாராற் பாடப்பெற்றது. பிரிந்தார்க்கு மாலை கொல்வது போலுமென்னுந் திருக்குறட் கருத்து இந்நூலுள் வருதல் காண்க.

" புல்லுந ரில்லார் நடுங்கச் சிறுமாலை
கொல்லுநர் போல வரும் "

## முதுமொழிக்காஞ்சி

முதுமொழிக்காஞ்சி யென்பது ஐங்குறுநூறு தொகுத்த கூடலூர் கிழாராற் பாடப்பெற்றது. இவர் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர விரும்பொறையின் சாவுக்காக வருந்தினவர். எல்லா மக்கட்குங் கல்வியைப் பார்க்கிலும் ஒழுக்கம் சிறந்ததென்பதை இவர்,

"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"

என்னும் அடிகளில் தெரிவித்தார். இது,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

என்னுந் திருக்குறளாலுந் தெளியப்படும். இந்நூல் குறட்டாழிசையா லியற்றப்பெற்ற பப்பத்துச் செய்யுளையுடைய பத்துப் பகுதிகளை யுடையது. பத்துச் செய்யுளையுடைய பகுதியைப் பத்து என்று வழங்குதல் இந்நூலுள்ளுந் திருவாசகத்துள்ளுங் காணப்படுகின்றது. இதனாலுந் திருவாசகத்தின் பழமை விளங்கும். இந்நூலிலுள்ள சில அரிய கருத்துக்கள் வருமாறு: "வண்மையிற் சிறந்தன்று வாய்மையுடைமை" என்றமையால், கொடையைப் பார்க்கிலும் மெய்ம்மையையே இப்புலவர் பெரிதாகப் போற்றுகின்றார் இங்கே,

"யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற"

என்ற குறள் ஆயத்தக்கது. பெரிய குடும்பத்திற் பிறந்தவர்களுக்கு இரக்கமே அடையாளமென்பார்,

"பேரிற் பிறந்தமை ஈரத்தினறிப"

என்றனர். பிறருடைய வழக்கத்தை நமக்குப் புதிதா யிருத்தல் பற்றி நாம் பழிக்கக்கூடாது என்பதை 'அறியாத் தேசத் தாசாரம் பழியார்' என்னும் அடிகளால் அவர் தெரித்தனர்; ஈகை அறவழியிலேயே இருத்தல் வேண்டுமென்பதையும், மூப்புடையவர்கள் மறு பிறப்பைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதையும், 'அறத்தாற்றின் ஈயாமை ஈகையன்று' 'மறுபிறப்பறியா மூப்பன்று' என்று கூறி விளக்கினர். அவர் அறிவுடையவனுக்கே வாழ்வுஞ் சாவும் வெவ் வேறுமென்றும், அறிவில்லாதவர்க்கு வாழ்வுஞ் சாவும் ஒன்றேயாமென்றுங் குறிப்பானுணர்த்துவார், 'உணர் விலனுதலிற் சாக்காடில்லை' யென்றார்.

## இன்னிலை

இன்னிலை யென்னும் நூலானது பொய்கையார் பாடியதென்ப. அஃது அறம்பொருளின்பம் வீடாகிய நான்கினையுங் கூறுவது. அறத்துப்பாலிற் பொது அறமே கூறப்பட்டது. இந்நூலாற் பொய்கையார் சிவ வழிபாட்டினரென்று தெரிகின்றது. அதன் மூப்பதாவது செய்யுளுள் அவர்,

"ஆக்கி யளித்தழிக்குங் கந்தழியின் பேருருவே"

யென்றது காண்க. திருவள்ளுவ நாயனார் சார்பு என்றதைப் பொய்கையார் சார்பொருளென்றனர்.

காஞ்சியிற் பல்லவமன்னர் சுமார் கி. பி. ௩00 முதல் எ௫0 வரை அரசாண்டனர். பல்லவருட் சிலர்

திருமால் வழிபாட்டினராக இருந்தனரென்று தெரி கின்றது. கி. பி. ௩௪0-ல் காஞ்சியிலாண்ட பல்லவ மன்னன் பெயர் விட்டுணு கோபன் என்பது. பல்லவர்க்கு முன் மாணிக்கவாசகர் காலத்தில் சைவசமயத் தின் ஒளி சிறந்து விளங்கினமையால், ஆரியப் பிராமணர் புத்தர் முதலிய பலரும் சைவநெறியைக் கைக் கொண்டொழுகினர். பல்லவர் ஆட்சித் தொடக்கத் தில் திருமால் வழிபாடுஞ் சிறிது தலையெடுத்தது. அக் காலத்திலேயோ அதற்கு முன்னேயோ ஆசாரக் கோவை, திரிகடுகம், நான்மணிக்கடிகை யென்னும் நூல்கள் இயற்றப்பட்டு இருத்தல் வேண்டும். கருநாடக வேந்தர் ஐந்தாம் நூற்றாண்டிலே மதுரையிற் பாண்டியரை வென்று தமது ஆணைகளை நிலைநாட்டிய பின்பே சமணசங்கம் ஏற்பட்டுச் சமண சமயம் தென்னாட்டிலே தழைத்தோங்கலாயிற்று. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுட் சமணர் செய்தவை வச்சிர நந்தி யென்னுஞ் சமண முனிவர் ஏறக்குறைய கி. பி. நானூற்றெழுபதில் மதுரையில் நிலைநாட்டிய தமிழ்ச் சங்கத்திருந்த புலவரால் இயற்றப்பட்டிருத்தல் கூடும். ஆறுவது நூற்றாண்டில் மூர்த்தி நாயனார் காலத்தோடு கருநாடக வேந்தரது ஆட்சியொழிந்து சைவமன்னர் காலம் தொடங்கிற்று. சமண சங்கத்தாராலே பதினெண்கீழ்க் கணக்குத் தொகுக்கப்பட்டிருக்கலாம்.

## ஆசாரக்கோவை

மாணிக்கவாசகர் காலத்திற்குப் பின் ஆசாரக் கோவை யென்னும் நூலியற்றப்பட்டது. இந்நூல் பெருவாயின் முள்ளியாரென்னும் புலவரா லியற்றப் பட்டது. இருடிகளது விதிகளைத் தாம் அறிந்த

அளவிற் கூறுவதாக மொழிவதால், இவர் ஆரியக்கருத்துக்களை உரைப்பவ ரென்பாருமுளர். இந்நூலுட் பல கருத்துக்கள் பண்டைத் தமிழரது கருத்துக்களாகவே தோன்றுகின்றன. இந்நூலாசிரியர் சைவ ரென்பது கடவுள் வணக்கத்தால் விளங்குகின்றது. அவர் இந்நூல் முதற்செய்யுளிற் சிறந்த எட்டுக்குணங்களை எடுத்துக்கூறி அவற்றுள் நன்றியறிவினை முதற்கண் வைத்தனர். நீராடல், உண்டல், வழிபடுதல், துயிலுதல் முதலியவற்றைப் பற்றிய விதிகள் இந்நூலிலே சிறப்பாகக் காணப்படுகின்றன. தம்பொருட்டு ஊன் கொள்ளாமை, வேதமோதல், நான்மறையாளரைக் குரவரைப்போற் போற்றுதல், அறியாத தேசத்தாரை ஆசாரமிலாதாரெனக் கணித்தல் முதலியன ஆரியக் கலப்பால் ஏற்பட்ட கருத்துக்களாகும்.

## நான்மணிக்கடிகை

நான்மணிக்கடிகை யென்பது விளம்பி நாகனா ரென்னும் புலவரால் இயற்றப்பெற்றது. நான்குமணி போன்ற உண்மைகளை யடக்கிய பாட்டுக்களை உறுப்பாக உடைய அணிபோல்வ திந்நூலென்று அதன் நூற்பெயர் விளக்குகின்றது. நல்ல மக்கள் எக்குடியிலும் பிறத்தல் கூடுமென்பதை இந்நூலின் ௯-வது செய்யுள் அறிவுறுத்துகின்றது. கல்வியின் பயன் வீடென்று இவர் கூறுஞ் செய்யுளிலும் இவரது சமயம் இன்னதென்று கூற இடமுண்டு.

“ கற்பக் கழிமட மஃகு மடமஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணருங் கோளுணர்ந்தாற்
றத்துவமான நெறிபடரு-மந்நெறி யிப்பாலுலகத்
திசைநிறீஇ-யுப்பா-லுயர்ந்த வுலகம் புகும் ”

" கள்ளி வயிற்றி னகிற்பிறக்கு மான்வயிற்றி
லொள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுட்
பல்விலைய முத்தம் பிறக்கு மறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி"

இந்நூலாசிரியர் உயிர்க்கொலையையும் நன்கு கடிந்துள்ளார்; 'எல்லாவிடத்துங் கொலை தீது,' 'ஊனுண்டல் செய்யாமை செல்சார் உயிருக்கு,' 'இனிதுண்பானென்பான் உயிர்கொல்லா துண்பான்' என்றதுங் காண்க. அந்தணரின் நல்ல பிறப்பில்லை யென்னும் ஆரியக்கொள்கை வாசனையுடைய இந்நூலாசிரியர் 'எருதுடையான் வேளாளன் ஏலாதான் பார்ப்பான்' என்றதுங் காண்க. இந்நூலில் வடமொழி வாசனையுண்டென்பது பசுக்கூட்டத்தைக் குறிக்கும் 'காலேயம்' முதலிய சொற்கள் வழங்கப்படுதலால் அறியப்படுமென்ப.

## திரிகடுகம்

திரிகடுகம் என்னும் நூல் நல்லாதனார் என்னும் புலவரா லியற்றப்பட்டது. இவருந் திருமால் வழிபாட்டினரே. சுக்கு, மிளகு, திப்பிலி சேர்ந்த மருந்து போல மூன்று அருமையான உண்மைகளை இந்நூலின் ஒவ்வொரு பாட்டுந் தெரிக்கின்றது. கடன்படாது வாழ்தல், வருவாயுட் கால்வழங்கி அறஞ்செய்தல், உண்பொழுது நீராடியுண்டல் முதலிய பல ஒழுக்கங்கள் இந்நூலிற் கூறப்பட்டன. தீவேந்தன், கூடாவொழுக்கத்தான், பொய் புகல்வோன் என்போரால் மழை குறையுமென்று இந்நூலின் ஐம்பதாவது செய்யுளிற் குறிக்கப்பட்டது.

௪௨-வது செய்யுளிற் ' பழகினும் பார்ப்பாரைத் தீப் போல் ஒழுக' வேண்டுமென்றது காண்க. தவவேடங் கொண்ட சைவர்கள் சமய வாதத்தில் வெற்றியடை யும் நோக்கமுடையரா யிருந்தனரென்பது 'சொல் வென்றி வேண்டும் இலிங்கியும்' என்றதாற் புலப் படும். இந்நூலாசிரியர் காலத்தே வேள்வியானுங் கொலை கூடாதென்ற கொள்கை நன்கு நிலைபெற்ற தென்பது,

" ஊனுண் டுயிர்கட் கருளுடையே னென்பானும்
தானுடன் பாடின்றி வினையாக்கு மென்பானும்
காமுறு வேள்வியிற் கொல்வானு மிம்மூவர்
தாமறிவார் தாங்கண்ட வாறு "

என்றமையானறிக.

## ஏலாதி

ஏலாதியென்பதன் பெயர்க் காரணம்: ஏலம், இல வங்கம், சிறுநாவற்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு என் னும் ஆறு மருந்துச் சரக்குகளினாற் செய்த பொடி போல நன்மை பயத்தலின், இந்நூற்கு 'ஏலாதி' யென்ற பெயர் ஏற்பட்டது. ஏலாதியென்னும் நூலினை யியற்றியவர் மாக்காயனார் மகனார் கணிமேதாவியா ரென்பவர். திணைமாலை நூற்றைம்பது இயற்றியவர் இவரோ வேறோ தெரியவில்லை. ஏலாதியுள் வட மொழிப் பெயர்கள் மிகுதியும் வந்துள்ளன. 'ஔர தன்' 'க்ஷேத்ரசன்' 'கூடோத்து பன்னன்' 'கானீ னன்' 'பவுனற்பவன்' 'சகோடன்' 'கிருத்திரமன்' 'அவவித்தன்' 'உபகிருது' 'சௌத்திரன்' என்னும் பல்வகை மக்களைப்பற்றி இந்நூலாசிரியர் பேசுகின் றார். இந்நூலாசிரியருங் கொல்லாமையையே நன்கு

வற்புறுத்துகின்றார். இவர் கொலை புரியான், கொல்லான், புலால் மயங்கான் என்பவர்களைப் புகழ்ந்தனர். தண்ணீர்ப்பந்தல் முதலிய அறங்களும், மாதவர்க்குப் பொன், குதிரை, யானை, பசு, கன்னி, சோறு, உடை முதலியன வழங்குவதையும் இவ்வாசிரியர் விதந்தோதினர். புலவர் அன்புடையார் செயல்களாவன: சாவிற்சாதல், ஒண்பொருள் கொடுத்தல், இன்சொற்புணர்ப்பு, உவப்பின் உவத்தல், நோவின் நோதல் பிரிவிற்கவலல் என்றார். இவர் 'நான்மறை புரிந்து வாழுமேல்' என்றவிடத்து நான்மறை யென்றது அறம், பொருள், இன்பம், வீடென்னு நாற்பொருட்குச் சாதனமானவற்றை யென விளக்கினர். 'நற்கதிக்குத் துன்பநவைதீர்த்த' லென்று அடியால், இவர் சமணராயிருத்தல் வேண்டுமென்று கருத இடமுண்டு. இந்நூலின்கண் முத்தி யிலக்கணம் எதிர்மறையாகவே கூறப்பட்டிருத்தலால், இவருடைய சமயத்தைத் தெளிவாக அறியக்கூடவில்லை.

## சிறுபஞ்சமூலம்

சிறுபஞ்சமூலம் என்பது மாக்காயனார் மாணாக்கராகிய காரியாசான் என்பவரா லியற்றப்பட்டது. இவ்வாசிரியர் சமணரென்பது இதன் காப்புச் செய்யுளால் விளங்குகின்றது. புலாலுண்பானுடைய நாக்கு இறந்து போமென்று இவர் குறித்துள்ளார். 'கொன்றுண்பான் நாச்சாம்' என்றனர். அக்காலத்திலே நெய்தற்பூவிளவு குடுமிவைப்பது வழக்கமென்பது இந்நூல் முப்பதாவது செய்யுளில் 'நெய்தல் முகிழ்த்துணையாங் குடுமி' யென்பதால் விளங்கும். இந்நூல் எகூ-ம் பாட்டில்,

'பலி' என்பது 'கொடுக்குஞ்சோறு' என்னும் பொருளில் வந்துள்ளது. 'குழவி பலி கொடுப்பான்' என்ற சொற்றொடர்க்குப் பிள்ளைச்சோறு கொடுத்தலாகிய அறத்தைச் செய்வானென்பது பொருள். 'தோற் கன்று காட்டிக்கறவார்' என்றமையால் அக்காலத்திலும் அவ்வழக்கம் இருந்ததென்பது தெளிவு.

" தானத்தாற் போகம் தவத்தாற் சுகம்சுகமா
ஞானத்தால் வீடாகும் நாட்டு "

என்றமையால், ஞானத்தாலே தான் வீடு கிடைக்குமென்பது இவ்வாசிரியர் கருத்து என்பது புலனும்.

## பழமொழி

பழமொழி யென்பது முன்றுறை யரையனாரென்னுஞ் சமணப் புலவரியற்றிய நானூறு வெண்பாக்களையுடையது. ஒவ்வொரு பாட்டினிறுதியிலும் ஒவ்வொரு பழமொழி யமைக்கப்பட்டது. அக்காலத்துப் பழமொழிகளிற் சில இக்காலத்து வழக்கிலில்லை. இந்நூல், கல்வி, ஒழுக்கம், முயற்சி, ஊழ், நட்பு, சான்றோர், கீழ்மக்கள், அரசியல், இல்வாழ்க்கை, வீட்டுநெறி முதலிய பல அரும்பொருள்களைப்பற்றி வகுத்தோதுகின்றது. இந்நூலின் ௩௪௩-வது செய்யுளில் உயிர்ப்பலி கூடாதென்பது வற்புறுத்தப்பட்டது. பண்டைப் பழமொழி நானூறும் என்றமையால், இந்நூலாசிரியர் காலத்திலேயே இந்நூலிற்கண்ட பழமொழிகள் பண்டையனவென்று கருதப்பட்டன. 'அயிலாலே போழ்ப அயில்' என்பது முள்ளை முள்ளாலே களையவேண்டுமென்பதற்கு நேராகும். 'நிறைகுடம் நீர்தளும்பலில்' 'கொற்சேரி துன்னூசி விற்ப

வரில் " 'மகனறிவு தந்தை யறிவு' 'மதிப்புறத்துப் பட்டமறு" என்பன பிறசொற்றொடர் வடிவொடு இன்றும் வழங்குகின்றன. நள்ளிரவிற் கற்புடை மங்கையைக் காத்தற்பொருட்டு அவள் வீட்டுக் கதவைத் தட்டினதற்காகத் தன் கையைக் குறைத்துக்கொண்ட பொற்கைப் பாண்டியனது கதையைக் கூறி அதற்கு மேற்கோளாகத் 'தனக்குக் கரியாவான் தான்" என்னும் பழமொழியை அவர் எடுத்துரைத்தார் (௭௯-ம் பாட்டு). ஒருவன் கடுமையான ஒன்றைச் சொன்னால் அவனுக்கு விடை சொல்லுகின்றவனுண்டு என்பதைக் கண்ணன் கதையை வைத்து அவர் விளக்கினார். புலவர்,

"நிரைப்புறங் காத்த நெடியோனே யாயினும்
உரைத்தா லுரைபெறுத லுண்டு"

என்றனர்.

## நாலடியார்

நாலடியார் என்னும் நூல் சமணமுனிவர்கள் பலராலியற்றப்பட்ட செய்யுட்டொகை நூலென்ப. பாண்டிய நாட்டிற் பஞ்சம் வந்தபோது அயல்நாட்டிற்குப் புலவர்கள் சென்ற காலை அவர்களுள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாட்டைச்செய்து வைத்துவிட்டுப் போனதாகவும், அப்பாட்டுக்கள் எண்ணாயிரம் இருந்தனவெனவும், அவற்றுள் வையையாற்றை எதிர்த்துச் சென்றது நானூறு எனவும் ஒரு வரலாறுண்டு. அவ்வரலாற்றினால் எண்ணித் துணிவது யாதெனில், வச்சிரநந்தியென்பான் நிலைநாட்டிய சங்கம் இறுதியுற்ற காலை அச்சங்கப் புலவர்கள் பாடிய தனிப்பாடல்களின் திரட்டாக இந்நூல் அமைந்திருக்கலா மென்பதே. பாடிய புலவர்கள் யாவரும் சமணரென்று தோன்ற

வில்லை. நாலடியார்ச் செய்யுட்களை இயற்படுத்து வகுத்தவர் பதுமனுரென்பவர். அவர் சமணராயிருந்திருத்தல்கூடும். இந்நூலுள் துறவறஇயலே முதற்கண் வைக்கப்பட்டது. இந்நூலில் ‘வெள்ளாண் மரபிற்கு வேதமெனச்சான்றோர் எல்லாருங்கூடி எடுத்துரைத்த’ என்ற ஒரு பாட்டுமிருக்கிறது. இந்நூலுள் ஒரு சமயமும் விதந்தோதப்படவில்லை. ௩௭௩-ம் பாட்டில் செங்கண் மாலையும், ௪0-ம் பாட்டில் கண்மூன்றுடையானையும்பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. திருவள்ளுவர் குறளின் சொற்களும் கருத்துக்களும் பலவிடங்களில் வந்துள்ளன. ௩௪௪-ம் பாட்டில்,

“ தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர் ”

என்ற அடிகள்,

“ தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்”

என்ற திருக்குறளை நினைப்பூட்டுகின்றன.

திருக்குறளில் வராத வடமொழிச் சொற்கள் பல இந்நூலில் வந்துள்ளன. ௩௯௯-வது செய்யுளில் ஞானம், அஞ்ஞானம் என்ற சொற்கள் வருதல் காண்க.

துறவற இயலுள் நிலையாமையே பெரிதும் விதந்தோதப் பட்டது. திருக்குறளிற் போல மெய்யுணர்தலைப் பற்றி இதில் யாதுங் கூறப்படவில்லை. சினமின்மையைக் கூறும் அதிகாரத்துள் பிறரது இழிபுரையைப் பொறுக்கும் மேன்மக்க ளியல்பு அழகிய

ஒரு பாட்டில் தக்கதோர் உவமையால் விளக்கப் பட்டது.

“ கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
பேர்த்துநாய் கௌவினா ரீங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்க டம்வாயான் மீட்டு ”

இல்லற இயலுள் நண்பர்பால் எத்தகைய பொறையுடைமை வேண்டுமென்பது ஒரு செய்யுளால் விளக்கப் பட்டது

“ வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயின்
ஆற்றுந் துணையும் பொறுக்கப் பொறானையின்
தூற்றாதே தூர விடல். ”

காமத்தீயின் கொடுமையை ஒரு பாட்டினுள் நயம் உற உரைத்தார் ஒரு புலவர்.

“ ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகும்—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும். ”

பழவினை யென்பதில் வினை தனக்குரிய ஒரு வனைத் தானே நாடிக்கொள்ளும் என்பதைப் பின் வருஞ் செய்யுளிற் காண்க.

“ பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. ”

பொருட் பாலிற் கல்வியழகை இனிது விளக்கிய செய்யுள் வருமாறு:—

" குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு, "

'கல்வி கரையில கற்பவர் நாள்சில' என்றும், 'கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகின் நல்லறிவு நாளுந் தலைப்படுவர்' என்றும், அறிவுநூல் கல்லாது உலகநூல் ஓதுவது தவறென்றுங் கூறிக் கல்வியின் சிறப்பை இந்நூல் நனிவிதந்தமை காண்க. கற்றவர் தம்முள் அளவளாவி யெய்தும் இன்பத்தினும் விண்ணுல கின்பம் சிறந்ததன் றென்பதை விளக்குவார், ஒரு புலவர்,

" தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையா
ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி "

என்றார்.

மேன்மக்க ளியல்பை இந்நூல்,

"கள்ளார்கள் ளுண்ணார் கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர் "

என்னும் பாட்டினும்,

" பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் மூகையாய் நிற்பானேல் யாது
மறங்கூற வேண்டா வவற்கு "

என்னும் பாட்டினும் விளக்குகின்றது.

இந்நூலுட் பொருட்பாலினுங் காமத்துப்பாலி னும் இன்ப துன்ப இயல்கள் வெவ்வேறாகக் கூறப் பட்டன. காமத்துப்பாலுள் பொதுமகளிர், கற்புடை மகளிர், பிரிவாற்றாமை என்னும் பகுதிக்குரிய மூன் றதிகாரங்களே உள்ளன. கற்புடை மகளிரது கட னாற்றுந் திறத்தை ஒரு செய்யுளாற் குறித்துள்ளார்.

"குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாறாக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்."

## கொங்குவேள் மாக்கதை

வச்சிரநந்தியால் ஐந்தாவது நூற்றாண்டில் நிலை நாட்டப்பட்ட தமிழ்ச் சங்கத்தினை மருவிய பெருங் காப்பியங்களுள் தலைசிறந்தது கொங்குவேள் மாக்கதை யாகும். கொங்குவேள் மாக்கதை கொங்கு நாட்டில் வாழ்ந்த வேளாண் தலைவருள் ஒருவரால் ஆசிரியப் பாவா லியற்றப்பட்ட ஒரு பெருங்காப்பியமாகும். ஆரியத்திற் பைசாசமொழியிற் குணாட்டியர் என்னும் புலவர் கி. பி. முதல் நூற்றாண்டில் கோசாம்பி நகரத் தில் அரசாண்ட உதயணன் என்னும் வீரனைப்பற்றி இயற்றிய பெருங்கதையைத் தழுவி இந்நூல் இயற்றப் பட்டமையால் இதற்குப் பெருங்கதை யென்ற பெயர் வழங்கலாயிற்று. குணாட்டியரது நூல் சைவசமயக் கொள்கைகளை இடையிடையே எடுத்துக் கூறினும், இந் நூலாசிரியர் சைனராயிருந்திருப்பின் தமது சமணக் கொள்கையையே தமது நூலிற் சிறப்பாக எடுத்து மொழிதல் இயல்பே. சிலப்பதிகாரத்துக்குப் பின்

ஏழாந்த பெருங்காப்பியம் இஃதென்று கொள்ளவேண்டும். கி. பி. ௬-வது நூற்றாண்டில் கங்கை நாட்டையாண்ட துர்விநீதன் என்பவன் வடமொழியில் மொழிபெயர்த்துச் செய்த நூலின் வழித்தாக இந்நூல் இயற்றப்பட்டதென்று கொள்ளின், ஆறாவது நூற்றாண்டின் இறுதியில் அல்லது ஏழாவது நூற்றாண்டில் இந்நூல் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும். இந்நூலாசிரியர் ஊர் விசயமங்கை யென்று தெரிகின்றது. இந்நூலை இயற்றுவதற்கு இடையூறாக மரணம் வராது தடுத்தற் பொருட்டு, இல்லறத்தில் நின்று வானப்பிரத்த நிலைக்கும், அதனினின்று துறவுக்கும் சென்ற காரணத்தால், இவரை மூன்று பிறப்புற்ற கொள்கை யுடையரென்று கொங்குமண்டல சதகம் கூறியது. இவர் காலத்தே இவர் நாட்டிலிருந்த ஒரு தமிழ்ச்சங்கத்தார் கேட்ட கேள்விக்குத் தம்முடைய வேலைக்காரி வாயிலாகத்தக்க விடையளித்தாரென்று அச்சதகம் கூறுகின்றது. இந்நூல் சைனச் சார்பிலுள்ளதென்பது தெளிவு.

இதனுட் பாண்டவர் குலத்தில் வந்த இருபதாவது அரசனைப்பற்றிய வரலாறு கூறப்படுகின்றது. கௌசாம்பி நகரத்தை அரசாண்ட சதாநிகன் மனைவி கருத்தரித்த பத்தாந்திங்களில் சிவந்த போர்வையால் தன்னை மூடிக்கொண்டு தூங்குகையில், ஒரு சிம்புட் பறவை அவளைத் தசைத்தொகுதியென்று நினைத்து, ஒரு மலையின் பக்கத்தே எடுத்துக் கொண்டுபோய் வைத்தவுடன் அவள் விழித்துக்கொண்டாள். பறவை ஓடிப்போயிற்று. விடியற்கால மானபோது அவள் உதயணனைப் பெற்றாள். அம்மலைச்சாரலில் தவஞ்

செய்திருந்த அவள் தந்தை, தாயையுங் குழந்தையையும் கண்டு அவர்களைப் பாதுகாத்தனன். குழந்தையாகிய உதயணன் மற்றொரு முனிவரின் குமாரனாகிய யூகி யென்பவனோடு மிகுந்த நட்புடையவனாய்ப் பல கலைகளுங் கற்று யாழ்இசையிலே வல்லவனானான். அவன் தனது யாழிசையால் வியத்தகு தன்மை வாய்ந்த ஒரு யானையைத் தன் வசப்படுத்தி அதனுதவியால் தன் மாமன், தந்தையென்னு மிருவ ரரசினையுங் கைப்பற்றி மிக மேம்பாடுற்றுத் திகழுங்காலை, யானையோடு செய்த உடன்படிக்கைக்கு மாறாக அதற்குமுன் தான் உண்டமையால் அது மறைந்துவிட்டது. அதைத் தேடியலைந்த காலத்தே, அவன் உச்சினி நகரத்தையாண்ட பெருமன்னனுக்கு இறை செலுத்தாமையால், அவனால் தந்திரமாகச் சிறை வைக்கப்பட்டான். பின்னர்த் தன் நண்பனாகிய யூகியின் சூழ்ச்சியால் சிறை விடுவிக்கப்பெற்று, உதயணன் உச்சினி மன்னனுடைய பட்டயானையின் மதத்தை யடக்கினமையால், அவன் மகள் வாசவதத்தையை மணந்தனன். அவளோடு இடைவிடாமல் இருந்தது கண்டு அரசகாரியங்கள் நடத்தற்பொருட்டு யூகி சூழ்ச்சிசெய்து உதயணனை அவளினின்று பிரித்தனன். பின்னர் அவன் பதுமாவதி யென்பவளை மணந்ததும், யூகியால் வாசவதத்தையினை மீளப்பெற்று இரு மனைவியரோடும் கௌசாம்பியில் அரசாண்டதும், யூகி முதலிய நண்பர் பலருக்கும் பரிசளித்ததும், பின்னர் இன்னும் சில பெண்டிரை உதயணன் மணந்ததும், வாசுவதத்தையின் மகனான நரவாணதத்தன் மதன மங்கை யென்பவளை மணந்ததும், மதன சஞ்சிகையைச்

கைக்கொண்டு சென்ற வித்தியாதரன் ஒருவனை யடக்குவதற்காக உதயணன் வித்தியாதர உலகஞ் சென்று அங்குள்ள அரசர்களைவென்று மதனமஞ்சிகையைப் பெற்று வித்தியாதரப் பெருமன்னனாய் வாழ்ந்ததும், பதுமாவதியின் மகனுக்கு அரசாட்சியை யளித்துவிட்டு உதயணன் தவஞ்செய்யப் போந்ததும் இக்கதையிற்போந்த பிற செய்திகளாகும். இந்நூலுள் ஊழின் வலியும், யூகி முதலிய அமைச்சர்களின் சூழ்ச்சித் திறனும், அரசாட்சி முறையும், நட்பினர் கடமையும், நீத்தார் பெருமையும், விமானம் ஊர்தல் முதலிய அக்காலத்து வழக்கங்களும், சமணசமயக் கொள்கையும், பிறவும் விளக்கமாக அறியக் கிடப்பன. இந்நூலின் கதைத்தலைவனது பிறப்பும், மணமுறையும் சீவகன் பிறப்புமண முதலியவற்றோடு ஒற்றுமையுடையன. சிந்தாமணிக்கு முன் ஆசிரியப்பாவி லமைந்த சைனப்பெருங்காப்பியம் இந்நூலாகும்.

ஐந்தாவது நூற்றாண்டிறுதியில் வடுகக்கருநட வேந்தரது அரசு முடிவெய்தி மூர்த்திநாயனாராகிய சைவமன்னர் அரசாளத் தொடங்கினர். வேள்விக்குடிப் பட்டயத்தினால் திருஞானசம்பந்தர் காலத்திலாண்ட நெடுமாறர் காலத்துக்குமுன் செழியன் சேந்தன், மாறவர்மன், கடுங்கோன் என்னும் மூன்று மன்னர்கள் அரசாண்டனரென்று தெரிகின்றது. அவர்கள் காலம் ஆறுவது நூற்றாண்டாகும். கி. பி. ஆறுவது நூற்றாண்டில் பல அரிய சைவநூல்கள் தோன்றின.

## கல்லாடம் சைவரேழுச்சி

கல்லாட மென்னும் நூலானது திருவாலவாய் அண்ணலைப்பற்றிய நூறு அகவற் பாக்களடங்கிய அகப்பொருளிலக்கியம். அதனுள் மதுரையில் நடந்த திருவிளையாடல்கள் பலவுங் கூறப்பட்டன. பிட்டுக்கு மண் சுமந்தது, நரிபரியாக்கியது என்னுந் திருவிளையாடல்களும் இதனுட் குறிக்கப்பட்டமையாலும், தேவார மூவரைப்பற்றி இதில் யாதுங் கூறப்படாமையாலும், கருநடவேந்தர் மூர்த்திநாயனார்க்குச் செய்த இடையூற்றினை விதந்தோதினமையாலும், இந்நூலுள் அகவற்பாவே பயின்று வந்தமையாலும் இந்நூலின் காலம் ஆறாவது நூற்றாண்டென்பது தெளிவாகும். பாணபத்திரர் வரலாறும் இதனுட் காணப்படுகின்றது. குடக்கோச்சேரன் என்று இந்நூலுட் குறிக்கப்பட்ட சேரன், சேரமான்பெருமாள் நாயனாரல்லனென்று உயர்திரு மறைமலையடிகள் தமது 'மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்' என்னும் நூலில் ஆராய்ந்து முடிவு கட்டியிருக்கின்றார்கள். இந்நூலானது சங்கச்செய்யுள் நடையிலெழுதப்பட்டுப் பொருள் வளஞ் செறிந்துள்ளது. இந்நூலாசிரியர் சிவபிரான்பாலும் முருகப்பிரானிடத்துங் கழிபேரன்புடையவர். இந்நூலியற்றியவர் பெயர் கல்லாடரெனின், கடைச்சங்கப் புலவராகிய கல்லாடரின் இவர் வேறுவர். கல்லாடத்தின் சிறப்பு 'கல்லாடம் படித்தவனோடு மல்லாடாதே' யென்னும் பழமொழியால் இனிது விளங்கும்.

## ஞானாமிர்தம்

ஞானாமிர்தமென்னுஞ் சைவசித்தாந்த நூலானது

ஆறாவது நூற்றாண்டிலேயே இயற்றப் பெற்றிருத்தல் கூடும். அதுவும் செவ்விய எழுபத்தைந்து பாக்களால் ஆயது. இதுவும் சங்கத்தமிழ் நடையிலேயே எழுதப்பட்டது. இது நிறைந்த நாயனார் சந்தானத்தில் வந்த வாகீச முனிவராற் செய்யப்பட்டது சிவஞான சுவாமிகளாற் பெரிதும் எடுத்தாளப்பட்டது. பதிபசு பாசங்களின் பொதுவியல்புகளைத் திறம்படவிளக்குவது. உவமைகளை அடுக்கிச் சொல்வதில் இவ்வாசிரியர் இணையற்றவர்.

## திருமந்திரம்

இந் நூற்றாண்டிலேயே திருமந்திரம் என்னும் அரிய நூல் இயற்றப்பட்டிருத்தல் கூடும். இந்நூலி லுள்ள செய்யுளடிகள் வெண்டளை பயின்று வருகின்றன. வெண்பாவிற்கும் விருத்தப் பாவிற்கும் இதன் யாப்பு நடுநிலையாக உள்ளது. இதற்குப் பின்னமைந்த பெருநூல்கள் விருத்தப் பாக்களினாலேயே பெரிதும் ஆக்கப்பட்டுள்ளன. திருமந்திரமென்னும் நூலானது திருவாவடுதுறையிற் கயிலை நின்றும் போந்த திருமூலரென்னுஞ் சித்தராலியற்றப்பட்டது என்று பெரிய புராணங் கூறுகின்றது. அவர் மூவாயிரமாண்டு தவங் கிடந்திருக்கலாம். இந்நூல் அத்தவ முடிவில் ஒரு காலத்திற் செய்யப்பட்டதாகவே தோன்றுகின்றது. இந்நூல் திருஞானசம்பந்தர் காலத்திற்கு முன்னேயே செய்யப்பட்டதென்று கருத ஓர் ஐதிகம் இடங்கொடுக்கின்றது. நம் சமயாசாரியர் துறைசைக்குச் சென்ற காலை, திருமூலர் திருமந்திரம் கொடிமரத்தின்கீழ் அடக்கஞ்செய்து வைக்கப்பட்டிருந்ததாகவும், கொடிமரத்திற்கருகே அவர் சென்ற காலை தமிழ் மணம்

வதாக அவர் இயம்பினரென்றும், அப்போது அஃது ஆண்டுக் கண்டெடுக்கப் பட்டதென்றும் துறைசைப் புராணங் கூறுகின்றதாம். திருமூலர் வரலாற்றிற் 'சேர்ந்திருந்தேன் சிவனாவடு தண்டுறை' என்பதால் அவர் துறைசையிலிருந்தமை தெளிவு. அவர் இருவகை ஆறு சமயங்களைக் குறிக்கப் பேசுகின்றார். அவர்,

“ ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்”

என்று ௫-ம் தந்திரம் புறச்சமய தூடணத்துட் கூறினார்.

இதில் புறச்சமயங்களாவ உலகாயதம், பௌத்தம், சாங்கியம், சமணம், என்பனவும், தார்க்கிகர் கோதமர், கணாதர், வாதராயணர், கபிலர், சைமினி, சமணர் என்பாரது மதங்களுமே குறிக்கப்பட்டுள்ளன.

“ கத்துங் கழுதைகள் போலுங் கலங்கள்
“ சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான் ”

என்றது காண்க.

ஆதலால் இவர் காலத்திலே புத்தர், சமணர் வாது செய்து தம்மதம் போதித்தனரென்பது கருதப்படும். 'தமிழ்ச் சாத்திரம் பொங்கி மிகாமை வைத்தா'னென்றதும், தேவார காலத்திற்கும் முற்பட்டது திருமந்திரமென் றறிவுறுத்துகின்றது. மணிவாசகமுடையாரும் புறச்சமயங்களை இகழ்ந்துரைத்தது உற்றுநோக்கத்தக்கது. திருமந்திரமுடையார் ௧௫௬0-ல் உலகாயதத்தையும் ௧௫௬௨-ல் புத்தசமணங்களையும்

௧௫௩௫-ல் புறச்சமயங்களாகிய தருக்கம், மீமாஞ்சை மதங்களையும் மறுத்தனர்.

திருமந்திரத்தில் முதற்பாட்டு 'ஒன்றவன் றானே' யென்று தொடங்குவதாகப் பெரிய புராணங் கூறுகின்றது. மூவாயிரத்துக்கு மேற்பட்ட பாட்டுக்கள் காணப்படுதலால், சில பாட்டுக்கள் பின் சேர்க்கப் பட்டனவென்று கொள்ள இடமுண்டு. இத்திருமந் திரத்துள் ஆகமங்கள் ஒன்பதாமென்றும், அவற்றின் கணின்று உஅ-ஆகமங்கள் வெளிப்பட்டனவென்றுங் குறித்தது காண்க. சிவபரம் பொருளது வழிபாடும், சிவசத்தியின் வழிபாடுமே நூலெங்குங் கூறப்பட்டுள் ளது. திருமூலர் நந்தியிடத்தில் அருள் பெற்ற எண் மருள் தாமுமொருவராகக் குறித்தனர். அவர் தமக் குச்சீடர் எழுவரென்றுங் கூறினர். சித்தரைப்பற்றிய விவரங்கள் இந்நூலுள் தெளிவாகக் காணப்படும். இந் நூல் ஒன்பது தந்திரமாகப் பகுக்கப்பட்டுள்ளது. பாயிரம் முதற்கண் உள்ள கூ௨-பாட்டை அடக்கி நின் றது. அதனுள் திருமூலர் வரலாறு கூறப்பட்டது.

முதற்றந்திரத்துள் உபதேசமென்ற பகுதியுள் இந் நூலின் சிறந்தபொருளாகிய ஞானோபதேசம் வலி யுறுத்தப்பட்டது; யாக்கை நிலையாமை, இளமை நிலைமை, செல்வநிலையாமை, உயிர் நிலையாமை, கொல் லாமை, புலான்மறுத்தல், பிறர் மனை நயவாமை, வான் சிறப்பு, அறத்தின் திறம், அன்புடைமை, கல்வி, கேள்வி, கல்லாமை, நடுவு நிலைமை, கள்ளுண்ணாமை, அக்கினிகாரிய முதலியன கூறப்பட்டன. இவை ஒழுங்

காகத் தொகுக்கப்படவில்லை. எச்சமயத்தார்க்கும் இன்றியமையாத பொது அறங்கள் இதனுட்போந்தன.

இரண்டாவது தந்திரத்துள் இறைவன் அன்பர்க் கருள் புரிந்தமை, அவனது ஐந்தொழில், மூவகைச் சிவவருக்கம் முதலியனவும், சமயப்பற்றிற்கு மாறான ஒழுக்கக் குறைவுகளுங் கூறப்பட்டன. இதனுட் போந்த பொறையுடைமை, பெரியாரைத் துணைக் கோடல் என்பன முதற்றந்திரத்துள் வைத்தற்குரியன.

மூன்றாந் தந்திரம் அட்டாங்க யோகத்தைப் பகர் கின்றது. அட்டமாசித்தி, சரீரசுத்தி, சோதிடப் பகுதிகள், பல்வகை யோகப்பயிற்சிகள் என்னுமிவற் றையும் இது கூறும். இவை காமியப்பயன் கருதுவார்க் குரியனவும், வீட்டுநெறி செல்வார்க்குச் சிறந்த கருவி யாவனவும் என இருவகைப்படும்.

நான்காந் தந்திரம் மந்திர நூற்கருத்துக்களை வெளியிடுவது. பலவகை மந்திரங்கள், சக்கரங்கள் முதலியன கூறுமிடத்துச் சிவசத்தி வழிபாடே விதந் தோதப்பெற்றது.

ஐந்தாந் தந்திரம் சுத்தசைவம், அசுத்த சைவ முதலிய சைவ சமய பேதங்களும், புறச்சமய பேதங் களும், சரியை கிரியை யோக ஞான மார்க்கங்களும், அவற்றின் பத முத்திகளும், சத்திநிபாத இயல்பும் இயம்புகின்றது. சைவ சித்தாந்தமென்ற சொல் இதனுட் காணப்படுகின்றது.

"கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோக
முற்பத ஞான முறைமுறை நாடியே
தெற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே"

என்றது காண்க.

ஆறாந் தந்திரத்துள் சத்திநிபாதமுற்ற உயிர்களுக்கு வேண்டுஞ் சிவகுருதெரிசனம், திருவடிப்பேறு, ஞானோபதேசம், துறவு, தவம், வேடம், நீறு, பக்குவ அபக்குவ இலக்கணம் கூறப்பட்டன.

ஏழாந் தந்திரம், இதில் ஆறுதாரம், சிவலிங்க பேதகங்கள், சிவபூசை, குருபூசை, மகேசுரபூசை, அடியார் பெருமை, போசன விதி, முத்தி பேதம், சமாதி, விந்துசயம், ஆதித்த நிலை, ஆன்மவிலக்கணம், இந்திரிய வடக்கம், சற்குரு, அசற்குரு முதலியன கூறப்படுகின்றன. இஃது ஐந்து ஆறாந் தந்திரங்கட்கு முன் வைத்தற்குரியது.

எட்டாந் தந்திரம் அவத்தை யிலக்கணத்தை விரிவாகக் கூறுவது. இதனுள் முக்குற்றமாகிய காம வெகுளி மயக்கத்தைக் கூறும்பகுதி திருக்குறளை நினைவுறுத்துகின்றது.

ஒன்பதாந் தந்திரம் ஞானிகட்குரிய சாதனமாகிய திருவைந்தெழுத்தின் பேதங்களையும், அவர்கட்கநுபவமாகிய திருக்கூத்திலக்கணத்தையுங் கூறுகின்றது. சித்திமார்க்கமும் முத்திமார்க்கமுஞ் சைவத்திற்குரிய முறைப்படி முழுதும் இந்நூல் கூறுகின்றது. சைவ சித்தாந்த சாத்திரம் பதினொன்கும் எழுவதற்கு முன்

நம் சமய முழுமுதல் நூலாக விளங்கியது திருமந் திரமே. இஃது ஒரே வகையான பாட்டினாலேயே பெரிதும் மமைந்துள்ளது. திருமூலர் தமது அநுபவச் சிறப்பை இதனுட் கூறுவதால், இது சிறந்த ஆகம மாகச் சைவரால் போற்றற்பாலது.

## அதிகாரம் (௰)

# தேவாரக் காலம்.

---

### அப்பரும் சம்பந்தரும்

காஞ்சியிற் பல்லவ மன்னர் நாலாவது நூற்றாண்டு முதல் எட்டாவது நூற்றாண்டுவரை அரசாண்டனர். முதல் மகேந்திரவர்மன் என்னும் பல்லவன் ஆறாவது நூற்றாண்டின் இறுதியில் ஆட்சி செய்தனன். அவ னுக்குக் குணபரன் என்னும் பெயரும் உண்டு. குண தரன் என்பதும், குணபரன் என்பதும் ஒன்று. குண தரனென்பான் அப்பர் சுவாமிகளிடம் சரண்புகுந்து சைவ சமயத்தைத் தழுவினனென்று பெரிய புரா ணத்தி லறிகின்றோம். ஆதலால் அவன் காலத்தில் அப்பர் சுவாமிகள் இருந்தன ரென்பது தெளிவு. அவர் நெடுநாள் சமணத்தலைவரா யிருந்தமையால், எ-வது நூற்றாண்டின் தொடக்கத்தில் அவர் திரு வருள் பெற்றிருக்கலாம். அவர் காலம் ஏறக்குறையக் கி. பி. ௫௫௦-முதல் ௬௫௦-வரை யென்று கருத இட முண்டு. பல்லவ மன்னர் சாளுக்கிய வேந்தரோடு

அடிக்கடி போர்புரிந்து வந்தனர். சாளுக்கிய வேந்தர் பம்பாய் மாகாணத்துக் கருகேயுள்ள பாதாமியென்னு மிடத்தில் அரசாண்டிருந்தனர். அவர்களோடு பல்லவ மன்னருக்குச் சேனைத்தலைவராய் உடன்சென்று பாதாமி யென்னும் நகரத்தை முற்றுகையிட்டு வெற்றி கொண்டவர் சிறுத்தொண்டநாயனா ராவர். சிறுத் தொண்டநாயனார் திருஞானசம்பந்தரை எதிர்கொண்டு போற்றினரென்பது பெரிய புராணத்தாலினிது விளங் கும். சிறுத்தொண்டரால் வெல்லப்பட்ட சாளுக்கிய வேந்தன் இரண்டாவது புலிகேசன் என்பான். அவன் அரசாண்ட காலம் ௬௦௯ முதல் ௬௪௨ வரை ஆகும். ஆதலாற் கி. பி. ௫௫௦ முதல் ௬௫௦ வரையுள்ள காலமே தேவார முதல்வராகிய அப்பர், சம்பந்தர் காலமென்று எளிதில் ஊகிக்கலாம்.

தேவார முதல்வராகிய ஆளுடைய பிள்ளையாரும், ஆளுடைய அரசும் சமணக் கொள்கையை மறுத்து உலகத்துக்கு இறைவன் ஒரு முழுமுதற் கடவுள் உண் டென்றும், அன்பு செலுத்தி அவனது திருவருளைப் பெறலாமென்றும் நிலைநாட்டினவராவர். ஆளுடைய பிள்ளையார் சீர்காழியிலே சிவநெறியொழுகும் அந் தண மரபிற்றோன்றி, மூன்றாவது ஆண்டிலேயே சிவ பெருமான் உமையம்மையோடு விடையின் மேலெழுந் தருளித் திருமுலைப்பால் ஊட்டப்பெற்றுத், தமிழ் நாடு எங்குமுள்ள சைவத்திருப்பதிக ளனைத்திற்கும் சென்று அருட்பாமாலை சாத்தி, எலும்பைப் பெண் ணாக்குதல் முதலிய பேரருட் செயல்கள் நிகழ்த்தித், திருமணநல்லூரில் மணந்த காதலியுடன் உடன்

பந்தார்க்கெல்லாம் திருக்கோயில் மாட்டுத் தோன்றிய அருட்பெருஞ்சோதி வீடுநல்கித், தாமும் இறைவனுடன் இரண்டறக் கலந்தனர்.

ஆளுடைய அரசு நடுநாட்டில் திருவாமூரிலே வேளாளர் குலத்துட்டோன்றி, அறநெறிநின்று சமண் சமயம் புக்கு அதன் தலைவராய்த் திகழ்ந்தகாலை, தமக்கு நேர்ந்த கொடிய சூலைநோயைத் தீர்ப்பான் வேண்டி தமது தமக்கையாராகிய திலகவதியாரை நாடிச் சைவத்திற்கு மீண்டு, திருவீரட்டானத்துள் இறையருள் பெற்றுச் சமணர் விளைத்த நீற்றறை யிடுகை முதலிய பேரிடர்களைத் திருவருளாற்றலினால் வென்று, ஆளுடைய பிள்ளையாருடன் பெருநட்புக் கொண்டிருந்து, விந்தைச் செயல்கள் பல இயற்றித் திருக்கயிலைக் காட்சியைத் திருவையாற்றிற் கண்டு களித்துத் திருப்புகலூரினிற் சிவபெருமான் திருவடி நீழலை யடைந்தனர்.

இரு பெரியாரும் அளவிறந்த தேவாரப்பதிகங்களைப் பாடியருளினார்கள். அப்பர் சுவாமிகள் ௪௯௲-பதிகங்களும், சம்பந்தமூர்த்தி ௧௬௲ பதிகங்களும் அருளிச் செய்தனரெனினும், இப்போதுள்ள அவர்கள் தேவாரப்பதிகங்கள் எண்ணூற்றுக்கு மேற்படவில்லை. விருத்தப் பாக்கள் பெரிதும் தேவாரத்திலேதான் முதற்கண் எடுத்தாளப் பட்டன. இசைத்தமிழும் இக்காலத்திலே பெரிதுந் தழைத்தோங்கிற்று. இன்றும் தேவாரப்பண், தாளம் என்பவைகளாலேயே இசைத்தமிழுணர்ச்சி நிலைபெற்று வருகின்றது. தாண்டகம் என்னுஞ் சிறந்த பாவினத்

தாலேயே அப்பர் சுவாமிகளது மூன்றுந்திருமுறை அமைக்கப்பட்டுள்ளது. இதனால் அவர்க்குத் தாண்டக வேந்தரென்ற திருப்பெயரெழுந்தது. திருஞானசம்பந்தப் பெருமானது தேவாரங்களுள் யமகம் திரிபு, ஏகபாதம் முதலிய சொல்லணிகள் நிரம்பியுள்ளன. இருவர் தேவாரங்களுள்ளும் கடவுளைத் தலைவனாகவும், உயிரைத் தலைவியாகவுங் கருதிப் பாடிய அகத்துறைகள் பல வந்துள்ளன. சேர சோழ பாண்டியர் பல்லவர் முதலியோரைப் பற்றிய குறிப்புகள் சிற்சில விடங்களில் வந்துள்ளன. திருஞானசம்பந்தருடைய திருப்பாடல்கள் இயற்கை வருணனை மிக்கனவாயும், செந்தமிழ்ப் பெருமிதநடையில் இணையற்றனவாயும் இலங்குகின்றன. அப்பர் சுவாமிகள் தேவாரம் தத்துவப்பொருளை இனிதாய செஞ்சொல்லால் விளக்கும் நயஞ்சிறந்தது. தேவாரம் முழுவதும் மும்மூர்த்திகளுக்கு அப்பாலான சிவபரம்பொருளையே பகர்வதாய்ச் சமண புத்தமதங்களைக் கண்டிப்பதாய் இராவணன் மனம் திரும்பி இறைவனருள் பெற்ற கதையையும், மாலயன் கடவுளரல்ல ரென்பதையும் எடுத்து மொழிந்து சைவசித்தாந்தத்தை நிலைநாட்டுகின்றது. தேவாரமென்ற சொல் கடவுளை அன்பினாற் பாடிய பாடலென்று பொருள்படும். (தே-கடவுள்; வாரம்-அன்பு.) இப்பெயர் பிற்காலத்து எழுந்ததாகும்.

## சுந்தரனார்

இவருடைய தேவார காலத்திலிருந்த வேறு புலவர்களைப்பற்றி ஒன்றுந் தெரியவில்லை. தேவார-

காலத்திலாண்ட பல்லவன் மயா, முதல் நரசிம்மவர்மன். அவன் ௬௨௫ முதல் ௬௪௫-வரை அரசாண்டனன். அவனுக்குப் பின் இரண்டாவது மகேந்திரவர்மனும், முதல் பரமேச்சுரவர்மனும் அரசாண்டனர். அதற்குப்பின் இரண்டாவது நரசிம்மவர்மனை காலத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் திகழ்ந்தனரென்பது, காடவர்கோன் கழற்சிங்கன் என்று திருத்தொண்டத் தொகையுள் வருவதால் அறியப்படும். இம்மன்னன் எட்டா நூற்றாண்டின் தொடக்கத்தில் அரசாண்டதாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றார்கள். சுந்தரமூர்த்திகள் பாடிய கீழ்க்கச்சிமேற்றளிப் பதிகத்தில் 'பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி' என்ற திருப்பாட்டு பல்லவமன்னர் பெருமை குறைந்ததைக் குறிப்பதால் குறுநிலமன்னர் அவரை எதிர்த்த காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சுந்தரமூர்த்திகள் தேவாரம் பாடியருளினரென்பாரு முளர். சிவபெருமான் தம்பாற் பேரன்புடைய கழற்சிங்கற்குத் துணைநின்று திறைகொடாதாரைத் திறைகொடுப்பித் திருப்பராதலால், இத்தில்லைப் பதிகத்திற்குறித்தமன்னர் கழற்சிங்கரேயாவர். சிங்கமென்பது நாசிங்கமென்னுஞ் சொல்லின் முதற்குறையாகும். நரசிங்கமுனையரையரென்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகளை அவரது இளமைக்காலத்தில் வாங்கி வளர்த்தனரென்று பெரிய புராணங் கூறுகின்றது. அவர் திருமுனைப்பாடி நாட்டையாண்ட சிற்றரசராயிருக்கலாம்.

திருநாவலூரில், நம்பியாரூரர் ஆதிசைவ குலத்திற்பிறந்து நரசிங்க முனையரையரால் வளர்க்கப்பட்டுத் திருவெண்ணெய் நல்லூரில் தமது மணம் நிகழவொட்டாதபடி தடுத்தாட் கொள்ளப்பட்டுத் திருவாரூரிலே பரவையாரையுந் திருவொற்றியூரிலே சங்கிலியாரையும் மணந்து வாழ்ந்திருந்து திருத்தொண்டத்தொகை பாடிச் சேரமான் பெருமாளோடு கயிலை சென்ற கதை பெரிய புராணத்துட் கூறப்பட்டது. சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரத்தில் திருஞான சம்பந்தரையும் திருநாவுக்கரசரையும் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. 'நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தன் நாவினுக்கரையன் நாளைப்போவான்' என்றது காண்க. திருக்கோலக்காவில் திருஞானசம்பந்தப் பெருமானுக்குப் பொற்றாளம் ஈந்ததை வியந்து சுந்தரர் ஒரு பதிகத்திற் பாடியுள்ளார்.

"நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடு
மங்க ணன்றனை யெண்கண மிறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலுள் ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே."

சுந்தரமூர்த்திகள் சிவபெருமானுக்குத் தோழராயிருந்தமையால், தம்பிரான் தோழரெனப் பெயர் பெற்றனர். இவர்,

"ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமாய்"

என்றது காண்க.

இன்னும் இவர் தேவாரத்துள் நகைச்சுவை மலிந்துள்ளமை குறித்தற் குரியது.

"மண்ணுலகும் விண்ணுலகு மும்மதே யாட்சி
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன்
எண்ணிலியுண் பெருவயிறன் கணபதியொன் றறியான்
எம்பெருமான் இதுதகவோ இயம்பியருள் செய்வீர்
திண்ணெனவென் னுடல்வருத்தந் தீர்ரே யாகில்
திருமேனி வருந்தவே வளைக்கின்றேன் நாளைக்
கண்ணறையன் கொடும்பாட னென்றுரைக்க வேண்டா
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே."

திருஞானசம்பந்தர் காலத்தில் அரசாண்ட பாண்டிய மன்னன் திருநெல்வேலிப் போரை வென்ற நின்ற சீர் நெடுமாறன் என்று சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகையுட் குறித்துள்ளார். அவனது பேரனாகிய பராங்குசனென்பவன் சங்கமங்கையிற் பல்லவனை வென்றவன். சங்கமங்கைப் போர் சுந்தரமூர்த்திகளுக்குப் பிற்காலம், எட்டாவது நூற்றாண்டினடிப்பகுதியில் அரசாண்ட இரண்டாவது நந்திவர்மன் காலத்திலாதல், அதற்குப் பின்னுதல் நடந்திருத்தல் வேண்டும். பராங்குசனுக்குப் பின் நெடுஞ்சடையன் என்னப்படும் பாண்டியன் கி. பி. எ௬௯-ற் பல்லவரைப் பெண்ணாடகத்தில் வென்றோட்டியதாகத் தெரிகிறது. அவனை வேள்விக்குடிப் பட்டயத்திற்குக்

தலைவன். பராங்குசனைப் பற்றிய ஒரு கோவையி லிருந்தே மிகுந்த செய்யுட்கள் இறையனாரகப்பொரு ளுரையிற் காணப்படுவதால் நக்கீரர் காலம் முதல் கர்ணபரம்பரை 'யாக வழங்கிவந்த அவ்வுரை 'பராங்குசன் காலத்திலாதல், அதற்குப் பின்னாதல் இப்பொழுதுள்ள வடிவை அடைந்திருக்க வேண்டும். ஆகவே எட்டாம் நூற்றாண்டின் நடுவிலேதான் இப் பொழுதுள்ள இறையனாரகப்பொருளுரை எழுத்துரு வெடுத்ததென்பது தெளியப்படும். இவ்வுரையானது கவிநயமிக்கதாய் இப்பொழுதுள்ள உரைநடை நூல்கட் கெல்லாம்தலையாயதாய்க் கற்பனைநயங்களும் ஆராய்ச்சி முறைகளும் ததும்பி யிருப்பதால், அது தமிழ் மாண வர் யாவராலும் பாராட்டத் தக்கது.

## புறப்பொருள் வெண்பாமாலை

இதற்குப்பின் ஐயனாரிதனா ரென்பவரால் இயற் றப்பட்ட புறப்பொருள் வெண்பாமாலை, பன்னிருபட லத்தின் வழிநூலாய் வெண்பா யாப்பில் இந்நூற் றாண்டி னிறுதியில் வெளிப்போந்த தென்னலாம். இந் நூலுள் பிள்ளையார், சிவபெருமான் முதலியவருடைய வணக்கம் காணப்பெறுவதால் இவர் சைவரென்பது தெரிகின்றது.

## நிகண்டுகள்

இந்நூற்றாண்டின் பிற்பாதியிலே திவாகரம் பிங்கலந்தை யென்ற நூல்கள் ஏற்பட்டிருக்க வேண்டும். திவாகரம், அம்பல் என்ற ஊரில் வாழ்ந்த திவாகரரா லியற்றப்பட்டுச் சேந்தன் என்னு மரசனை மேற்றுக்

கொள்ளப்பட்டது. இந்நூல் எழுதப்பட்ட காலத்துக்குமுன் அதாவது இந்நூற்றாண்டின் முற்பாதியிலே சாளுக்கிய வேந்தர்கள் தென்னாட்டிற் படையெடுத்துப் பல்லவனோடு போர்புரிந்தார்கள். சளுக்குவேந்தரென்பவர் வேள்புல அரசரென்று இந்நூலுள்ளும் **பிங்கலந்தையிலுங்** கூறப்பட்டது. மாமாத்திரர் என்பது மருத்துவர் வகையைச் சார்ந்தவரென்று இரு நூலிலுங் குறிக்கப்பட்டது. இந்நூலார் காலத்திலே நான்கு சாதிகளும் ஏற்பட்டு விட்டன. இருவரும் வேளாளரைச் 'சதுர்த்தர்' என்றனர். வேளாளருக்குப் பத்துவகைத் தொழில் இந்நூலுட் கூறப்பட்டது.

"ஆணைவழி நிற்றல் அழிந்தோரை நிறுத்தல்
கைக்கட னாற்றல் கசிவகத் துண்மை
ஒக்கல் போற்றல் ஓவா முயற்சி
மன்னிறை தருதல் ஒற்றுமை கோடல்
விருந்துபுறந் தருதல் திருந்திய ஒழுக்கம்"

'ஒருமை' யென்பதற்கு 'இறையுணர்வு' என்று பொருள் சொல்லப்பட்டது.

'பிங்கலந்தை' யென்பது திவாகர முதல்வரின் புதல்வராகிய பிங்கல முனிவரா லியற்றப்பட்டது. இருநூலும் நூற்பாவிலேயே இயற்றப்பட்டன. இந் நூலிற் சிவாகம நூற்பயன் அறம் பொருள் இன்பம் வீடு என்றும், சிவபூசை யென்பது சரியை கிரியை யோகம் ஞானமென்றும் எடுத்துரைக்கப்பட்டது. இருநூலுஞ் சைவப் புலவர்களாலேயே இயற்றப்பட்டனவென்று தெரிகின்றது. உரிச்சொல் நிகண்டென்பது இதற்குப் பின் இயற்றப்பட்ட நூலாகும்.

## எட்டாம் நூற்றாண்டு முதல் பதின் மூன்றாவது வரை

தேவார காலம் அ-ம் நூற்றாண்டின் முற்பகுதியோடு முடிந்தது. அ-ம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் ௧௦-ம் நூற்றாண்டின் தொடக்கம்வரை வைணவ ஆழ்வார்கள் தங்கள் சமயத்தை நிலைநாட்டினர். இக் காலத்திலேதான் சங்கராசாரியரும் சுமார்த்த சமயத்தைப் பெரிதும் பரவச்செய்தனர். இந்நூற்றாண்டிற் புத்தமுஞ் சமணமும் சிறுபான்மையே நிலவின. அப்பொழுதுதான் வளையாபதி, குண்டலகேசி முதலிய சிறு காப்பியங்கள் இயற்றப்பட்டன போலும். பத்தாம் நூற்றாண்டிலே சமணரது இலக்கியக்கிளர்ச்சி மைசூரரசரால் ஆதரிக்கப்பட்டுச் சிறந்தது. அக் காலத்தே சமண காவியங்கள் சிறப்புற்றன. அடுத்த மூன்று நூற்றாண்டுகளிலே பல இலக்கண நூல்களும் உரைநடை நூல்களும் இயற்றப்பட்டன. பவணந்தி முனிவர் இலக்கணமே சமணரது இயக்கத்தின் முடிவைக் குறிப்பதென்னலாம். பத்தாவது நூற்றாண்டிலே சோழமன்னர் தலையெடுத்துச் சைவத்தை வளர்த்த காலத்தில் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு இயற்றப்பட்டன. சிவாகமமுதலியவற்றுள்ளும் சாதியொழுக்கம் ஒருவாறு தழுவப்பட்டது. சாதிமுறைகள் இலக்கணத்திலும் புகுவவாயின. யாப்பணி நூல்கள் வடமொழிப் போக்கைத் தழுவித் தமிழிலியற்றப்பட்டன. பதினோராவது பன்னிரண்டாவது நூற்றாண்டுகளிலே பெருங்காப்பியங்கள் எழுந்தன. பன்னிரண்டாவது நூற்றாண்டும் பதின்மூன்றாவது

நூற்றாண்டும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் காலமாகும்.

## அதிகாரம் ௰௧

# ஆழ்வார் காலம்.

தேவார காலத்திற்குப் பின் வைணவத் திருநெறித் தலைவர்களாகிய ஆழ்வார்கள் காலம் ஆயப்படுதற்குரியது. ஆழ்வார்கள் பன்னிருவர்.

"வையம்புகழ் பொய்கை,பேய், பூதன், மாறன், மதுரகவி
யையன் மழிசைமன், கோழியர் கோ,னருட் பாண்பெருமாள்,
மெய்யன்பர் காற்பாடி, விண்டு சித்தன், வியன்கோதை, [வெற்றி
செய்யங்கை வேற்கலியன் றமிழ்வேதம் நிலைசிறக்கவே"

ஆழ்வார் வரிசையைப் பல ஆசிரியர்கள் பலவாறு தொகுத்துரைத்தனர். இதனைத் தமிழ் வரலாறுடையார் எடுத்துக்காட்டினர். பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய இம்மூவரும் ஒரு காலத்தவர். இம்மூவரும் முறையே நாலாயிரப் பிரபந்தத்துள் முதல் திருவந்தாதி, இரண்டாந் திருவந்தாதி, மூன்றாந்திருவந்தாதி பாடினவர். பொய்கையார் திருக்காஞ்சியிலும், பேயாழ்வார் திருமயிலையிலும், பூதத்தாழ்வார் மாவலிபுரம் என்னுந்திருக்கடன் மல்லையிலும் பிறந்தவர்கள். பொய்கையார் திருக்கோவலூர்க்குச் சென்று திருமாலை வழிபட்டபின் ஓரன்பர் வீட்டின் இடைக்கழியில் துயிலக் கருதியிருக்கும்

போது பேயாழ்வாரும் அங்கே சென்று இடம்வேண்ட அதற்கிணங்கிய பொய்கையார் அவருடன் ஆண்டிருந்த காலை பூதத்தாழ்வாரும் அவண் போந்து இடம் வேண்டினர். ஒருவர் படுக்கவும் இருவர் இருக்கவும் மூவர் நிற்கவும் இடமிருந்தது. அப்போது இருட்காலமாயிருந்தது. இம்மூவர்க்கும் இடையில் யாரோ ஒருவர் மூவரையும் நெருக்குவதாகத் தெரிந்தமையான், அவர் யாரென்று மூவரும் ஆராய்ந்து உணர்ந்த காலை, அவர் திருமாலென்று அறிந்தனர். உடனே மூவரும் பாடினர். பொய்கையார்,

" வையந் தகளியா வார்கடலே நெய்யா
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழி யானடிக்கே சூடினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று."

என்றும், பேயாழ்வார்,

" திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமுங் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கங் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பா லின்று"

என்றும், பூதத்தாழ்வார்,

" அன்பே தகழியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்"

என்றும் அருளினர்.

இவர்கள் பாடல்கள் மிகுதியும் வெண்பா யாப்பினாலேயே இயற்றப்பட் டிருக்கின்றன. இவர்களது

வெண்பாச் சொன்னடையை நோக்குமிடத்துப் புறப்பொருள் வெண்பாமாலை இயற்றப்பெற்ற காலத்திலேயே இவர்கள் பாடல்கள் எழுந்தனவென்று கொள்ள இடமுண்டு. ஆகவே இவர்கள் காலம் எட்டாம் நூற்றாண்டாக விருத்தல்வேண்டும்.

திருமழிசை யாழ்வார் திருமழிசையிற் பிறந்தவர். இவர் கொடிய வைணவரென்பது இவர் உருத்திரனை வென்றாரென்ற கதையால் அறியப்படும். இவர் காஞ்சியிற் பல்லவன் தம்மை இகழ்ந்ததற்காக ஆழ்வாரையும் அழைத்துக்கொண்டு அவ்வூரைவிட்டுப் போயினாரென்று ஒரு வரலாறு கேட்கப்படுகின்றது. அப்பொழுது அவர் பாடிய பாட்டு,

"கணிகண்ணன் போமென்றான் காமரு பூங் கச்சி
மணிவண்ணா நீயிங் கிராதே—துணிவுடனே
செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்பது.

இவ்வாழ்வார் தம்மைச் சூத்திர ரென்றிகழ்ந்த வேதியரைவென்று திருக்குடந்தையில் யோகத்திலமர்ந்து திருநாட்டுக்கு எழுந்தருளினர். இவர் நாலாயிரப் பிரபந்தத்துள் திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி யென்பவற்றைப் பாடினர். பல்லவர்கள் சுந்தர மூர்த்திகள் காலத்திலும் அதற்குப் பின்னும் சிவநெறி ஒழுகினவராதலால், இவ்வாழ்வார்க்கும் அவர்கட்கும் கருத்து வேறுபாடு நிகழ்ந்திருக்கலாம். இவ்வாழ்வார் அ-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தோராவர்.

நம்மாழ்வார் ஆழ்வாரிற் றலையானவரென்பது வைணவ சமயத்தவர் கருத்து. இவர் திருநெல்வேலிச் சில்லா ஆழ்வார் திருநகரியில் வேளாண்குலத்துட் பிறந்து தாய்ப்பாலுண்ணாது வளர்ந்தனரென்ப. அவர் அவ்வூர்ப் பெருமாள் கோயிலின் வடபுறத் திருந்த புளியமரமொன்றனடியில் குழந்தைப் பருவத்திலேயே யோகிருந்து திருமால் திருவருள் பெற்றனரென்ப. நம்மாழ்வார் காலத்தைப்பற்றி ஆராய்ச்சிக்காரர்கள் பலவாறு கூறுகின்றனர்.

அவர் தமது திருவாய்மொழி யொன்றில் 'புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிலிருந்து' என்பதால், வரகுணன் பெயராலேற்பட்ட திருப்பதியை நம்மாழ்வார் பாடினராவார். கி. பி. ௭௭0-ல் ஆண்ட மாறன் நெடுஞ்சடையன் காலத்திற்குப் பின்பே பிற்காலத்து முதலாவது வரகுணன் அரசாண்டவனாவான். நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் மிகுதியும் பயின்றுள்ள வடமொழிப் பகுதிகளினாலும், சொன்னடையினாலும் அவர் நூலை ௮-வது நூற்றாண்டுக்கு முற்பட்டதென்று கூற முடியவில்லை. மாறன் நெடுஞ்சடையன் காலத்திற்குப் பின் உண்டான சீவரமங்கை யென்னும் தலத்தையும் நம்மாழ்வார் பாடியிருத்தலால், அவர் ௮-ம் நூற்றாண்டி னிறுதியிலாதல் ஒன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்திலாதல் வாழ்ந்திருக்க வேண்டும். இவர் தம்முடைய நூல் முழுவதையும் அந்தாதித் தொடையாற் பாடவேண்டுமென்று கருதியே பாடியதாகத் தெரிகின்றது. இவர் திருமாலைச்

சிறப்பாக வழிபட்டாலும், மும்மூர்த்திகளையும் பல விடங்களிற் பொதுமையாக வழிபட்டுள்ளார்.

நம்மாழ்வார் திருப்பாடல்கள் திருவாய்மொழி யெனப்படும். ஏனையோர் செய்தவை திருமொழி யெனப்படும். திருவாசிரியம், திருவாய்மொழி, திரு விருத்தம், பெரிய திருவந்தாதி என்பன இவர் பாடல்கள்.

" அவாவறச்சூள் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் "

என்றது காண்க.

தேவாரச் சொற்றொடர்கள் சிலவற்றையும், திருவாசகப் பிரபந்த முறையினையும் இவர் எடுத்தாண்டுள்ளார்.

மதுரகவி யாழ்வா ரேன்பவர், பாண்டிய நாட்டிலே திருக்கோளூர் என்னு மிடத்திற் பிறந்து, அயோத்திக்குச் சென்று, நம்மாழ்வார் புகழ் கேட்டு மீண்டு திருக்குருகூர்க்கு வந்து, அவர் திருவடிகளை வணங்கி அவர் திருப்பாடல்க ளனைத்தையுந் தாமே யெழுதிக் 'கண்ணிநுண் சிறுதாம்பு' என்னும் பதிகம் அருளிச் செய்து, நம்மாழ்வார் திருநாட்டுக் கெழுந்தருளியபின் ஐம்பதாண்டு அவர் திருவடிவத்தை வைத்து வணங்கி வைணவத்தை நிலை நிறுத்தினவராவர். இவர் வைணவ அந்தணர்.

திருமங்கை யாழ்வார் திருவாலி நகரத்தில் நீலி யென்னும் படைத் தலைவனுக்கு மகனாய்த் தோன்றிப் பல சிற்றரசரைச் சில தோழர்களின் உதவியைக்

கொண்டு வென்றாரென்ப. அவர்கள் பெயர் நகைச் சுவை விளைவிப்பன. அவை தாளூதுவான், நீர் மேல் நடப்பான், நிழலின் மறைவான், தோலாவழக் கன், சாயை பிடிப்பான் என்பன. இவர் குமுதவல்லி யென்னும் ஒரு வைணவப் பெண்ணினை மணத்தற் பொருட்டுத் திருநறையூர் நம்பி யென்னும் ஆசிரிய னிடத்துத் திருவிலச்சினை பெற்றுத் திருமால் திரு வருளுக்குரியரானார். இவர் பல அற்புதங்களியற்றினா ரென்ப. இவர்க்கு நாலுகவிப் பெருமாள் என்றும் பெயருண்டு. இவர் ஆழ்வார் திருநகரியில் அத்திய யனத் திருவிழா நிகழ்வித்தனர். திருக்குறுங்குடியில் இவர் திருநாட்டுக்கெழுந்தருளினர். இவர் இயற்றிய நூல்கள் சிறிய திருமடல், பெரிய திருமடல், திருக் குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, பெரிய திருமொழியென்பன. இவ் வாறினையும் நம்மாழ்வாரியற்றிய நான்கு திருப்பாடற் றொகையாகிய நான் மறைக்கும் ஆறங்கமாக வைண வர்கள் கருதுவார்கள்.

திருமங்கையாழ்வார் வயிரமேகன் என்னும் அர சனைப் பற்றித் தமது பாடலிற் கூறியுள்ளார். இவன் இரண்டாவது நந்தி வர்மனுக்குப் பின்னிருந்த தந்தி வர்மனாவன். நந்திபுர விண்ணகரப் பதிகத்தில், 'நந்தி பணி செய்த' என்று இவர் புகழ்ந்த அரசன் இரண் டாவது நந்திவர்மனாவன். அவன் காலம் அ-வது நூற்றாண்டின் பிற்பகுதியில் முடிகின்றது. தந்தி வர்ம னென்பான் கூ-நூற்றாண்டிலே அரசாண்டானென்று தெரிவதால், திருமங்கை யாழ்வாரும் அக்காலத்

தவரே யாவரென்று கருத இடமுண்டு. ஆகவே இவர் ௯-வது நூற்றாண்டிலே நம்மாழ்வார் காலத்துக்குப் பின் திகழ்ந்தவர்.

தொண்டரடிப்பொடி யாழ்வார் திருமண்டங்குடி யென்னுமிடத்திற் பிறந்து திருவரங்கம் பெரிய கோயி லில் திருமாலைப் பணியியற்றிப் பெருமாளால் ஆட் கொள்ளப்பட்டவர். திருப்பள்ளியெழுச்சி, திருமாலை யென்பன இவரால் இயற்றப்பட்டன.

திருப்பாணாழ்வார் என்பவர் உறையூரிற் பிறந்து பஞ்சமரால் வளர்க்கப்பட்டமையின், திருவரங்கம் பெரிய கோயிலுட் செல்ல இயலாமல், காவிரிக்கரையி லிருந்து இன்னிசையுடன் பெருமாளைப் பாடினர். பெருமாள் கட்டளையின்படி கோயிலருச்சகர் ஆழ் வாரைத் தோளின்மேல் ஏற்றிச்சென்று பெருமாள் திருமுன் இறக்கிச் சென்றனர். ஆழ்வார் பெரு மாளைக் கண்ணாரக்கண்டு களித்து 'அமலனாதிபிரான்' என்னுந் திருப்பாசுரம் அருளிச் செய்தனர். தொண் டரடிப்பொடி யாழ்வார், திருப்பாணாழ்வார் என்னும் இவ்விருவரும் திருமங்கை மன்னன் காலத்தவர்.

பெரியாழ்வார் என்பவர் பாண்டி நாட்டு வில்லிபுத் தூரிற் பிறந்தவர். இவர் காலத்தில் மதுரையில் ஆட்சி செய்த மன்னன் வல்லபதேவன் என்பவன். இவன் ௯-ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் அரசாண்டனன். அவன்பாற் சென்று இவர் வைணவத்தை நிலைநாட்டிப் பொற்கிழி பெற்றவர் என்பர். இவரியற்றிய பாடல் கள் பெரியாழ்வார் திருமொழி, திருப்பல்லாண்டு என்

பன. இவர் தமது பாடல்களில் 'அபிமானதுங்கன்' என்னும் ஓரரசனைப்பற்றியுங் கூறுகின்றார். அவன் யாரென்று தெரியவில்லை. பெரியாழ்வாருடைய மகளையே சூடிக்கொடுத்த நாச்சியாரென்றும், ஆண்டாள் என்றும் கூறுவார்கள்.

ஆண்டாள் பெருமாளுக்குப் பெரியாழ்வார் தொடுக்கும் திருமாலையாகிய கோதையை அவர் மகள் ஆண்டாள் சூடி யெடுத்து வைத்திருந்ததை யறிந்து வேறு மாலை தொடுத்துச் சாத்த முயன்ற காலை, பெருமாள் அவற்றை மறுத்துச் சூடிக்கொடுத்த மாலையே வேண்டுமென்றார். அவ்வாறே செய்து பெருமாள் கட்டளைப்படி சூடிக் கொடுத்த நாச்சியாரைப் பெருமாளுக்குத் திருமணம் செய்வித்தார். அவர் பாடிய பாடல் திருமொழி, திருப்பாவை முதலியன.

குலசேகர ஆழ்வார் திருவஞ்சைக் களத்திற் பிறந்த அரசர். இராமாயணப் பிரசங்கங் கேட்ட போது தம்மை மறந்த பேரன்பினாலே இராக்கதரை வெல்லப் பெருமாளுக்குத்தான் 'துணைசெய்வன்' என்றெழுந்தார். இராக்கதரை வென்று பிராட்டியைப் பெருமாள் தழுவினாரென்று கூறியவுடன் ஆழ்வார் அமைதியுற்றார். இவர் சில அற்புதங்கள் இயற்றினாரென்ப. இவர் தம் மகனுக்குப் பட்டமளித்து விட்டுச் சீரங்கம் காஞ்சி முதலிய திருப்பதிகளை வணங்கி வீரநாராயண புரத்திலுள்ள மன்னனார் கோயிலென்னு மிடத்தில் திருநாட்டுக் கெழுந்தருளினர். இவர் செய்த வடமொழி நூல் முகுந்த மாலையென்பது.

குலசேகர ஆழ்வார் சேரமான் காலத்திற்குப் பிற்பட்டவர். சேரமான் காலம்வரை சேரமரபு சைவ மதத்தைத் தழுவிவந்ததாகத் தெரிகின்றது. இவ்வாழ்வார் தம்மைக் கூடற்கோமானென்றுங் கூறுவதால், இவர் காலத்திற் பாண்டியவரசு வலிகுன்றியிருத்தல் வேண்டும். சோழமன்னன் விசயாலயன் காலமாகிய ௯-ம் நூற்றாண்டின் இறுதிக்கு முன்னும் ௩-ம் நந்திவர்மனால் தெள்ளாற்றில் வெல்லப்பட்ட வரகுணனுக்குப் பின்னும் இவ்வாழ்வார் திகழ்ந்திருத்தல் வேண்டும். ௯-ம் நூற்றாண்டின் பிற்பகுதியே இவர் காலமென்னலாம். இவர் இராமபிரானிடம் அளவிறந்த பற்றுடையவர். இவர் பாடியது பெருமாள் திருமொழி.

இதுகாறுங் கூறியவாற்றால் ஆழ்வார்கள் காலம் எட்டாவது நூற்றாண்டும் ஒன்பதாவது நூற்றாண்டுமாமென்பது தெளியப்படும்.

## நந்திவர்ம பல்லவன்.

ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிற்றிகழ்ந்த நந்திவர்ம பல்லவனென்பான், தெள்ளாறு என்னுமிடத்தில் வரகுண பாண்டியன் முதலியோரை முறியடித்தானென்று தெரிகின்றது. இஃது ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நடந்திருக்கவேண்டும். இவன் காலத்தேதான் பெருந்தேவனாரென்பவர்

பாரத வெண்பாப் பாடினர். கடைச்சங்க காலத்தில் பாரதம் பாடிய பெருந்தேவனார் இவரின் வேருவர். இக் காலத்திலே நந்திக்கலம்பக மென்னுங் கலம்பகமும் நந்திவர்ம பல்லவன்மீது பாடப்பட்டது. நந்திக் கலம்பக மென்பது நந்திப் பல்லவனைக் கொல்வதற்காக அவனது தம்பியாகிய குலமகனுற் பாடப்பட்டதென்ப.

" நந்தி கலம்பகத்தான் மாண்டகதை நாடறியுஞ்
சுந்தரஞ்சேர் தென்குளத்தூர்ச் சோமேசா—சந்ததமும்
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை "

என்ருர் சிவஞான முனிவர்.

குலமகன் என்பான் நந்தித் தொண்டைமாேேடு பகைமை கொண்டவன்; நந்தித் தொண்டைமானது தந்தையின் காதற் கிழத்திப் புதல்வன். தன் தந்தையாலே முடிசூட்டப் பெற்ற நந்தியாற் பொருமைகொண்ட குலமகன் நந்தியின் கழிபெருந் தமிழ்ச் சுவையை யறிந்து கலம்பக மொன்று பாடி அதன் ஒரு பாட்டினை நந்தியினிடங் கூறியவளவில் அவன் கலம்பக முழுதுங் கூறும்படி வேண்டக் குலமகன் நீ பல்லக்கேறி இடுகாடடைந்து சிதையின் மீது இருந்து கேட்டல் வேண்டுமென்ன, அவன் அதற்கிணங்கி நூல்முழுவதையுங் கேட்டு இறந்தனனென்பது கதை.

"பொள்ளா நுழைவழிப் பொய்த்தலை நீட்டும் புலவன்முன் [சொல்
கள்ளாருஞ் செஞ்சொற் கலம்பக மேகொண்டு காயம்விட்ட
தெள்ளாறை நந்தி யெனுந்தொண்டை மான்கலி தீர்ப்பதற்கு
வள்வார் முரச மதிர்த்தாண்ட துந்தொண்டை மண்டலமே"

என்றது காண்க.

நந்திவர்மன் காலத்திற்குப்பின் பல்லவ மன்னர் வலிகுன்றி அவர்கள் அரசுஞ் சீர்கேடுற்றது. பல்லவ மன்னர்களுள் இறுதியாய் அரசாண்ட அபராசித னென்பான், ஆதித்திய சோழனால் சுமார் கி. பி. அஅ௫-ம் ஆண்டில் வென்றொழிக்கப் பட்டான்.

## அதிகாரம் ௧௨

# திருவிசைப்பாக் காலம்.

---

சைவத் திருமுறைகளை வகுத்த சோழ மன்னன் இராச இராசனென்பது பெரியபுராணத்தால் இனிது விளங்கும். இராச இராசன் என்ற பெயரையுடைய சோழமன்னர் பலர். திருவாரூரிலே தியாகராசரைப் பணிந்து அரசுசெலுத்திய இராச இராசன் கி. பி. ௯அ௫-முதல் ௧0௧௧-வரை அரசாண்டவன். இவனே திருமுறை வகுத்தவன். இவன் பேரனாகிய இராசஇரா சன் கங்கைகொண்டசோழபுரத்தில் அரசாண்டதாகத் தெரிவதால், அவன் திருமுறை வகுத்தவன் என்று கொள்ள இடமில்லை. ஆனால் திருவாரூரிலாண்ட இராச

இராசன் காலத்திற்குப் பின் கங்கை கொண்ட சோழ புரம் ஏற்பட்டிருப்பின், கங்கைகொண்ட சோழேச் சரத்தைப் பாடிய கருவூர்த் தேவரது திருவிசைப்பா, திருமுறை வகுத்தபின் சேர்க்கப்பட்டிருக்கவேண் டும். கருவூர்த் தேவரின் சில பதிகங்கள் திருமுறை வகுத்தகாலத்திற் சேர்க்கப்பட்டிருப்பின் எஞ்சியவற் றைப் பின்னர்ச் சேர்த்தல் இழுக்காகாதென்றுணர்க. தஞ்சை இராச இராசேச்சுர மென்னுந் திருப்பதி இராச இராசன் காலத்திலேயே ஏற்பட்டுவிட்டது. அதைப்பற்றிய கருவூர்த் தேவரது திருவிசைப்பா, திருமுறை வகுப்பிற்கு முன்னரே ஏற்பட்டிருத்தல் வேண்டும். இராச இராசமன்னன் காலத்திலே கரு வூர்த் தேவர் திகழ்ந்தன ரென்பது தெளிவு.

திருவிசைப்பா ஆசிரியர்களாவார்:—(1) திருமா ளிகைத் தேவர், (2) சேந்தனார், (3) கருவூர்த்தேவர், (4) பூந்துருத்திநம்பி காடவநம்பி, (5) கண்டராதித் தர், (6) வேணாட்டடிகள், (7) திருவாலி யமுதனார், (8) புருடோத்தம நம்பி, (9) சேதுராயன் என்பவர்.

## திருமாளிகைத் தேவர்

இவர் திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருந்த சைவர்; சிவபூசையில் தலைசிறந்தவர். இவர் போக முனிவரின் மாணக்கரென்ப. போகர் திருமூலர் மாணக்கராகிய காலாங்கி நாதருக்கு மாணக்கரென்ப. கருவூர்த் தேவரும் போகருக்கு மாணக்கர். ஆதலால் இருவரும் ஒரே காலத்தவ ரென்றும், சித்தர்கள் நெறியில் நின்றனரென்றுங் கொள்ள இடமுண்டு.

திருமாளிகைத்தேவர் இறைவன் வழிபாட்டையும், கருவூர்த்தேவர் இறைவி வழிபாட்டையுஞ் சிறப்பாகச் செய்தனரென்ப. திருமாளிகைத் தேவர் சேந்தனுருடன் சிதம்பரத்துக்குச் சென்று அங்குச் செல்லாதிருந்த தேரை வடமில்லாமல் ஓடச் செய்தனரென்று கேட்கப்படுகின்றது. சேந்தனாரையுந் திருமாளிகைத் தேவரையும் பற்றிய சாசனமொன்று திருவீழிமிழலையிற் கிடைத்திருப்பதாலும் இருவரும் ஒரு காலத்தவரே. திருமாளிகைத் தேவர் பாடிய திருவிசைப் பாப் பதிகங்கள் நான்குந் தில்லையிற் பாடப்பெற்றன. அவர் தமது மூன்று பதிகத்தின் ஒவ்வொரு செய்யுளிலும் மகேந்திர மலையைப் புகழ்ந்திருத்தல் காண்க. நான்காவது பதிகத்தில் அவர் காலத்திருந்த புறச் சமயிகளைக் கடிந்துரைத்தனர்.

"திசைக்குமிக் குலவுசீர்த்தித் தில்லைக்கூத் துகந்துதீய
நசிக்கவெண் ணீறதாடு நமர்களை நணுகாநாய்க
ளசிக்கவா ரியங்களோது மாதரைப் பேதவாதப்
பிசுக்கரைக் காணுகண்வாய் பேசாதப் பேய்களோடே"

"புறஞ்சமண் புத்தர் பொய்கள்கண் டாயைத்
தொண்டனேன் புணருமா புணரே"

என்றது காண்க.

திருமாளிகைத் தேவர்கோயில், திருவாவடுதுறை ஆதின மடத்துள் இருக்கின்றது.

## கருவூர்த் தேவர்

இவர் கொங்கு நாட்டுத் தலங்களுளொன்றாகிய கருவூரில் வாழ்ந்தவர். நெல்லைத் தல புராணத்திலும் கருவூராரைப்பற்றி விவரங் காணப்படுகின்றது. அதிற்

கருவூர்ச் சித்தரென்று அவர் அழைக்கப்படுகின்றார். இவர் பல விந்தைகளியற்றினதாகப் புராணங் கூறுகின்றது. இவர் தஞ்சை இராச இராசேச்சுரத்திற் சிவலிங்கப் பிரதிட்டையைச் செய்ய உதவினரென்ப. திரு. C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் "செந்தமிழ்ச் செல்வி"யில் (Vol. IV. & V.) இவரது வரலாற்றைத் தெளிவாக எழுதியுள்ளார்கள். கருவூர்த் தேவர் கோயில், திருக்களந்தை ஆதித்தேச்சரம், கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, திருவிடைமருதூர், தஞ்சை இராச இராசேச்சரம், கங்கைகொண்ட சோளேச்சரம் என்னுந் திருப்பதிகளுக்குத் திருவிசைப்பாத் திருப்பதிகங்கள் அருளிச் செய்தனர். சிவபெருமான் கருதுவார் கருதும் வடிவமாய் நின்றருள்வான் என்பதைப் பின்வரும் பாட்டுக் காட்டு

"சுருதிவா னவனுந் திருநெடு மாலுஞ்
சுந்தர விசும்பி னிந்திரனும்
பருதிவா னவனும் படர்சடை முக்கட்
பகவனு மகவுயிர்க் கமுதாம்
எருதுவா கனனு மெயில்கள்மூன் றெரித்த
வேறுசே வகனுமாம் பின்னுங்
கருதுவார் கருது முருவமாங் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே."

மகளிர் மாட்டு வைக்குங்காதலை இறைவன் மாட்டு வைக்கவென்பார், இவர்

"தத்தையங் கனையார் தங்கள்மேல் வைத்த
தயாவைநூ றாயிரங் கூறிட்
டத்திலங் கொருகூ றுன்கண்வைத் தவருக்
கமருல களிக்குநின் பெருமை
பித்தனென் றொருகாற் பேசுவ ரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யுங்
கைத்தல மடியேன் சென்னிமேல் வைத்தகங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே."

என்றார்.

இவர் சிவபெருமான் யோக வடிவங் கொண்ட காலையும் போகவடிவ முடையாரென்பார், 'மங்கை யோடிருந்தே யோகு செய்வானை" யென்றார். சிவ பெருமானைச் சைவனென்றழைக்கு மரபு இவர் திருப் பாட்டிலும் காணப்படும்.

"தனியனே னுள்ளங் கோயில்கொண் டருளுஞ்
சைவனே"

## சேந்தனார்

இவர் திருவீழிமிழலையில் இருந்தவர் போலும். பட்டினத்தடிகள் அமைச்சராய்க் காவிரிப்பூம் பட் டினத்திலிருந்து அடிகள் ஏவலால் அவர்கள் பொரு ளைப் பலர்க்குங் கொள்ளை கொடுத்தாற் போல் அவர் வழங்குவதைக் கண்ட அரசன் அவரைச் சிறையிலிடத் தமது ஆசிரிய ரருளால் சிறை நீங்கித் தில்லை சென்று விறகு விற்பதால் வரும் ஊதியத்தால் நாளும் ஒரு சிவனடியவரை உண்பித்துத் தாமும் மனைவி மக்க ளுடன் வாழ்ந்திருந்தனர். சிவபெருமானை நள்ளிரவில்

அவர் வீட்டுக்குச் சென்று கூழுணவு பெற்று அதன் மிகுதியைத் தமது திருமேனியிற் காட்டிச் சேந்தனார் பேரன்பை உலகவர்க் கறிவித்தனரென்ப. தில்லையிற் றேரோடும்படி இவர் திருப்பல்லாண்டு பாடினரென்பது கேட்கப் படுகின்றது. திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி யென்னு மிடங்கட்கு இவருடைய திருவிசைப்பாப் பதிகங்கள் உள்ளன. சம்பந்தர்க்கும் அப்பர்க்கும் படிக்காசருளியதை, இவர்

" பாடலங் காரப் பரிசில்கா சருளிப்
பழுத்தசெந் தமிழ்மலர் சூடி
நீடலங் காரத் தெம்பெரு மக்கள்
நெஞ்சினுள் நிறைந்துநின் றானே "

என்ற அடிகளிற் குறித்தமை காண்க.

திருவிடைக்கழித் திருவிசைப்பா முருகப் பெருமானைப் பற்றிப் பாடப்பெற்றது. அதன்கண் நற்றாயிரங்கல் என்னும் அகத்துறையிற் பல பாடல்கள் வந்துள்ளன.

" மாலுலா மனந்தந் தென்கையிற் சங்கம்
வவ்வினான் மலைமகள் மதலை
மேலுலாந் தேவர் குலமுழு தாளுங்
குமரவேள் வள்ளிதன் மணாளன்
சேலுலாங் கழனித் திருவிடைக் கழியிற்
றிருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாந் தடக்கை வேந்தனென் சேந்த
னென்னுமென் மெல்லிய லிவளே."

சுப்பிரமணியன் என்ற வடமொழி நாமம்,

"தூவிநற் பீலி மாமயி லூருஞ்
சுப்பிர மண்ணியன் றானே"

என்ற விடத்து வந்தமை காண்க.

கடவுளது பெருவடிவம் பின்வருந் திருவிசைப் பாவினுள் வரும்

"எண்ணில்பல் கோடி சேவடி முடிக
ளெண்ணில்பல் கோடிதிண் டோள்கள்
எண்ணில்பல் கோடி திருவுரு நாம
மேர்கொண்முக் கண்முக மியல்பும்
எண்ணில்பல் கோடி யெல்லைக்கப் பாலாய்
நின்றைஞ்ஞூற் றந்தண ரேத்தும்
எண்ணில்பல் கோடி குணத்தரோர் வீழி
யிவர்நம்மை யாளுடை யாரே."

## பூந்துருத்தி நம்பிகாடவ நம்பி

இவர் திருவிசைப்பா வாசிரியர். இவர் திருப்பூந் துருத்தியில் வாழ்ந்த ஆதி சைவர் போலும்.

"அல்லியம் பூம்பழனத் தாமூர்நா வுக்கரசை"

என்றும்,

"எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமையாளுஞ்
சம்பந்தன்"

என்றும்,

"களையா வுடலோடு சேரமா னாரூரன
விளையா மதமாறு வெள்ளானை மேல்கொள்ள"

என்றும் இவர் அருளிச் செய்திருப்பதால், தேவார மூவர் காலத்துக்கு இவர் பிற்பட்டவ ரென்பது

தெளிவு. இவர் திருவாரூர்க்குந் தில்லைக்குமே திரு விசைப்பாப் பாடினர். இவரது அழகிய திரு விசைப்பா ஒன்று வருமாறு :

" பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமா யதற்கோர்
வித்துமா யாரூ ராதியாய் வீதி
விடங்கராய் நடங்குலா வினரே "

இதன் கணே 'சத்தியாய்ச் சிவமாய' என்ற பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணக் காப்பு முதற்குறிப்பும், 'உலகெலாம்' என்னும் பெரிய புராண முதற்குறிப்பும் அமைந்து கிடத்தல் வியக்கத் தக்கதன்றே!

## கண்டராதித்தர்

இவர் சோழர் மரபினர். இவர் தம்மைக் 'காரார் சோலைக் கோழிவேந்தன் றஞ்சையர்கோன் கலந்த, ஆராவின் சொற்கண்டராதித்தன்' என்றதுங் காண்க. இவர்காலம் பத்தாம் நூற்றாண்டின் நடுப்பகுதி யென்ப. இவர்,

" வெங்கோல் வேந்தன் தென்னனாடும்
ஈழமுங் கொண்டதிறற்
செங்கோற் சோழன் கோழிவேந்தன்
செம்பியன் "

என்றமையால், சோழமன்னர் பிற அரசரை வென்று சிறப்புற்றோங்கிய பத்தாம் நூற்றாண்டிலே இவர் பாடியருளினரென்று கருதப்படும். இவர் திருவிசைப்பா தில்லைக்கு மாத்திரமே யுள்ளது.

## வேணாட்டடிகள்

இவர் தில்லைக்கு ஒரு திருவிசைப்பாப் பதிகம் பாடியுள்ளார். வேணாடு என்பது சேரநாட்டின் தென்பகுதியாகிய திருவாங்கூரென்ப. இவர் சொன்னடையால், இவர் பத்தாம் நூற்றாண்டினராதல் கருதப்படுவதே யன்றி இவரைப்பற்றிய வேறு செய்தி யாதுந் தெரிந்திலது.

## திருவாலியமுதனார்

இவர் கோயிற்குரிய நான்கு திருவிசைப்பாப் பதிகங்கள் இயற்றியருளினர். இவரது முதற்றிருப் பதிகத்தில் திருவடிமுதற் சென்னிவரையுள்ள இறைவரது திருமேனிப் பகுதிகளை முறையே பத்துப் பாட்டிலும் புகழ்ந்து பாடியிருப்பதால், அதற்குப் பாதாதிகேசமென்ற பெயர் ஏற்பட்டுள்ளது. இவர் திரு ஆலி யென்னும் ஊரிற்பிறந்த அமுதனாரென்னுஞ் சிவனடியாரென்பது இவரது திருப்பெயரால் விளங்குவதாயினும், 'ஆலைகள் சூழ்மயிலை மறைவல வாலி சொல்லை' என்று இவர் தமது நான்காம் பதிகத்திறுதியுட் கூறிப்போந்தமையால், இவர் திருமயிலையுள் வாழ்ந்தவரென்றும், 'ஆலி' யென்ற பெயர் இவர்க்குண்டென்றுந் தெரியவருகின்றது. இவரது மூன்றாம் பதிகத்துப் பத்தாம் பாட்டில்,

மாடியசமணு மறைசாக் கியரு
நிரம்பாப் பல்கோடிச்
செடியுந் தவத்தோ ரடையாத்தில்லை
சிற்றம் பலந்தன்னுள்
அடிக ளவரை யாரூர்நம்பி
யவர்க ளிசைபாடக்
கொடியும் விடையு முடையகோலக்
குழக னிடமே.

என்றவிடத்து, சமண் முதலிய புறச் சமயங்களும், நம்பியாரூராரும் விதந்தோதப் பட்டமையால், இவருந் தேவார காலத்திற்குப் பிற்பட்டவ ரென்பது தெளிவு.

## புருடோத்தமநம்பி

இவர் இரண்டு திருப்பதிகங்கள் தில்லைப் பெருமான்மீது பாடியுள்ளார். 'மாசிலா மறைபல ஓது நாவன்' என்று இவர் தமது முதற்பதிகத் திறுதிச் செய்யுளிற் கூறினமையால், இவரை வேதியரென்ப. இவர் பாடல்களில் அகத்துறைகள் மிகப்பயின்றுள்ளன. இவரது ஊருங் காலமுந் தெளிவாக விளங்கவில்லை.

## சேதிராயர்

இவர் திருக்கோவலூர்ப் பாங்கருள்ள மெய்ப்பொருணயனாரது சேதிநாட்டு மன்னர் மரபினர். இவர் தம்மைச் 'சேதியர்கோன்' என்றது காண்க. இவர் பாடியது தில்லைப் பெருமான்மீது ஒரு திருவிசைப்பாப் பதிகமே. அது முழுதும் அகத்துறைகளமைந்த பாட்டுக்களையே உடையது.

"மாதொர் கூறன்வண் டார்கொன்றை மார்பனென்
றோதி யுய்வனொண் பைங்கிளி யேயெனுஞ்
சேதித் தீர்சிர நான்முக னைத்தில்லை
வாதித் தீரென்ம டக்கொடி யையே."

இவ்வொன்பது சைவப் பெரியார் இயற்றி யரு ளிய திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் பதி கங்கள் ஒன்பதாந் திருமுறையாக அமைந்துள்ளன பத்தாந் திருமுறை திருமந்திர மென்று முன்னே கூறினோம்.

## அதிகாரம் (௧௯)

# சித்தரும் சித்தர் நூலும்.

---

சித்தர்களென்பார் பண்டைக் காலத்து அறி வருள் ஒரு சாரார். அவர்க்கு அறிவரென்ற பெயரே அமைந்திருந்தது. யோகம் பயின்று விரிந்த காட்சி யுற்றுப் பொருள்களின் உண்மையியல்புகளையும் அவற் றைப் பயன்படுத்தும் முறைகளையும் அறிந்து அவர் கள் தமிழிலே மருத்துவநூல், மந்திரநூல், இரசவாத நூல், யோகநூல், ஞான நூல் என்னும் பலவகை இலக்கியங்களை உலகுக் கீந்தனர். சித்த நூலோர் கொள்கைப்படி சிவனாரிடத்து நந்தி, அகத்தியர் முதலி யோர் ஆதியில் மருத்துவ முறையைக் கேட்டனர் எனவும், அம்மருத்துவ முறையைத் திருமூலர் முத லிய பதினெண் சித்தர்கள் வளர்த்துப் பரவச் செய் தனரெனவுங் கேட்கின்றோம். சித்த மருத்துவப்

தமிழர்க்குரிய தென்பதைக் காலஞ் சென்ற சர். சுப்பிரமணிய அய்யர், பண்டிதர் கோபாலாச்சாரியார் என்பவர்கள் ஒப்புக்கொண்டுள்ளார்கள். சிலர் பதினெண் சித்தர்களுள் நந்தி, அகத்தியர் முதலியவர்களை உட்படுத்திக் கூறுகின்றார்கள். அவர்கள் கூறும் பதினெண் சித்தராவர்: அகத்தியர், புலத்தியர், புசுண்டர், நந்தி, திருமூலர், காலாங்கி நாதர், போகர், கொங்கணர், உரோமமுனி, சட்டமுனி, மச்சமுனி, கரூரர், தன்வந்திரி, தேரையர், பிண்ணாக்கீசர், கோரக்கர், யூகிமுனி, இடைக்காடர் என்பவர்களே. பண்டைச் சித்தருள் தலையாயவர் அகத்தியர். ஆனால் அகத்தியர் செய்த ஒரு நூலும் இப்பொழுது கிடைக்கவில்லை. அவருடைய நூல்களென்று இப்பொழுது சொல்லப்படுபவைகள் மிகவும் பிற்காலத்து நூல்களே. அகத்தியர் காலந்தொட்டுப் பரம்பரையாய் வந்த கருத்துக்களை அகத்தியர் அடியர் சிலர் பல நூல்களுள் அமைத்திருத்தல் கூடும். அந்நூல்களை அகத்தியருடையன என்று கூறுதல் ஒருவகை மரபாம். அமுதகலைஞானம் நோயின்சாரம், வைத்தியக்கும்மி, வைத்திய சாரம், சங்குசுத்தி, செந்தூரமுறை, ஔவிழ்த சாரம், பூரண சூத்திரம் முதலிய நூல்களும், பஞ்சகாவிய நிகண்டு, ஐம்புள் நூல் என்பனவும் அகத்தியரால் இயற்றப் பட்டன வென்ப.

வட நாட்டிற் கண்ணனையுந் தென்னாட்டில் திருவள்ளுவரையுஞ் சித்தரென்றே கூறுப. பிறவிக்கடல் சனன சாகரம்) என்னும் ஒரு சித்தர் நூலில்

உலகத்தில் நிலவிய சித்தர்கள் தொகை கணக்கிடப் பட்டிருக்கின்றது. திருவள்ளுவனாரும்,

"வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல."

என்றமையால், துறக்க விரும்புவார் வாழ்நாள் வீண் படாது விரைவிற் றுறந்து ஒருமையின் நிற்பதால் பல்வகை ஆற்றல்களும் பெரும் பயன்களும் உளவாம் என்பது தெளியப்படும். 'கூற்றங் குதித்தலுமாம்' என்றதுங்காண்க. திருவாசகத்தில் திருப்படையாட்சியில் 'திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை சென்மின்கள்' என்ற விடத்துச் சித்தர்களை விதந்தமை காண்க. திருமூலமாமுனிவரது நூலே இப்போதுள்ள சித்தர் நூல்களுள் முதல் நிற்பது. திருமந்திரத்தின் வேறாக அத்துணை யளவுடைய பிறிதொரு நூல் மருத்துவச் சார்பாக இயற்றப்பட்டுள்ளது. 'திருமூலர் எண்ணாயிர'மென்று ஒரு நூல் உண்டென்றுங் கூறுப. 'திருமூலர் கருக்கிடை அறுநூறு' என்னும் நூல் ஒன்று சித்தர் நூற் பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. திருமூலர் எண்பெருஞ்சித்திகளையும் பற்றித் திருமந்திரத்துட் கூறியுள்ளார்.

திருமூலர் போகிருந்த திருவாவடுதுறைக்கு நவகோடி சித்தபுரம் என்ற பெயருண்டு. திருஞானசம்பந்தப் பெருமானுந் தேவாரத்துள் 'தேவராயுஞ் சித்தராயும்' என்றும், 'அட்டமாசித்திகள் அணைதரு காளத்தி' யென்றும் அருளிச் செய்தது காண்க. திருமூலரது மாணாக்கர் எழுவர். அவருட் காலாங்கி நாதரது மாணாக்கர் போகமுனிவர். இவர் ஒரு பெரிய

சித்தர் தலைவர். ஆதியில் சிவனார் அருளிச்செய்ததாகக் கூறப்படும் ஏழுநூறாயிரம் சூத்திரங்களை இவர் ஏழு காண்டத்துள் அடக்கித் தமது மாணாக்கருக்கு அறிவுறுத்தினரென்ப. இவரும் இவரது மாணாக்கராகிய புலிப்பாணியென்னுஞ் சித்தரும் பழனி மலையின் அடி-வாரத்திலுள்ள வைகாவூரில் வாழ்ந்தனரென்பது கொங்குமண்டல சதகம் ௩௯-ம் பாட்டினாற் றெரிகின்றது. பாண்டி நாட்டிலுள்ள சதுரகிரி, சிவகிரி யென்னும் இடங்களில் இவர் வசித்ததாகத் தெரிகின்றது. இவர் முருகர் வழிபாட்டிற் சிறந்தவரென்ப. இவரது நூல்கள் வைத்தியம் ஏழாயிரம், யோகம் எழுநூறு, நிகண்டு பதினேழாயிரம், போகர் திருமந்திரம் முதலியன. இவருக்கு மாணாக்கர் பலர்.

புலிப்பாணி இயற்றிய நூல்களாவன:—வைத்தியம் ஐஞ்ஞூறு, சாவாத்திரட்டு நூறு, சிதம்பரம் இருபத்தைந்து, பலதிரட்டு நூறு முதலியன.

கொங்கணர் என்பவர் இரசவாதத்திற் சிறந்தவர். இவர் கொங்கு நாட்டிலுள்ள ஊதியூர் மலையில் வசித்தவர். அதற்குக் கொங்கணகிரி யென்ற பெயரும் உண்டு. இவரைத் திருமழிசை யாழ்வார் காலத்தவரென்று கூறுவாருமுளர். இவரைப்பற்றிய செய்தி கொங்குமண்டல சதகம் ௩௭-ம் பாட்டிலுங் காணப்படும். இவரியற்றிய நூல்கள் கடைக்காண்டம், திரிகாண்டம், கொங்கணர் ஞானம், குணவாகடம் முதலியன.

இவரது மாணாக்கர் இடைக்காட ரென்பவர். இவர் கடைச்சங்ககால இடைக்காடரின் வேறானவர்.

இவரது மாணாக்கர் கமலமுனி யென்பவர் கம்மாள மரபினர். 'கமலமுனி முந்நூறு' என்னும் நூல் இவரால் இயற்றப்பட்டது. இவர் இரோகை சாத்திர வல்லுநரென்ப.

சட்டைமுனி யென்பவர் போகரது மற்றொரு மாணாக்கர். இவர் சேணிய மரபினர். இவர் சடாட்சரக்கோவை, கல்பம்நூறு, ஞானநூறு; வாதநிகண்டு; சட்டைமுனி ஆயிரத்து இருநூறு, நவரத்தினவைப்பு முதலிய நூல்களியற்றியவர்.

மச்சமுனி போகரது மற்றொரு மாணாக்கர். இவரைச் செம்படவரென்று கூறுவர். இவர் திராவகம் எண்ணூறு, வைத்தியம் எண்ணூறு என்னும் நூல்களியற்றியவர். சுந்தரானந்தர், நந்திசர் முதலியோரும் போகர் மாணாக்கர்களே.

உரோமமுனி யென்பார் சட்டைமுனி காலத்தவரென்று தெரிகின்றது. அவர் புசுண்டர் குமாரர். இவர் உரோமமுனி நூறு; உரோமமுனி ஐந்நூறு ஐம்புள் நூல் என்பன இயற்றியவர்.

யூகிமுனி யென்பவர் தேரையர் மாணாக்கருள் ஒருவர். இவர் தமது வீரச்சுன்னத்தினால், காக்கையின் வெண்ணிற மாக்கினரென்ப. இவர் வைத்திய சிந்தாமணி முதலிய நூல்களியற்றியவர்.

கோரக்கர் என்பவர் கஞ்சாவை முதற்பொருளாகக் கொண்டு மருந்துகள் பல செய்தனர். இவர்

மச்சேந்திரர் மாணாக்கர். 'கோக்கரர் வைப்பு' என்று ஒரு மருத்துவ நூல் உளது. இவர் அல்லம தேவர் காலத்தவராதலின், பத்தாவது நூற்றாண்டினரோடு ஒருங்குவைத் தெண்ணப்படுதற்குரியரே.

தேரையர் என்பார் அகத்தியர் மாணாக்கரென்ப. ஆனால் அவர் நூல்கள் கருவூர்ச் சித்தர் முதலியோர் காலத்தினவாகவே கருதப்படுதற்குரியன. இவரைத் தருமசௌமியரென்பாரது மாணாக்கரென்பாருமுளர். இவர் செய்த வைத்திய நூல்களுள் 'நோயணுகாவிதி'-யென்பது யாவராலுங் கைக்கொள்ளத்தக்கது. பிற, நீர்க்குறி நூல், நெய்க்குறி நூல், பதார்த்தகுண சிந்தாமணி, தயிலவருக்கச்சுருக்கம், சிகிச்சையாயிரம், சிகாமணிவெண்பா, மருத்துப்பாரத முதலியன.

தேரையர் போலத் தன்வந்தரியென்பாருஞ் சித்த நெறியைச் சேர்ந்தவரே. அவர் வடநூல்களிற் கூறுந் தன்வந்திரியின் வேறாவர். வைத்திய சிந்தாமணி, கலைஞானம், சிமிட்டு இரத்தினச் சுருக்கம், தன் வந்திரி நிகண்டு முதலிய இயற்றினவர். கஞ்சமலைச் சித்தரென்பவர் திருமூலர் மாணாக்கர். கொங்கு நாட்டிலுள்ள கஞ்சமலையிலுறைந்த சித்தர். (கொங்குமண்டல சதகம், ௩௫.)

பாம்பாட்டிச்சித்தரென்பவர் பாண்டி நாட்டினரென்றும், சட்டைமுனியென்பார்பால் தீக்ஷைபெற்றவரென்றுங் கூறுப. கொங்கு நாட்டில் மருதமலையிலுறைந்தவரென்பாருமுளர். தனிப் பாடல்கள்

தவிரச் 'சித்தராரூடம்' என்னும் நூலொன்று மிவா இயற்றியதாகத் தெரிகின்றது.

அகப்பேய்ச் சித்தர் என்பவர் மனது பேய்போல லையதென்ற கருத்தைத் தமது பாடல்களில் வற்புறுத்தினமையால், அப்பெயர் பெற்றார்.

குதம்பேய்ச் சித்தர் பெண்களைப் பேயென்று கருதுபவர். இவர்கள் பெயர்கள் முறையே அகப்பைச் சித்தர், குதம்பைச் சித்தர் என மருவி வழங்குவன. பல சித்தர்கள் இவ்வரிசையிலுள்ளார். அவர்கள் அழுகிணிச் சித்தர், கடுவெளிச் சித்தர் முதலியோர்.

தமிழ் நாட்டுச் சித்தர், மருத்துவத்தில் மூப்பு என்பதைச் சிறந்த கருவியாகக் கொண்டவர்கள். கன்னட நாட்டுச் சித்தர்கள் சூதத்தை அங்ஙனங் கொண்டமையால், இராசேசுரதெரிசனக் கூட்டத்தார் என்னப்படுவர். அவர்களிற் பலர் வீரசைவத் தலைவராய அல்லம தேவர் காலத்தவர். அவருள் ஒன்பதின்மர் நவநாத சித்தரெனப்படுவர். தமிழ் நாட்டுச்சித்தர் பதினெண்மர். இவரின் வேறாகப் பதினெண்மர் சித்தரெனக் காமிகாகமம், பூர்வபாகம், சிநாகவிதிப்படலத்திற் கூறப்பட்டது. அபிதான சிந்தாமணியுடையார் அகத்தியர், திருமூலர், போகர், கோரக்கர், சட்டைமுனி, நந்தீசர், கொங்கணர், கமலமுனி, இடைக்காடர், சுந்தரானந்தர், உரோமமுனி, பிரமமுனி, மச்சமுனி, வராகமுனி, கூர்மமுனி, புண்ணாக்கீசர், கைலாச நாதர் கூன்கண்ணர் என்பார் பதினெண் சித்தராவாரெனக் குறித்துள்ளார்.

பிற்காலத்தோருட் சிறந்தவர் சிவவாக்கியரென்பார் 'சிவா' என்ற ஒலியுடன் ஞாலத்திற் பிறந்தவரென்ப. சிவவாக்கியமென்ற நூல் சிறந்ததோர் அறிவு நூலாகத் திகழ்கின்றது. இவரைத் தாயுமான அடிகள் விதந்தோதினர்.

சித்தர் நூல்கள் எளிய தெளிவான பேச்சுநடையிலெழுதப்பட் டிருப்பதால், அவற்றுட் கணக்கில்லாதன சொன்னயந் தேரும் புலவராற் பாதுகாக்கப்படாது இராமபாணத்திற்குங் கறையானுக்கும் இரையாய்க் கழிந்தொழிந்தன. இருப்பவற்றைக் கோவை செய்து செம்மையாக அச்சிடுதற்குரிய முயற்சியைத் தமிழ்ச் செல்வர் விரைவிற் கடைப்பிடிக்கக் கடவர். சித்தர் முறைகளைச் சமணசமயத் துறவிகள் பலர் பத்தாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னுந் தமிழ்நாட்டிற் கைக்கொண்டொழுகுவராயினர். அவர்கள் முனியென்ற பட்டமுடையரென்ப. வாக்கானந்த முனி முதலியோர் அவ்வகையினர். திருவிசைப்பாக் காலத்தை யொட்டிச் சித்தர் நூல்களின் காலம் ஈண்டுக் குறிக்கப்பட்டதெனினும், அக்காலத்திற்கு முன்னும் பின்னும் சித்தர் கருத்துக்களடங்கிய பல நூல்கள் வெளிப்பட்டுள்ளன. அவற்றுள் தக்கவற்றைப் பழுதுபடாமற்பாதுகாக்க வேண்டியது தமிழர் கடனே.

## அதிகாரம் ௰௪

# பதினொராந் திருமுறை

பதினொராந் திருமுறையுள் பன்னிரு அருட்புலவர்கள் இயற்றிய பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

முதற்கண் திருவாலவா யுடையார் திருமுகப் பாசுரம் வைக்கப்பட்டிருக்கின்றது. அது சேரமான் ஒருவருக்குக் கொடுக்கப்பட்டது. அதனைச் சேரமான் பெருமாள் நாயனாருக்குக் கொடுக்கப்பட்ட தென்று கூறுவர். அங்ஙனமாயின் அஃது எட்டாவது நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கவேண்டும். உயர்திரு மறைமலையடிகள் முதலியவர்களின் ஆராய்ச்சியால் ஆறாவது நூற்றாண்டிற்கு முன்னேயே அது இயற்றப் பட்டதென்று கருத இடமுண்டு. தேவார மூவரைக் கூறாத கல்லாடம் ஆறாவது நூற்றாண்டில் எழுந்ததா மாகலின், அதனுட் குறிக்கப்பட்ட பாண பத்திரர் வரலாறு அதற்கு முன்னேயே நடந்திருக்க வேண்டும். சமண சமயத்தைத் தழுவிய கருநட வேந்தர் அல்லது களப்பிரர் மதுரையில் அரசாண்டபோது சேர மன்னர் சைவரா யிருந்தனர். அக்காலம் நாலாவது ஐந்தாவது நூற்றாண்டு ஆதலால், பாணபத்திரர் பரிசு பெற்றது ஆறாவது நூற்றாண்டிற்கு முன்னே நிகழ்ந்த தாகும்.

திருமுகப் பாசுரத்துக்குப்பின் காரைக்காலம்மையார் அருட்பாடற் றொகுதி வைக்கப்பட்டுள்ளது. அவை திருவாலங்காட்டுத் திருப்பதிகங்கள் இரண்டும், திருவிரட்டை மணிமாலை ஒன்றும், நூற்றொரு வெண்பாக்க ளடங்கிய அற்புதத் திருவந்தாதி ஒன்று மாம். சோழநாட்டிலே காரைக்கால் என்னும் ஊரில் எல்லா நலங்களினுஞ் சிறந்த வணிக னொருவனுக்கு இவர் மனைவியாய் இருந்தகாலை அவன் கொடுத்த இரண்டு மாங்கனிகளில் ஒன்றினைச் சிவனடியவர்

ஒருவருக்குப் படைத்து விட்டமையால்; அதனைக் கணவன் கேட்டபோது திருவருளால் ஒரு கனியை வருவிக்க அவன் மீட்டுமோர் கனிவேண்ட அதனை யும் அவ்வாறே வருவிக்கவும் அதுகண்டு திடுக் குற்று அவர் தெய்வமென்று வணங்கி அவன் அகன்று விடவே அவர் பேய் வடிவம் ஒன்றனையே விரும்பிப் பெற்றுக் கயிலைமலைமீது தலையால் நடந்து சிவபெரு மானால் அம்மையே யென்று அழைக்கும் பேறு பெற் றுத் திருவாலங்காட்டுக்கு மீண்டுவந்து கூத்தப் பெரு மானது எடுத்த திருவடிகளின்கண் என்றும் இருந்து பாடும் இறவா நிலையுற்றனர்.

திருஞான சம்பந்தப் பெருமான் அம்மையார் பொருட்டுத் திருவாலங்காட்டை மிதிக்க அஞ்சின மையால், அவர் பெருமை தெற்றெனை விளங்கும். ஆக லால் இவர் அருட்பாடல்கள் ஆறும் நூற்றாண்டிற்குப் பிற்பட்டன அல்ல என்பது தெளிவு. இவர் பாசுரங் களிலே சைவ சித்தாந்தக் கருத்துக்கள் நிரம்பியுள் ளன. அறிவின் பெருமையும் அருளின் பெருமை யும் பின்வரும் பாட்டுக்களால் விளங்கும்.

அருளே யுலகெலா மாள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானால்—அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையே னெஞ்ஞான்றும்
எப்பொருளு மாவ தெமக்கு.

அறிவானுந் தானே யறிவிப்பான் றானே
அறிவா யறிகின்றான் றானே—யறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாயம்
அப்பொருளுந் தானே யவன்.

கல்லாடனா ரென்பவர் இயற்றிய திருக்கண் ணப்ப தேவர் திருமறம், சிறந்ததோர் அகவற்பாவாக இத்திருமுறைக்கண் விளங்குகின்றது. இக்கல்லாட னார் கல்லாடம் இயற்றிய புலவர் போலும். அங்ஙன மாயின், இஃதும் ஆறாம் நூற்றாண்டிலே எழுந்த நூலாகும். பதினோராந் திருமுறையில், நக்கீரர் பாடிய வாகப் பத்துச் சிறுகாப்பியங்கள் சேர்க்கப்பட்டுள் ளன. அவையாவன: கைலைபாதி காளத்திபாதி யந் தாதி, திருஈங்கோய் மலை யெழுபது; திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, பெருந்தேவபாணி, திருவெழு கூற்றிருக்கை, கோவப் பிரசாதம், காரெட்டு, போற் றிக் கலிவெண்பா, திருக்கண்ணப்ப தேவர் திருமறம், திருமுருகாற்றுப்படையென்பன. இவற்றுள் திருமுரு காற்றுப்படை யொன்றுமே சங்கச்சொன்னடை யுடையது. ஏனைய நான்கும் அங்ஙனம் அன்மையின் அவை கடைச்சங்க காலத்தன அல்லவென்றறியப் படும். அவ்வாறாயின், அவைகளை யியற்றிய நக்கீரர் கடைச்சங்க கால நக்கீரரின் வேறாவர். இவைகள் பெரும்பாலும் வெண்பாவினாலும் அகவற்பாவினாலும் இயற்றப்பட்டுள்ளன. திருவலஞ்சுழி மும்மணிக்கோ வையுள் கலித்துறைப்பாக்களுங் கலந்துள்ளன. இந்நூல் கள் இயற்றப்பட்டகாலத்தே விருத்தப்பாக்கள் தோத் திரச் செய்யுள் வழக்கிலிருப்பதாகத் தெரியவில்லை. ஆதலால் இவைகள் ஆறாம் நூற்றாண்டிற்குப் பிற்பட் டன அல்லவென்று தெரிகின்றது. கோவப்பிர சாதத்துள்,

"ஆரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
வட்டணை பேசுவார் மாநடம் போன்று"

என்றற் றொடக்கத்து அடிகள் காணப்படுதலால், அந் நூல் ஆரிய சமயக் கொள்கைகள் மிக்குப் பரவிய சங்கரர் காலத்திற்குப் பின் எழுந்ததா மென்று கூறு வாருமுளர்.

கபிலர் பாடிய மூத்தநாயனார் இரட்டைமணி மாலையும், சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை யும் வெண்பாவுங் கலித்துறையுங் கலந்து வந்தன. அவரது சிவபெருமான் திருவந்தாதியும், பரணரது சிவபெருமான் திருவந்தாதியும் வெண்பா யாப்பிலமைந்தன. பதினோராந் திருமுறைக்கபில பரணரும், கடைச்சங்ககாலத்துக் கபிலபரணரும் வெவ்வேறுவர்.

அதிராஅடிகள், இளம்பெருமானடிகள் என்னும் இருவரும் முறையே மூத்த பிள்ளையார் திருமும் மணிக்கோவை, சிவபெருமான் திருமும்மணிக் கோவை என்பவற்றை இயற்றியருளினர். இவைகளுள் அகவற்பா, வெண்பா, கலித்துறை யென்னும் பாவகைகளே காணப்படுகின்றன. இவைகளின் சொன் னடையும் ஆறுவது நூற்றாண்டின் போக்கினையே ஒத்திருக்கின்றது. அடிகள் இருவரையும் பற்றிய வரலாறு யாதுந் தெரியவில்லை.

அறுபான்மும்மை நாயன்மார்களில் ஒருவராகிய ஐயடிகள் காடவர்கோன் என்னும் நாயனாரியற்றிய 'சேத்திரத் திருவெண்பா'வும் ஆறும் நூற்றாண்டி னதே போலும். இந்நாயனார் காலம் திருத்தொண்டத் தொகை பாடிய சுந்தரமூர்த்தி நாயனார் காலத்திற்கு முற்பட்ட தென்பது தெளிவு.

சேரமான் பெருமாணயனார் சுந்தரமூர்த்திகளுக்கு நண்பராயிருந்த சேரமன்னராதலால், அவர் காலம் சுந்தரமூர்த்திகள் காலமென்பது தெளிவு. இவர் தமது குதிரையின் காதில் திருவைந்தெழுத்தை யோதி அதன் வலியால் வான்வழிச்சென்று சுந்தர மூர்த்திகளுடன் திருக்கயிலை யடைந்தவர். இவர் வரலாறு பெரிய புராணத்துள் விரிவாகக்காணப்படும். இவர் பாடிய நூல்கள், சிவபெருமானைப்பற்றிக் கலித் துறையி லமைந்த பொன்வண்ணத் தந்தாதி, திருவா ரூர்மும்மணிக்கோவை, ஞானவுலா என்பன. இவர் பாடிய அந்தாதி 'பொன்வண்ண' மென்று தொடங்கி அச்சொற்றொடரால் முடிகின்றது. மும்மணிக் கோவை பாடுதல் அக்கால வழக்கு. உலா என்பது வீதியில் உலாப்போகுந் தலைவனைக்கண்டு பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை பேரிளம்பெண் என்னும் எழுவகைப் பருவப்பெண் டிரும் விழைவுறுவதாகப்பாடுவது. திருக்கயிலைப் பெருமான்மீது கலிவெண்பாவாற் சேரமான்பெரு மாள் பாடிய உலாவே இப்பொழுதுள்ள உலா நூல் களிலே முதன்மையாயிருப்பது. ஆதலால் இஃது 'ஆதியுலா' வெனப்படுகின்றது.

பட்டினத்தடிகள் பாடல்கள் பதினோராந் திரு முறையுட் சேர்க்கப்பட் டிருப்பதாலும், சேந்தனார் அவருடைய கணக்கராயிருந்தாரென்று கேட்ப தாலும், அடிகள் பத்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட வர் அல்லரென்பது தெளிவு. அவர் காவிரிப்பூம் பட்டினத்தில் வணிகர் மரபில் பெருஞ்செல்வத்திற்

பிறங்கி வாழ்ந்து, உலக நிலையாமை கண்டு சிவப்பேறு கருதித் துவரத் துறந்தவராவார். இவரது உள்ளத் துறவை,

"பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல்
ஆருந் துறக்கை அரிதரிது"

என்று தாயுமானச் செல்வனாரும் பெரிது பாராட்டினர்.

பட்டினத்தடிகட்கு இயற்பெயர் திருவெண்காடர் என்பது. இவர் திருவிடைமருதூரிற் சிலநாள் தங்கிப் பத்திரகிரியாரோடு உடனுறைந்து, பின்னர்ப் பல திருப்பதிகளையும் வணங்கித் திருவொற்றியூரை யடைந்து சமாதியிலிருந்து, இறைவனோடு இரண்டறக் கலந்தனர். இவரைப்பற்றிய கதைகள் பல.

பதினோராந் திருமுறையுள் இவர் பாடியருளியவை கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது என்பவை. இவைகளுள் அகவற் பாக்கள் பல வந்துள்ளன. அவை மிக்க ஆண்மையும் அழகும் உடைய செவ்விய நடையில் அமைந்துள்ளன. பிற்காலத்திலே பட்டினத்துப் பிள்ளையார் பாடலென்று சொல்லப்படும் திருவேகம்பமாலை முதலிய சிறுகாப்பியங்கள் இவரால் இயற்றப்பட்டன வென்று தோன்றவில்லை. இவரால் இயற்றப்பட்டிருக்குமாயின் அவை பதினோராந் திருமுறையுள் சேர்க்கப்பட்டிருக்கும். ஆதலால் இவர் பெயருடைய பிறிதொரு

பதினொரு திருமுறைகளையும் இராசஇராசனோடு வகுத்தமைந்த பெரியார் நம்பியாண்டார் நம்பியென் பவர். எனவே இவர் காலம் பத்தாம் நூற்றாண்டென் பது தெளிவு. இவர் திருநாரையூரிலே ஆதிசைவ மரபிற் றோன்றித் தம் தந்தையார் அயலூர்க்குப் போயிருக்கும்பொழுது பொல்லாப் பிள்ளையார்க்குத் தமது ஐந்தாம் ஆண்டிற் பூசனைபுரிய நேர்ந்து; தாம் வைத்த திருவமுதைப் பிள்ளையார் அருந்தாமையால், தமது தலையைக் கல்லில் மோதப்புகுஞ் சமயத்தில் பிள்ளையாரால் தடுக்கப்பெற்று ஆட்கொள்ளப்பெற்று, அவர்மாட்டே அறிவுநூல் முழுதுங் கற்றுத் திகழ்ந் தவர். இராசஇராச மன்னன் வேண்டுகோளுக் கிரங் கிப் பொல்லாப் பிள்ளையார் வாயிலாகத் தேவாரத் திருமுறைகள் தில்லையிற் சேமிக்கப்பட் டிருப்பதை யறிந்து, அரசனோடு தில்லை சேர்ந்து அவற்றை யெடுப் பித்து, அவற்றைப் பிற அருட்பாக்களோடு சேர்த்துத் திருமுறை வகுத்த பெருமை இவர்க்கே உரியது. இவர் பல அழகிய புகழ்க்காப்பியங்கள் இயற்றியுள் ளார். கூத்தப்பெருமான்மீது கோயிற்றிருப்பண்ணி யர் விருத்தமென்பது அந்தாதித் தொடையால் இவ ராற் பாடப்பட்டது. அறுபான்மும்மை நாயன்மார் களின் வரலாறுகளைச் சுருக்கமாகத் திருத்தொண்டத் தொகை முறைப்படி திருத்தொண்டர் திருவந்தாதி யென்னும் நூலுள் இவர் அமைத்தார். இதுவேபெரிய புராணத்திற்கு முதனூலாகும். திருஞான சம்பந்தப் பெருமான்மீது திருவந்தாதி, திருச்சண்பை விருத் தம், திருமும்மணிக் கோவை, திருஉலாமாலை, திருக் கலம்பகம், திருத்தொகை யென்பவற்றை இவர்

திருவாய் மலர்ந்தருளினார். திருநாவுக்கரசு நாயனார் மீது ஏகாதசமாலை யொன்று இவராற் பாடப்பெற்றது. உதாரணம் ஒன்று,

'பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
பாசநா வரசான பரமகா ரணவீசன்
அதிகைமா நகர்மேவி யருளினா லமண்மூடர்
அவர்செய்வா தைகள்தீரும் அனகன்வார் கழல்சூடின்
நிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை
நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்கால
மதியரா குவரீச னடியரா குவர்வான
முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே."

இவருடைய புகழ் நூல்கள் இராச இராச மன்னரால் பதினோராந் திருமுறையுட் சேர்க்கப்பட்டன. இவரைத் 'தமிழ் வியாச'ரென்ப. பெரிய புராணம் அநபாய சோழ மன்னனாற் பன்னிரண்டாந் திருமுறையாக அமைக்கப்பட்டது.

## அதிகாரம் (௧௫)

# சமணரது நூற்கிளர்ச்சி.

---

(௧0-ம் நூற்றாண்டு முதல் ௧௩-வரை)

பத்தாம் நூற்றாண்டிற் சமணர்களது கல்வித் திறன் சிறப்புற்றொளிர்வ தாயிற்று. மைசூரிலே கங்கா அரசர் மரபு புகழ்பெற்றோங்கியகாலமுமதுவே. அவர்களின் ஒரு பகுதியார் கலிங்க நாட்டிலும் அரசு செலுத்தி வந்தனர். தென்னாட்டிலே அக்காலத்திலே தமிழ்ச் சங்கங்கள் தீபங்குடி, திருமயிலை முதலிய பலவிடங்களிலிருந்தனவென்று தெரிகின்றது.

## சீவக சிந்தாமணி

இவ் விருத்தப் பெருங்காப்பிய நூலாசிரியராய திருத்தக்க தேவர், சோழ அரசர் மரபினராய்த் துறவறம் புகுந்து பாவியற்றும் வன்மை பெற்றுத் திகழ்ந்தகாலை சமண முனிவர்க்கு இன்பச் சுவை யமைத்துப் பாவியற்றுதல் இயலாத தொன்றென்ற குறைச் சொல்லை யொழித்தற் பொருட்டுச் சீவகனது மணப் பெருங்கதையை விருத்தப் பாக்களாற் சிறந்த தோர் காவியமாக இயற்றினர். இதுவே விருத்தத்தி லமைந்த முதற்றமிழ்ப் பெருங்காப்பிய மாகும். இந் நூலை யியற்றியும் உண்மைத் துறவியாகவே தாம் விளங்கின ரென்பதற் கறிகுறியாக 'நரிவிருத்த' மென்ற நிலையாமை நூலொன்றும் தேவர் இயற்றின ரென்ப.

இந்நூலுள், சீவகனுக்குங் கந்தருவதத்தைக்கும் மண நடந்த காலத்தைப் பற்றிய சில குறிப்புக்களால், ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இஃது எழுந்த தென்பர் ஒரு சாரார். மற்றொரு சாரார் சீவ கன்கதை சைனமா புராணத்தின் பிற்பகுதியிற் கூறப் பட்ட தென்றும், அதுவே திருத்தக்கதேவர் காப்பி யத்திற்கு மூல நூலா மென்றும், மகாபுராணம் இராட் டிர கூட மன்னனாகிய அகாலவருடன் ஆட்சியில் (கி. பி. 874-914) ஒன்பதாம் நூற்றாண்டி னிறுதியி லியற்றப்பெற்றதென்றும், ஆகவே தமிழ்ச் சிந்தா மணி பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலியற்றப் பட்டதா மென்றுங் கூறுவர். 'பொய்யாமொழி புகழ்

மையறு காட்சித் திருத்தகு முனிவன்' என்று பாயி ரத்துட் காணப்படுவதாலும், அப்பொய்யாமொழி யாவான் மைசூர்க் கங்கா மன்னனாகிய 'சத்திய வாக்கிய' னாதலால், அவனது காலமாகிய பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியே திருத்தக்கதேவர் கால மென்றலும் பொருத்தமே.

இந்நூல் பதின்மூன்றிலம்பகங்களை யுடையதான மூவாயிரத்துக்கு மேற்பட்ட பாடலுடையது. இரண் டாயிரத்து எழுநூறு பாடல்களை திருத்தக்கதேவ ருடையன வென்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கருது கின்றார். இதன் கடவுள் வாழ்த்து சித்தசரணம், அருகசரணம், சாது சரணம், தன்மசரணம் என்னும் நாற்பகுதியுடைத்து. ஏமாங்கத நாட்டில் சச்சந்த னென்னு மன்னன் விசையையென்னும் பட்டத்தரசி யோடு அந்தப்புரத்திலிருந்து நுகரும் இன்பவாழ்க் கையையே பொருளாகக் கருதித் தன் அமைச்சனாகிய கட்டியங்காரனிடம் ஆட்சியை ஒப்புவித்திட்டுத்தான் எல்லா வளங்களும் பொருந்தியதோர் அரண்மனைக் கண் வாழுநாளில், மந்திரி அரசனைக் கொல்லமுயன்று அவன் அரண்மனையைச் சூழ்ந்த காலை, மயிற்பொறி யொன்றிற் சூலியாகிய தன் மனைவியையேற்றி விண் வழியே செலுத்திவிட்டு அரசன் பொருது மடிந்தான். மயிற்பொறி ஒரு மயானத்திற்றங்கச் சீவகன் பிறந்து பின் ஒரு வணிகனால் எடுத்து வளர்க்கப்பட்டுக் கலை பயின்ற திறத்தைக் கூறும் பகுதி நாமகளிலம்பகம் எனப்படும். சீவகன் தன்றோழன் பதுமுக னென்பா னுக்குக் கோவிந்தை என்ற நந்தகோபன் மகளை

மணஞ் செய்வித்த வரலாற்றினைக் கூறுவது கோவிந்தையாரிலம்பகம். சீவகன் வித்தியாதர அரசன் மகள் காந்தருவதத்தையை வீணையில் வென்று மணமாலை சூடிப் பகைவருடன் போர் புரிந்து மேம்பட்டதைக் கூறுவது காந்தருவதத்தையாரிலம்பகம். அவன் கட்டியங்காரனது மதயானையையடக்கி யொழித்து குணமாலையை மணந்தது கூறும் பகுதி குணமாலையாரிலம்பகம். கட்டியங்காரன் காவலிற் றப்பிப் பல்லவநாடு புக்குச் சீவகன் அரசன் மகளாய பதுமையை விடந் தீர்த்து மணந்த வரலாறு கூறுவது பதுமையாரிலம்பகம். அவன் கேமமாபுரமடைந்து வணிகப் பெண் கேமசரியை வென்று மணந்த செய்தி கேமசரியிலம்பகத்திற் கூறப்பட்டது. ஏமமாபுரத்து மன்னனது மகள் கனகமாலையை, அரசிளங்குமரர்க்கு விற்பயிற்று வித்துச் சீவகன் மணர்ந்ததைக் கூறுவது கனகமாலையாரிலம்பகமாகும். சீவகன் தண்டகாரணியஞ் சேர்ந்து, ஆண்டுத்தவஞ் செய்யுந் தன் தாயைக்கண்டு, ஏமாங்கத நாட்டிற்கு மீண்டு, விமலை யென்பாளை மணந்த வரலாறு விமலையாரிலம்பகத்துட் கூறப்பட்டது. தனது சுண்ணத்தைப் பழித்ததற்காகச் சினந்து, ஆடவற் பேணு விரதங்கொண்ட சுரமஞ்சரியை அவன் வேற்றுருக்கொண்டு இசையான் மயக்கி மணந்த வரலாறு கூறுவது சுரமஞ்சரியாரிலம்பகம். அவன் சூழ்ச்சியாற் கட்டியங்காரனை வென்று கொன்றது மண்மகளிலம்பகப் பொருள். சீவகன் முடி சூட்டப்பெற்று ஆட்சி யெய்தியதைப் பூமகளிலம்பகங் கூறும். அவன் மாமன் மகளாய இலக்கணையை மணந்து பிற தேவிமாரோடும் வைகி உலகு புரந்தது இலக்கணையிலம்பகத்திற்

காணப்படும். மக்கட் பேறெய்தியபின் உலக நிலையாமை கண்டு வீடு காதலித்து, அவன் நோற்ற வரலாறு கூறுவது முத்தியிலம்பகமாம்.

இந்நூற்குச் சிறந்ததோருரை நச்சினார்க்கினியரால் செய்யப்பட்டுள்ளது. இந்நூற் சொற்பொருள் வனப்பினை ஈண்டு விளக்க இடம் போதாது. ஒன்றல்லது இரண்டு உதாரணமே சுட்டப்படும்.

"இன்பமற் றென்னும் பேரா னெழுந்தபுற் கற்றை தீற்றித்
துன்பத்தைச் சுரக்கு நான்கு கதியெனுந் தொழுவிற் சேர்ந்து
நின்றபற் றார்வ நீக்கி நிருமலன் பாதஞ் சேரின்
அன்புவிற் றுண்டு போகிச் சிவகதி யடைய லாமே"

என்பதிற் சமணர் உயர்கதி 'சிவகதி' யென்றமை காண்க. புலவர்,

"சாமெனிற் சாத லோதை றன்னவன் றணந்த காலைப்
பூமனும் புனைத லின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக்
காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்
தேமலர்த் திருவோ டொப்பார் சேர்ந்தவன் செல்ல நீர்ப்பார்"

என்பதிற் பெண்ணலங் கூறினார்.

"கைப்பொருள் கொடுத்துங் கற்றல்
கற்றபின் கண்ணு மாகும்
மெய்ப்பொருள் விளைக்கு நெஞ்சின்
மெலிவிற்கோர் துணையு மாகும்
பொய்ப்பொருள் பிறகள் பொன்னும்
புகழுமாந் துணைவி யாக்கு
மிப்பொரு ளெய்தி நின்றீ
ரிரங்குவ தென்னை யென்றான்"

என்னுஞ் செய்யுளிற் கல்வியின் சிறப்புக் கூறப்படுகின்றது.

## வளையாபதி

வளையாபதி யென்னுங் காவியம் சமணச் சார்பா யதே. இஃதும் சிந்தாமணி யெழுந்த காலத்ததே. இதன் காப்புச் செய்யுளும் சிந்தாமணிக் காப்பின் கருத்தே கொண்டுள்ளது.

"உலக மூன்று மொருங்குட னேத்துமாண்
டிலக மாய திறவறி வன்னடி
வழுவி னெஞ்சொடு வாலிதி னுற்றவுந்
தொழுவ ரல்வினை நீங்குக வென்றியான்."

இது சிந்தாமணிக்கு முற்பட்டதென்பர் சிலர்.

## குண்டலகேசி

குண்டலகேசி யென்னு நூல் அப்பெயருடைய ஒரு வணிகக் கன்னிகை, புத்தகுருவி னுபதேசம் பெற்று அருகசமயத்தை வென்று, புத்தமதத்தை யாண்டும் பரப்பிய கதையைக் கூறுவது. இது மேற் கூறிய இரண்டு காவியங்கட்கு முற்பட்ட தென்பர். குண்டலகேசி இலிங்கங் கட்டிய சைவரை வாதுக் கழைத்தன ளென்பது,

"என்கருமம் வினவுதியே லிலிங்கியரி லென்னோடு
நன்குரைப்பார்த் தரல்வேண்டி நாவலங்கொம் பிதுநட்டேன்"

என்னு மடிகளாற் போதரும். இக்கதை வட நாட்டில் நடந்ததாகத் தெரிகின்றது.

சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி, சிந்தாமணி யென்னும் ஐந்தையும் பஞ்ச காவியமென்று வழங்கும் வழக்கம் பிற்காலத்தது.

புத்தநூலாகிய குண்டலகேசிக்கு எதிரிடையாக எழுந்த சைனகாவியம் நீலகேசித்தெருட் டென்பது. அதனுள் குண்டலகேசியைச் சமணர் வென்றதாகக் கூறப்பட்டது.

## சூளாமணி.

சூளாமணி யென்பது தோலாமொழித் தேவராற் சிந்தாமணிக்குப் பின் இயற்றப்பட்டது. சூளாமணி யியற்றிய ஆசிரியர் பெயர் சீவர்த்தகதேவரென்று மைசூர்க் கல்வெட்டொன்றினாற் புலனாகின்றது. இவர் குணபத்திரனென்னுஞ் சைன ஆசிரியர் வழியில் வந்தவர். குணபத்திரர் காலம் பத்தா நூற்றாண்டின் தொடக்கம். இவர்க்குப் பின் குமாரசேனர், திருத்தக்கதேவர் இருந்தனரெனவும், அவர்கட்குப் பின் சீவர்த்தர் இருந்ததாகவும் ஆராய்ச்சியாளர் கருதுவதால், சூளாமணி பத்தா நூற்றாண்டின் பிற்பகுதியிலே யாக்கப்பட்டதென்னலாம். சூளாமணியாசிரியரை யாதரித்த மன்னன் கார்வெட்டி நகர்த்தலைவன் விசயனென்பான். கார்வெட்டி நகர் வடஆற்காட்டிலுள்ளதென்பர். சேந்தன் என்னும் புலவர்பால் இந்நூல் அரங்கேற்றப்பட்டதென்பது இதன் றமிழ்ப் பாயிரத்தாற் றெரிகின்றது. அச்சேந்தனார் யாரென்பது விளங்கவில்லை. அவர் திருவிசைப்பாச் சேந்தனார் பரம்பரையில் வந்திருக்கலாம்.

சூளாமணியுள், திவிட்டன் என்பான் சுரமை நாட்டிலே போதனமா நகரத்திலிருந்த பயாபதியென்னும் அரசன் புதல்வனாய்ப் பிறந்து, தன் பகைவனை

அயக்கிரீவ பிரதிவாத தேவனை வென்றமை கூறப்பட்டது. இவன் கண்ணனையும் இவன் தமையன் விசயன் பலராமனையும் ஒத்தவர்கள். இவர்கள் பகைவன் கஞ்சன்போல்வான். விவரம் விரிக்கிற் பெருகும். சூளாமணி யாப்பருங் கலத்திற்கு முற்பட்டது. இது சிறு பஞ்சகாவியமாகிய ஐந்து நூலின் முதனூலாகும். நீலகேசித்தெருட்டு, உதயணன் கதை, யசோதரகாவியம், நாககுமார காவிய மென்பன அவற்றுட் பிற்பட்டனவாகும். இவைகள் யாவும் பதினோராம் நூற்றாண்டினியற்றப் பட்டன.

## யசோதர காவியம்

யசோதர காவியம் மாரிதத்தன் என்னும் இராசமாபுரமன்னனுக்கு உயிர்ப்பலி தீயதென்று அறிவுறுத்தற் பொருட்டு யசோதரன் என்பானது பலபிறப்புக்களைப் பற்றிச் சொல்லப்பட்ட கதையாகும். அதைக் கேட்ட மாரிதத்தன் துறவடைந்து மாதவநோற்றனன்.

## மேருமந்தர புராணம்

பன்னிரண்டாவது நூற்றாண்டிலோ, பதினோன்காவது நூற்றாண்டிலோ வாமனாசாரியாரென்னுஞ் சமணமுனிவர் மேருமந்தர புராணமென்னுங் காவியத்தை இயற்றியருளினர். இது மேருமந்தர் என்னுங் கணதரர்களுடைய வரலாறுகளைக் கூறுவதால், இப்பெயர் பெற்றதென்ப. இதனுட் சிம்மசந்திரன் பூரணசந்திரன் என்னும் உடன் பிறந்தார் இருவர், ஒரு

கெட்ட அமைச்சன் வசப்பட்டுத் தீங்கிழைத்துப் பல பிறவி யெடுத்துப் பின் தவங்கிடந்து முத்திபெற் றதும், அமைச்சன் நரகெய்தியதும் கூறப்பட்டன. சமணர் செய்த காவியங்களுள் தமிழிலே புராண மென்ற பெயரால் நிலவுவனவற்றுள் இதுவே முத லாவ தாகும். சேக்கிழாரது பெரியபுராணம், கந்த புராணம் முதலியன எழுந்த பின் இது தோன்றிற் றென்று கருத இடமுண்டு. இந்நூற்குப் பின்னர், சிறந்ததொரு சைன காவியம் வேறொன்றும் பிற்காலத் திற் றோன்றியதாகத் தெரியவில்லை.

சைனர்கள் தமிழிலே காவியம், இலக்கணம், நிகண்டு, நீதிநூல் என்பனவே இயற்றினர். தமது சமயக் கொள்கைகளை அவர்கள் காவியங்களிற் சிற்சில இடங்களிலும், காப்புச் செய்யுள்களிலுமே தோன்ற வைத்துள்ளார். அவருடைய தனிச் சமய நூல்கள் தமிழிற் பெரு வரவிற்றாய் வழங்கவில்லையோ, அல் லது பிற்காலத்தே மறைந் தொழிந்தனவோ? அவற் றைப் பற்றி யாதுந் தெரியவில்லை.

## யாப்பருங்கலம்

யாப்பிலக்கண நூல்களுட் சிறந்த யாப்பருங்கலம் என்பது கி. பி. பதினோராம் நூற்றாண்டிலே குண சாகர ரென்பவரா லியற்றப்பட்டது. இவர் தீபங் குடியிலிருந்த சமண சங்கப் பிரிவாகிய 'அருங்கலான் வய' மென்னுங் குழுவினைச் சேர்ந்தவரென்பது நூற் பெயராற்குறிக்கப் பட்டது. இதற்குச் சைவரொருவர் பேருரை செய்துள்ளார். இக்குணசாகரர் அமுத

சாகரரியற்றிய யாப்பருங்கலக் காரிகைக் குறை வகுத்துள்ளார். இக்காரிகை கட்டளைக் கலித்துறை யாப்பாலியற்றப்பட்டது. இஃதே பிற்காலத்திற் பெரிதும் வழங்குகின்றது.

## வீர சோழியம்

'வீர சோழிய' மென்னும் இலக்கண நூல் வீர சோழனென்னும் மன்னன் பெயரால், புத்தமித்திர னென்பாரா லியற்றப்பட்டது. அம்மன்னன் காலம் 1078முதல் 1088 வரை. நூலாசிரியர் ஊர் பொன்பற்றியூர். இந்நூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென்னும் ஐந்திணையு முணர்த்துஞ் சிறு நூல் ஐந்திலக்கணங்களையும் வகுத்தோதிய சிறு முதனூல் இஃதே போலும். இதற்குப் பெருந்தேவனாரென்பவரால் உரையியற்றப்பட்டது. இவர் பாரதம் பாடிய பெருந்தேவனாரின் வேறுவர்.

## நேமிநாதம்

புகழேந்திப் புலவரால் வெண்பா நயங்கள் துலக்க மடைந்தபின் பன்னிரண்டாம் நூற்றாண்டிலே, குணவீர பண்டிதரென்னுஞ் சமணப் புலவர் நேமிநாத அடிகளென்னுஞ் சைன முனிவர் பெயரால், எழுத்துஞ் சொல்லும் பகரும் இலக்கண நூலொன்றியற்றினர். இந்நேமிநாதம் பண்டித முனிவன் முன் அரங்கேற்றப்பட்டது. திரிபுவன தேவனெனப் பெயர் பெற்ற இரண்டாங் குலோத்துங்க மன்னன் காலத்தே இந்நூலியற்றப்பட்ட தென்ப. இவர் தொண்டை நாட்டுக் களந்தை யென்னுமூரிற் பிறந்தவர். இன்னும்

இவர் வச்சணந்தி யென்னுஞ் சமண அடிகள் பெயரால் வெண்பாப் பாட்டியலென்னும் யாப்பிலக்கண நூலு மியற்றினர். அது வச்சிணந்தி மாலையெனவும் பெயர் பெறும். ('நந்தி' யென்பது நந்தி கணத்தைச் சார்ந்த சமணத் துறவிகளின் பட்டப் பெயராகும்.) அந்நூல் மொழியியல், செய்யுளியல், பொதுவியல் என்று மூன்று பகுதியுடைத்து. இலக்கிய வமைப்பிற்குரிய மங்கலப் பொருத்தம், சொற் பொருத்தம். எழுத்துப் பொருத்த முதலிய பத்துவகைப் பொருத்தங்களைப் புதுவதாக எடுத்து மொழிவது.

தொண்டை நாட்டிலே புளியங்குடி யூரிலிருந்த உய்யவந்தார் மகனார் நாற்கவிராச நம்பியென்னுஞ் சைனப் புலவர் குலசேகர பாண்டியன் காலத்திலே, அதாவது கஉ-ம் நூற்றாண்டி னிறுதியிலே ஓர் அகப் பொருளிலக்கண மியற்றினர். அது 'நம்பி யகப் பொரு' ளென்று வழங்குகின்றது. அதன் விதிகளை விளக்குஞ் செவ்விய இலக்கியம் தஞ்சைவாணன் கோவை யென்ப.

பதினோராவது நூற்றாண்டு முதல் பதின்மூன் றாவது நூற்றாண்டுவரையுள்ள காலத்திலே பல புலவர் பெயரமைத்த பன்னிரு பாட்டியலும்,மயேச்சுரனென் னுஞ் சமண முனிவரால் இயற்றப்பட்ட மயேச்சுர யாப்பும், யாமளேந்திரரா லியற்றப்பட்ட இசைத் தமிழ் நூலாகிய இந்திர காளியமும், அறிவனரா லியற் றப்பட்ட 'பஞ்சமர' பென்னும் இசை நூலும், நாரத னது 'பஞ்சபாரதீய' மென்னும் இசை யிலக்கணமும்,

ஆதிவாயிலார் என்பாரது நாட்டிய நூலாகிய பரத சேனாபதீயமும் பிற இலக்கண நூல்களுந் தோன்றி யிருக்கலாம்.

## பவணந்தி முனிவர் நன்னூல்

மூன்றாவது குலோத்துங்க சோழன் காலத்தவனாகிய (1178-1216) சீயகங்கன் என்னும் மைசூர்க் கங்கா அரசன் மரபைச் சார்ந்தவனாய், கோலாரென்னு மிடத்தில் அரசாட்சி செய்த சிற்றரசன் வேண்டு கோட் கிணங்கி, தொண்டை நாட்டுச் சனகாபுரத் தூரிற் பிறந்த சன்மதி முனிவன் மகனார் பவணந்தி யென்பாரால் பதின்மூன்றா நூற்றாண்டின் தொடக்கத்தில் 'நன்னூல்' இயற்றப்பட்டது. இஃதே இக் காலத்திற் பெருவழக்கிற்றாய்த் திகழ்கின்றது. அரும் பொருளனைத்தையும் 'யாவருமுணர' என்ற இதன் சிறப்புப்பாயிரப் பகுதியால், இஃது ஐந்திலக்கணமு முடையதென்று கொள்ளவேண்டும். ஆனால் இப் பொழுதுள்ள நன்னூலின்கண் எழுத்துஞ் சொல்லுமே காணப்படுகின்றன. கூரத்தாழ்வார் பாடிய தனியன் ஒன்றில் 'தமிழ் நன்னூற்றுறைகள் அஞ்சிற்கிலக்கியம்' என்ற வாக்கியத்திற்குப் பொருள் கூறும் பிள்ளை லோகாச்சாரியார் அஃது ஐந்திலக்கணமுடைய நன்னூலைக் குறிப்பதென்று கூறினார். அதனால் நன்னூல் பொருள், யாப்பு, அணியினையுங் கூறியதென்பர் ஒரு சிலர். அச்சொற்றொடருக்குப் பொதுப் பொருள் கொண்டால் நன்னூலின்கண் பொருள் யாப்பு அணி இயம்பப் பட்டனவாகக் கருத இடமில்லை.

## அறநெறிச்சாரம்

அறநெறிச்சார மென்னும் நீதிநூலும் இக்காலத்திலேதான் இயற்றப்பட்டதென்று கருத இடமுண்டு. அது பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்திலேற்பட்டிருக்கலாம். அதன் ஆசிரியர் முனைப்பாடியாரென்னுஞ் சமணப் புலவர். அவர் தீபங்குடியில் திகழ்ந்த அருங்கலான் வயத்தாரால் இயற்றப்பட்ட 'அருங்கலச் செப்பு' என்னும் அறநூலின் வைப்பினைப் பின்பற்றிக் காட்சி, ஒழுக்கம், ஞானம் என்னும் மூன்று பெரும்பகுதிகளை யுடைத்தாயும் இருநூற்றிருபத்திரண்டு வெண்பாக்கள் கொண்டதாயுமுள்ள இந்நூலை இயற்றினர். இந்நூலுள் அருகனைச் சிவனென்று சொல்லியமுறை மிக வியப்பைத் தருகின்றது.

"அவன்கொல் இவன்கொலென் றையப் படாதே
சிவன்கண்ணே செய்ம்மின்கள் சிந்தை—சிவன்தானும்
நின்றுகால் சீக்கும் நிழல்திகழும் பிண்டிக்கீழ்
வென்றிச்சீர் முக்குடையான் வேந்து"

ஒவ்வொருவனும் பெருமையையுஞ் சிறுமையையும் தன்னலேதான் தேடிக்கொள்கின்றான் என்னுங் கருத்தினை ஆசிரியர் மிகத் திட்பமாக இந்நூலுள் தெரிவிக்கின்றார்.

"தானே தனக்குப் பகைவனும் நட்டாலும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தான்செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி."

"தன்னைக்குந் தெய்வம் பிறிதில்லை"
என்றதுங் காண்க.

## பதினான்காவது நூற்றாண்டு

பதின்மூன்றாவது நூற்றாண்டிலே சமண முனிவருள் அவிரோத நாதர் என்பவர் அருகக்கடவுள்மீது திரு நூற்றந்தாதி பாடினர். உதீசித்தேவர் என்பவர் திருக் கலம்பக மியற்றினர். பொன்னவன் என்பார் அம் பரிலிருந்த கணபுரத்தேவன் விரும்பிய வண்ணம் கனு நூலொன் றியற்றினர்.

இதற்குப்பின் பதினான்காவது நூற்றாண்டிற் றோன் றிய சூடாமணி நிகண்டினைத் தவிர வேறு சிறந்த சமணநூல் யாதுந் தெரிந்திலது. தொண்டை நாட் டுப் பெருமண்டூரினராகிய மண்டலபுருடர் என்னும் சைனப் பெரும்புலவரா லியற்றப்பட்ட சூடாமணி நிகண்டு பன்னிரண்டுதொகுதிகளையுடையது. அதற்கு முன் திவாகரம், பிங்கலந்தை, உரிச்சொல் நிகண்டு என்பன இயற்றப்பட்டன வென்பதை அதன் சிறப் புப்பாயிரம் பகர்கின்றது. அப்பாயிரத்துள் அது கிருட்டினதேவராயன் என்னு மன்னர் காலத்தே இயற்றப்பட்டதென்று குறித்திருக்கின்றது. மண்டல புருடர்க்கு ஆசிரியர் குணபத்திரர். குணபத்திர சைன மகாபுராணம் வடமொழியிலியற்றியவர். அஃது இயற்றப்பட்ட காலம் கி. பி. அ௬அ என்று அப்புரா ணத்தாற் றெரியவருகின்றது. குணபத்திரர் காலத்தே அரசாண்ட சைனமன்னன் அகாலவருடன் என்ப வன். அவனுக்குக் கிருட்டினராயரென்ற பெயருண்டு.

அவன் காலம் அ௫௪௪-முதல் ௯௬௪௪-வரையாகும். ஆதலால், மண்டலபுருடர் காலமும் அதுவே என்பது ஒரு சாரார் கொள்கை. சிலர் சூடாமணி நிகண்டிலே பன்னிரண்டாம் தொகுதியுள் பாற்கரர் செய்த கணித நூலைக் குறிப்பதாலும், அது ௧௨-ம் நூற்றாண்டிலே இயற்றப்பட்டதாலும், அவ்வாறே பத்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட பல செய்திகள் அதனுட் காணப்படுதலாலும் சூடாமணி நிகண்டு விசயநகரத்தில் 1508-30-வரை ஆட்சி செய்த கிருட்டினராயன் காலத்திலேதான் இயற்றப்பட்டதென்ப.

இந்நிகண்டிட் குறித்த குணபத்திரரைக் குருமூர்த்தியாக அவர் காலத்திற்குப் பின் மண்டல புருடர் வழிபட்டிருத்தல் கூடும். அவர் "மகிழ் குணபத்திரனெங்கள் வழித்தெய்வம் போல்வான்." என்றது காண்க. "மருவு முத்தமிழை முன்னாள் வளர்த்த பாண்டியரே போல...கருதிய வெல்லாந் தந்து" என்றமையால், பாண்டிய அரசு இறுதியுற்றபின் தென்னாடு முழுவதும் அரசாண்ட கிருட்டினராயனே மண்டலபுருடராற் குறிக்கப்பட்டானென்றுகருதுதல் பொருத்தமானதே. மண்டல புருடன் சைனர். கிருட்டினராயன் சைவன். இதனால் புலவர் எச்சமயத்தினராயினும் மன்னன் போற்றுதற்குத் தடையுண்டென்று தோன்றவில்லை.

ஆதலால், சூடாமணி நிகண்டு பதினாறாவது நூற்றாண்டின் தொடக்கத்தி லெழுந்த நூலென்றே கொள்க. இந்நிகண்டே பிற்காலத்திற் பெருவழக்கிற்றாய் வழங்கலாயிற்று.

அதிகாரம் (கசு)

# சைவகாப்பியக் காலம்.

---

## கலிங்கத்துப் பரணி

சைவ இலக்கியங்களுக்கும் சமண இலக்கியங்களுக்கும் நடுநிகர்த்தாய்ச் சிறந்திலங்குஞ் சீருடைச் சிறு காப்பியம் கலிங்கத்துப் பரணியாகும். அது முதற் குலோத்துங்க சோழன் காலமாகிய (1078-1118) பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சயங்கொண்டாராலியற்றப்பெற்றது. பரணியென்பது போரில் ஆயிரம் யானையை வென்ற வீரனைப்பாடும் பிரபந்தம். போரினின்று மீண்ட தலைமகன்பாற் புலவியுற்ற தலைமகளது ஊடலைத் தீர்த்தற் பொருட்டுப் புலவர்கள் வாயிலாதலும், புலவியாற்றிய பின்னர் தலைவன் சென்ற காட்டின் கொடுமையையுந் தலைவன் வீரத்தையும், அக்காட்டிலுள்ள பேய்கள் காளிக்குச் சொல்லுவதையும் காளி பேய்கட் குரைப்பதையும் எடுத்தியம்பும், வடிவுடன் பரணி யென்பது திகழும். குலோத்துங்க மன்னன் கலிங்கத்தை வென்று மீண்டதை இப்பரணி புனைந்து கூறுகின்றது. கலிங்கத்துப் பரணியே அவ்வகைப் பிரபந்தத்துட் சிறந்ததாயும், முதன்மையாயுமுள்ளது. இதன் ஆசிரியர் தீபங்குடியைச் சார்ந்தவராதலின், அருகரென்ப. இந்நூற் காப்புச் செய்யுளால், அவர் சிறந்த சைவரென்றே தெரிகின்றது. இந்நூலின் கடவுள் வாழ்த்தில் முதற்பாட்டு உமாபதிக்கும், இரண்டாவது செய்யுள் திருமாலுக்கும்,

மூன்றாவது நான்முகனுக்கும், பின் இரவி, பிள்ளையார், முருகன், நாமகள், உமையவள், ஏழுமாதர் என்பார்க்கும் வணக்கமாகக் கூறப்பட்டன. உமாபதிதுதி வருமாறு:—

" புயல்வண்ணன் புனல்வார்க்கப் பூமிசையோன்
றொழில்காட்டப் புவன வாழ்க்கைச்
செயல்வண்ண நிலைநிறுத்த மலைமகளைப்
புணர்ந்தவனைச் சிந்தை செய்வாம் "

" அருமறையி னெறிகாட்ட வயன்பயந்த
நிலமகளை யண்டங் காக்கு
முரிமையினிற் கைப்பிடித்த வுபயகுலோத்
தமனபயன் வாழ்க வென்றே "

இதனுள் உபயகுலோத்தம னென்றது சாளுக்கிய அரசன் மரபினைச் சார்ந்த முதல் இராச இராசனுக்கும் சோழமன்னர் மரபினில் வந்த அம்மங்க தேவிக்கும் பிறந்த முதற்குலோத்துங்கனை யென்க. இன்னுங் கடைதிறப்பில் வரும்,

" பேணுங் கொழுநர் பிழைகளெல்லாம்
பிரிந்த பொழுது நினைந்தவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர்
கனப்பொற் கபாடந் திறமினோ"

" நேயக் கலவி மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக் கிளியுரைப்ப
வாயைப் புதைக்கு மடநல்லீர்
மணிப்பொற் கபாடந் திறமினோ "

என்னும் பாட்டுக்களும், பாலை வருணனையாக வரும்,

"செந்நெ ருப்பினைத் தகடு செய்துபார்
செய்த தொக்குமச் செந்த ரைப்பரப்
பந்நெ ருப்பினிற் புகைதி ரண்டதொப்
பல்ல தொப்புறு வதனி டைப்புறு"

என்னும் பாடலும் உற்று நோக்கற்பாலன.

செயங்கொண்டார் செட்டிகள் மீது 'இசையாயிரம்' நூல் செய்ததாகக் கேட்கப்படுகின்றது.

## பெரியபுராணம்

கலிங்கத்துப் பரணிக்குத் தலைவனாகிய முதற் குலோத்துங்கனுக்கு 'அநபாயன்' என்ற பெயர் உண்டென்பது திருவாரூர்ச் சாசனம் ஒன்றினால் வயங்குகின்றது. அவ் 'வநபாயன்' என்ற பெயர் முதற்குலோத்துங்கனுக்குச் சிறப்பாக வழங்கி அவனுக்குப் பின்வந்த மன்னனுக்குப் பொதுப் பெயராய் வழங்கி இரண்டாங் குலோத்துங்கனுக்கும் அங்ஙனமே வழங்கி யிருத்தல் கூடும். தண்டியலங்காரத்திற் கூறப்பட்ட அனபாயன் இரண்டாங் குலோத்துங்கனாக இருத்தல் கூடும். கலிங்கம் வென்றதை ஆசிரியர் சேக்கிழார் கூறாத காரணம் பற்றி முதற் குலோத்துங்கன் பெரியபுராணம் பாடுவித்தவனல்லன் என்று துணிதல் தக்கதன்று. அனபாயன் வெற்றி அனைத்தையும் சேக்கிழார் பெருமான் கூற வரவில்லை. முதற்குலோத்துங்கனே பெரியபுராணம் பாடுவித்தவன் என்பதே பொருத்தம். பெரிய புராணம் இரண்டாங் குலோத்துங்கன் காலத்தில் இயற்றப்பட்டதெனக் கொள்வாரும் அது கம்ப ராமாயணத்திற்கு முற்பட்டதென்பதை மறுக்கமுடியாது.

வீரசோழன் காலத்தில் தோன்றிய வீரசோழியத்திற்குப்பின் கந்தபுராணம் இயற்றப்பட்ட தென்றால், அது பெரியபுராணத்துக்குப் பின்னரே தோன்றிய நூலாகும். விருத்தப் பெருங் காப்பியங்களில் சிந்தாமணி பத்தாம் நூற்றாண்டிலும் பெரியபுராணம் பதினோராம் நூற்றாண்டின் இறுதியிலும் கந்தபுராணம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் கம்பராமாயணம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பாதியிலும் இயற்றப்பட்டனவாகும். விருத்தப்பாவிலமைந்த காவியங்களுள் இந்நான்குமே தலை சிறந்தனவாம். சிந்தாமணி கந்தபுராணம் என்னும் இரண்டும் ஒத்த சொல்நடையுடையன, இவ்விரண்டும் ஆண் அழகுடையன வென்னலாம். கம்பராமாயணம் பெண் நடையுடையது. இருவகை நயமும் உடையது பெரிய புராணம். மென்மையிலும் இனிமையிலும் இணையற்ற மொழிகளால் தொடுக்கப்பட்ட பாமாலைச் செறிவாகப் பெரிய புராணம் இலங்குகின்றது. அதனினும் இனிய சொன்னடையி லமைந்த பெருங்காப்பியம் வேறு யாதும் இல்லை. சிவனடிப் பேரன்பு மிக்க அறுபான்மும்மை நாயன்மாரது சரிதங்களைச் செவ்விதின் எடுத்துரைத்து அறிவினையும் அன்பினையும் வளர்ந்தோங்கச் செய்வதில் பெரியபுராணம் ஒப்புயர்வற்றது. ஆசிரியர் சேக்கிழார் பத்திச் சுவையை மிகுத்துக் கூறியதுடன் காப்பிய நயங்கள் பலவும் பெரிய புராணத்துள் அமைத்து வைத்துள்ளா ரென்றறிக. சுந்தரமூர்த்தி நாயனார் புராணத்தில் இன்பச்சுவையையுந் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் ஐந்திணை வளங்களையும், ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்

திலுஞ் சிறுத்தொண்டர் புராணத்திலும் வீரச் சுவை யையும் அவர் இனிதெடுத்து விளக்கியது காண்க. பிறவும் அன்ன. விரிப்பிற் பெருகும். அன்பின் சிறப்புக்கூறும் பகுதிகள் சில வருமாறு:—

" கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார் "

(திருக்கூட்டச்சிறப்பு.)

" இறவாத வின்ப வன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார் "

(காரைக்காலம்மையார்.)

" உள்ளத்திற் றெளிகின்ற அன்பின் மெய்ம்மை
யுருவினையும் அவ்வன்பி னுள்ளே மன்னும்
வெள்ளைச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண்
விமலரையு முடன்கொண்ட விருப்பும் பொங்கிப்
பள்ளத்தி விழிபுனல்போல் பரந்து செல்லப்
பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன்
வள்ளத்தில் ஞானவா ரமுத முண்டார்
மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார்.

பெரியபுராணத்துட் பேசப்படுந் தொண்டர்கள் அனைவரும் தமிழ்நாட்டிற் பிறந்த தமிழ்ப்பெருமக் களே யென்பது உற்று நோக்கத் தக்கது. அவருட் பெரும்பான்மையோர் இல்லறத்திலே தவங்கிடந்து திருவருள் பெற்றவர். அவர்கள் ஆசிரியர் தொல்காப் பியனா ரியம்பிய,

" காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே " (கற்பு, நக.)

என்னும் நூற்பாவிற் குறித்த உயர் நெறியில் நின்று வீடெய்தியவர் ஆவர். சங்கப் புலவருள் திருவருள் பெற்ற பெரியாரும் பெரியபுராணத்துட் கூறிய தொகை யடியாருள் அடங்குவர். பெரியபுராணத்துக்குப் பிற்காலத்திலிருந்து திருவருள் பெற்ற அடியார்கள் அப்புராணத்துட் கூறிய 'அப்பாலும் அடிச்சார்ந்தார்' என்பாருள் அடங்குவர். பெரியபுராணமானது திருத்தொண்டத்தொகை, நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி என்னும் இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு ஆசிரியர் சேக்கிழார் பெருமான் செய்தருளிய தனிமுதல் நூலாகும். இதற்கு வடமொழியிலே சில தவறுகளுடன் இரண்டு மொழிபெயர்ப்பு நூல்கள் அமைந்திருக்கின்றன. அவை உபமந்நியு பக்தவிலாசம், அகத்திய பக்தவிலாசம் என்பன. அந்நூல்களைப் பெரியபுராணத்துக்கு முதனூல்களென்று கூறுவது வரலாற்றுக்கண் ணில்லாதவர்களது பெருந் தவறுதலாகும்.

## கந்தபுராணம்

கந்தபுராணம் உண்டான காலத்தை 'எண்ணிய சகாத்த மெழுநூற்றின் மேலாய்' என்று தெரிவிக்க செய்யுளினால், கந்தபுராணம், சிந்தாமணி யெழுந்த காலத்திலேயே ஏற்பட்டதென்ப. எழுநூற்றின் மேலாய் என்பதனால், எண்ணூறு தொடங்குவதற்கு முன்னுமென்று கொள்ளுமிடத்து, சாலிவாகன சகாப்தம் ௭௯0-ல் கந்தபுராணம் ஏற்பட்டிருப்பின், அக்காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலாமென்று கொள்ள இடமுண்டு. சிந்தாமணி ௯-ம்

நூற்றாண்டின் முற்பகுதியி லெழுதப்பட்ட தென்பு கொள்வார் கந்தபுராணத்தை ஒன்பதா நூற்றாண்டி பிற்பகுதியென்பர். அவ்வாறன்றி வீர சோழியமே பட்டதின் பின் கந்தபுராணம் ஏற்பட்டதென்பாரு உளர். ஏனெனில், கந்தபுராண முதற்பாட்டின்கண் 'திகடசக்கரன்'' என்ற சொற்றொடர்ப் புணர்ப்பிற்கு விதி வீரசோழியத்திற் காணப்படுகின்றது. வீர சோழியம் பதினோராம் நூற்றாண்டி னிறுதியில் எழுந்ததாகும்.

கந்தபுராண காலம் பதினோரா நூற்றாண்டி னிறுதி அல்லது பன்னிரண்டா நூற்றாண்டின் தொடக்கமாகும்.

எவ்வாறாயினும் கந்தபுராணத்தை நோக்கு மிடத்து அது சிந்தாமணியின் ஆண்மைப் பெருநடை யுடன் நிகழ்கின்றது. ஆனால், சிந்தாமணியினும் எளிய இயற்றமிழ் மொழிகளாலியன்றது. அந்நூல் வடமொழிக் கந்தபுராணத்தின் ஒரு பகுதியாகிய சங் கரசங்கிதையிற் கூறும் அறுமுகக்கடவுள் வரலாற்றை யோதும் தமிழ்ப் பெருங்காப்பியமாகும். இது பதி னாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களுடையது. கம்ப ராமாயணத்துக்கு முற்பட்ட முதற்பெருங்காப்பிய மாகும். இது காஞ்சிபுரத்திற் குமரகோட்டத்திற் பூசனைசெய்யு முரிமையினராயிருந்த ஆதிசைவ மர பினராய கச்சியப்ப சிவாசாரியரால் இயற்றப்பெற் றது. இது ஆறு காண்டங்களை யுடையது. இஃது ஆறுமுகக்கடவுள் சிவபிரானது நெற்றியினெழுந்த

ஆறு பொறிகளின் சேர்க்கையாற் சரவணப் பொய் கையி லுதித்துக் கார்த்திகை மாதரால் வளர்க்கப் பெற்றுத் திருவிளையாடல்கள் நடத்திய வரலாற்றினை யும், சூரபன்மன் காசிபருக்கு மாயையிற்றோன்றி வீர வேள்வி செய்து சிவபிரான்பால் ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகங்களாக ஆளும் பெரு வரம்பெற்றுத் திருமால் முதலிய தேவரைச் சிறை செய்த வரலாற்றினையும், அவன் உடன்பிறந்தாரை யும் அவனையும் பொருதுவென்று தேவர் சிறைநீக்கி விண்குடி யேற்றிய வரலாற்றினையும், ஆறுமுகக்கடவுள் தெய்வயானையையும் வள்ளிநாயகியையும் மணந்த வர லாற்றினையும், இந்திரன் மகனாகிய சயந்தனுக்கு வியாழபகவான் தேவர் அசுரர் சிறைப்பட்ட காரணங் கூறும் வரலாற்றினையும் விரிவாகக் கூறுகின்றது. இது 'நவிற்றொறும் நவிற்றொறும் நூனயம் பயப்பது. பயி ற்றொறும் பயிற்றொறும் அறுமுகக்கடவு டிருவடிப்பத்தி ஞானம் விளைப்பது.'

இதன்கண் காவியப் பண்ணயங்களோடு சைவ சித்தாந்தக் கருத்துக்கள் தெள்ளிதில் விளக்கப்பட் டுள்ளன. முருகப்பிரான் மாறின்றி வைகும் பரமன் வடிவினரென்பதைச் செவ்விதின் வற்புறுத்து முதற் காப்பியமிஃதே.

"முழுமதி யன்னவாறு முகங்களு முந்நான் காகும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகிய காமீ ராறும் அணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டா னவன்றவஞ் செப்பற் பாற்றோ."

செவ்வெளது உண்மையியல்பு:—

" ஊரிலான் குணங்குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரிலானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரிலான்வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரிலானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான்."

அகத்துறை:—

" மொழியொன்று புகலாயாயின் முறுவலும் புரியாயாயின்
விழியொன்று நோக்காயாயின் விரகமிக் குழல்வேனுய்யும்
வழியொன்று காட்டாயாயின் மனமுஞ்சற் றருகாயாயின்
பழியொன்று நின்பாற்சூழும் பராமுகந் தவிர்தி யென்றான் "

## ஒட்டக்கூத்தர்

முதற் குலோத்துங்கனுக்குப் பின் அரசாண்டவன் விக்கிரம சோழன் என்பவன். இவன் காலத்திலே ஒட்டக்கூத்தர் சோழமன்னர் அவைக்களத்திற் பாவலர் திலகராக விளங்கினர். அவர் செங்குந்தர் மரபிற்றோன்றிய சைவப்புலவர் ஆவர். அவர் அம்மரபின் பெருமை விளங்க ஈட்டியெழுபது என்னும் நூலினைப் பாடியுள்ளார். கலைமகளின் திருவருள் பெற்றுப் பல மக்களுடைய வெட்டுண்ட தலைகளை அவ்வவற்றிற்குரிய தலைகளிற் பொருந்தும்படி செய்தனரென்று ஒரு பரம்பரைக் கதை வழங்குகின்றது. அவர், சோழமன்னன் அவைக்கு வருவதற்கு முன், வெண்ணெய் நல்லூரிலே சடையப்ப வள்ளலின் தந்தையாகிய சங்கரன் என்பவருக்குத் துணையாக உதவிபுரிந்து வாழ்ந்தனரென்றும், புதுவையென்னும் ஊரின்கண் கொடையாளியாய் விளங்கிய காங்கேயன் என்பான்மீது நாலாயிரக்கோவை யென்னும் நூல் செய்தனரென்றுந்

தெரிகின்றது. விக்கிரம சோழன்மீதும், அவனுக்குப் பின்வந்த இரண்டாவது குலோத்துங்கன் இராச இராசன் என்னும் அரசன்மீதும் ஒட்டக்கூத்தர் தனித்தனி உலாப் பாடியுள்ளார். இரண்டாவது குலோத்துங்கன் மீது 'பிள்ளைத் தமிழ்மாலை' யொன்று இவர் பாடினர். இவர் பாடிய பிற நூல்கள் தக்கயாகப்பரணி, அரும் பகைத் தோள்ளாயிரம், இராமாயண உத்தரகாண்டம் முதலியன. இவரை இரண்டாவது குலோத்துங்க மன்னன் தன் ஆசிரியராகக் கொண்டிருந்தான். இவன் காலத்திலே புகழேந்திப் புலவரும் கம்பரும் சோழன் அவைக்களத்தை அணிபெறச் செய்து இவருக்கு எதிர் நின்றதாக வரலாறு கூறுகின்றது.

## புகழேந்திப்புலவர்

புகழேந்திப்புலவர் தொண்டைநாட்டிலே பொன் விளைந்த களத்தூர் என்ற இடத்திற் பிறந்த வைணவப்புலவர். இவர் பாடிய நளவெண்பாவில் முரணை நகர்ச் சந்திரன் சுவர்க்கி என்னும் சிற்றரசனைப் புகழ்ந்து பாடியுள்ளார். முரணைநகர் உறையூர்ப் பக்கத்திலிருந்தது. செஞ்சியர் கோனாகிய கொற்றந்தை மீது ஒரு கலம்பகமும் இவர் பாடியுள்ளார். இவர் தம் காலத்துப் பாண்டியமன்னர் அவைக்களத்திற்சென்று பரிசுபெற்று அரண்மனைப் புலவராய்த் திகழ்ந்தனரெனவும், பாண்டியன் மகளைச் சோழன் மணந்தகாலை அம்மகளோடு சோழன் அவைக்கு அனுப்பப்பட்டனரெனவுங் கூறுப. சோழன் தேவியொடு நிகழ்ந்த ஊடலைத்தீர்ப்பதில் இவர் ஒட்டக்கூத்தரினும் திறமை

வாய்ந்தவராய்த் திகழ்ந்தனரென்ப. வெண்பாப்பாடு வதில் இவர் இணையற்றவராதலால், 'வெண்பாவிற் புகழேந்தி'யென்று விதந்து ஓதப்பட்டார்.

## ஔவையார்

ஒட்டக்கூத்தர், புகழேந்தி இவர்கள் திகழ்ந்த பன்னிரண்டாவது நூற்றாண்டிலேயே ஔவையா ரென்னும் பெண்மணியும், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி முதலிய நீதிநூல்களையும், அசதிக் கோவை முதலிய சிறுகாப்பியங்களையும், அட்டாங்க யோகக்குறள் என்னும் ஞான நூலினையும் இயற்றியும், பெண்ணையாற்றில் ஒருபுறம் பாலும் ஒருபுறம் நீரும் செல்லப் பணித்தது முதலிய அற்புதங்கள் நிகழ்த்தியும், பெரும் புலவரொடு வாதாடி வெற்றியடைந்தும் பெரும் புகழொடு திகழ்ந்ததாக அறிகிறோம்.

## பொய்யாமொழிப்புலவர்

அவரோடு ஒத்த காலத்தவராய் பொய்யா மொழிப்புலவர் தஞ்சை வாணன் கோவையென்னும் அழகிய சிறுகாப்பியத்தை நாற்கவிராச நம்பியகப் பொருளிலக்கணத்திற்கு ஏற்புடையதோ ரிலக்கிய மாகப் பாடி யுதவினரென்ப. இதனுள் நானூற்றிரு பத்தைந்து துறைகள் வந்துள்ளன. இப்புலவர் சைவ ரென்று கருத இடமுண்டு. வழியின் கடுமையுரைக் கும் பாட்டு அதற்கு ஒருவாறு சான்றாகும்.

புராந்தகர் செஞ்சடை வெண்பிறை
போனுதற் புள்ளிமிழ்பூங்
குராந்தொடை மென்குழற் கொம்பினை
வேண்டிக்கொடி மூல்லைநீள்

மராந்தழு வுந்தஞ்சை வாணன்
வெற்பாவல்சி தேர்ந்திலஞ்சிக்
காரந்திரி கல்லதர் வாயெல்லிநீ
வால்கற் பலவே. (உ௬௪)

## சத்திமுற்றப் புலவர்

இவரும் இக்காலத்தெழுந்த புலவரே. திருச்சத்திமுற்றம் இவர் பிறந்த வூர். அது கும்பகோணத்துக்கு அருகிலுள்ளது. இவரை ஆதரித்தவர் சோழநாட்டுக் குடிதாங்கியென்னும் வள்ளல். இப்புலவர் வறுமையாற் பாண்டியன் அவைக்குச் செல்லக்கருதிக் கூடற்பதியினை யடைந்து ஒரு சத்திரத்திற் படுத்துக் கொண்டு தமது வறுமையை நினைந்து ஒரு நாரையைத் தம் மனைவிபால் தூது விடுப்பப் பாடிய பாட்டிற் பனங்கிழங்கினை அந்நாரையின் மூக்குக்கு உவமை கூறினமையை நகர சோதனைக்கு வந்த அரசன் கேட்டு, மிகமகிழ்ந்து அவர் வறுமையைத் தீர்த்தனன். அவர் நாரைவிடுதூதில்,

"நாராய் நாராய் செங்கா னாராய்
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கா னாராய்"

என்பது காண்க.

## கம்பர்

இப்புலவர் காலம் கி. பி. ஆயிரத்து நூற்றிருபது முதல் ஆயிரத்து நூற்றுத்தொண்ணூற்றேழுவரை யென ஆராய்ச்சிக்காரர்கள் கருதுகின்றார்கள். அவர் சோழநாட்டிலே திருவழுந்தூரிலே உவச்சர் குலத்

திலே பிறந்தவர். கம்பர் என்ற சொல் ஏகம்பன் என்பதன் முதற் குறையென்ப. அவர் குலத்தினர் காளி கோவிற் பூசனைக்குரியவர். வாணியன் தாதன் என்னும் ஒரு புலவன் கம்பரை இகழ்ந்துரைத்த பாட்டிலும் அதனைக் குறித்தது காண்க. இதனாற் கம்பர் சைவசமயத்திற் பிறந்தோ ரென்பது கருதப்படும். இவருடைய புதல்வன் பெயரும் அம்பிகாபதி என்ற சைவப்பெயரே. இவர் திருமாலைச் சிறப்பாகத் தமது வழிபடு கடவுளாய்க் கொண்டிருக்கலாம். இவரது இராமாயணத்தில் சிவபெருமானையும் விண்டுவையும் ஒரு படித்தாகவே புகழ்ந்துள்ளார். வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலென்னும் வேளாள குலதிலகர் இவரை வளர்த்து ஆதரித்துவந்தமையால், இவர் அவர்பால் அளவற்ற நன்றி பாராட்டியுள்ளார். இராமாயணத்துள் ஆயிரம் பாட்டிற்கொருமுறை அவ் வள்ளலைப் புகழ்ந்து பாடினார். இவர் சடையப்பவள்ளல் வண்மையைப் பின்வரும் செய்யுளிற் கூறியது காண்க.

விண்ணவர் போயபின்றை விரிந்தபூ மழையினாலே
தண்ணறுங் கானநீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன்
(வெண்ணெய்
அண்ணறன் சொல்லே யென்னப் படைக்கல மருளினானே.

சடையப்ப வள்ளலுக்கு சரராமன் என்ற ஒரு பெயருண்டு. கம்பர் 'அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும் உடையான் சரராமன் ஊர்' என்றது காண்க.

'ஆதித்தன் கம்ப'னென்று வருதலால், கம்பரது தகப்பனார் பெயர் ஆதித்தனென்று தெரிகின்றது. கம்பர் இயற்றிய ஏரெழுபதும் திருக்கை வழக்கமும் உழவினையும் வேளாளரையும் சிறப்பித்துக்கூறும் நூல்களாம். சடையப்பவள்ளல் முன் ஏரெழுபதை அரங்கேற்றிய காலை அதனைக்கேட்டுக் கொண்டிருந்த புதுவை வள்ளல் சேதுராயன் என்பாருக்கு விடந் தீண்டிற்று. விடந்தலைக்கேறுவதை அவர் மறைக்க முயன்றும், பிறர் அறிந்து கம்பரிடந் தெரிவிக்க, அவர் விடத்தை இறக்கியபோது கூறிய பாட்டு,

"ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—பூழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட"

கம்பர் தமது இளமையில் திருவொற்றியூரிலிருந்த வல்லி குரும்பை திருக்களந்தையின் என்னுங் காமக் கிழத்தியர்பால் ஈடுபட்டு இன்பவாழ்க்கை நடத்தினரென்று தெரிகின்றது. சோழமன்னன் கம்பரைப் பெரிதும் நன்குமதித்தும் சடையப்ப வள்ளல்பால் மிகுந்த பற்று வைத்ததின் காரணமாகக் கம்பர்பால் பொறாமைகொண்டு அவரிடம் பகைமை கொண்டனன். அவர் சோழன் அவையினின்றும் நீங்கிப் பாண்டிய மன்னர் அவைக்குச் சென்றாரெனவும், தமது அவை அவரின்மையாற் சிறப்பிழந்தமைகண்டு சோழமன்னன் மீட்டும் அவரை வரவழைத்துப்போற்றினன் எனவுங் கூறுப. பின்னரும் தமது மகள் காரணமாகவும் மகன் காரணமாகவும் சோழனுக்கும்

அவருக்கும் பகை உண்டாயது. இவரது மகன் அம்பிகாபதி என்பவன் சோழன் மகளைக் காதலித்ததற்காக வஞ்சித்துக் கொல்லப்பட்டான். சோழன் மகன் கம்பர் மகளை விழைந்து கைப்பற்ற நினைந்த காலை அவள் தனது கற்பைப் பாதுகாத்தற் பொருட்டுத் தற்கொலையுற்றனள். இனைய துன்பங்களாற் கழி பெருங் கவலையுற்று வடபாற் சென்று 'ஓரங்கல்' என்னுமிடத்து அரசுபுரிந்த பிரதாப ருத்திரன்பாற் சார்ந்து அவனை மகிழ்வித்துப் பரிசு பெற்று அவன் தமக்கு அடைப்பை தூக்கிவரச் சோழ நாட்டினை மீட்டும் அடையப்பெற்றார். அவன் ஆண்ட காலம் **12-வது** நூற்றாண்டின் பிற்பகுதி. அவன் நாட்டிலிருந்து மீண்டபின்னரே அவர் இராமாயணம் பாடத்துவங்கினார். அவர் இயற்றிய இராமாயணம் திருவரங்கப் பெரிய கோவிலின்கண் பங்குனி உத்திர நாளில் அரங்கேற்றப்பட்டது. சடகோபரந்தாதி யென்னும் நூலும் இவரியற்றியதே யென்ப. சரசுவதியந்தாதியும் இவருடையதே. சோழன் ஏவிய புலியை நரசிங்க தியானத்தால் இவர் கொன்றனரென்றும், பின்னர் அவன் கையம்பினால் இவர் உயிர் துறக்க நேர்ந்தபோது 'என் பாட்டம்பு நின் குலத்தைச் சுட்டெரிக்கு' மென்று வஞ்சினமுரைத்தாரெனவுங் கூறுப. இவர் இறுதிக் காலத்திலும் சடைய வள்ளல்பால் நன்றி பாராட்டி மொழிந்து பாடிய பாட்டொன்றுண்டு.

"ஆன்பாலுந் தேனு மரம்பைமுதன் முக்கனியும்
தேம்பாய வுண்டு தெவிட்டுமனந்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்ப
னிறக்கும்போ தேனு மினி"

இவரியற்றிய கம்பராமாயணம் வான்மீக முனிவரது நூலினின்று இராமகதையை மாத்திரமே தழுவிக்கொண்டது. அதனையும் பல இடங்களில் திருத்திச் செம்மைப்படுத்திக் கொண்டதாகும். இது வான்மீகத்தின் மொழிபெயர்ப்பன்று. இப்பெருங் காப்பியம் தமிழ்நாட்டிற் றோன்றாது போமாயின், வான்மீகத்தை வாசிக்குந் தமிழர் இராமனை ஒரு கடவுளாக வழிபட மாட்டார். முத்தமிழ்ச் சுவைகளும் பொருந்தி மக்களது நுண்ணிய இயற்கை முழுவதையும் படமெடுத்துக் காட்டினாற்போலக் காட்டவல்லதாய், உலக நெறிநிற்கு மாந்தற்கு நவில்தொறும் நவில்தொறும் வற்றாது முகிழ்த்தெழும்பாநயம் நிறைந்த செந்தமிழ்ப் பெருங்காவியம் இது. கம்பர் குறித்த நல்லிசைப்புலவர் பாவின் தன்மைகளனைத்தும் இவர் பெருநூலகத்தே யுள்ளன. இவர் கோதாவரியைக் கூறுமிடத்து அதனை நல்லிசைப்புலவர் பாவிற்கு ஒப்பிட்டனர்.

"புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்த புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்றொழுக்கமும் படிந்து சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா விரியினை வீரர் கண்டார்."

கம்பர் இராமாயணம் பாடியது கி. பி. 1185 என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றார்கள். கம்பர் மகனாற் பாடப்பட்ட அம்பிகாபதிகோவை யென்னும் ஒரு நூலும் உண்டு.

இரண்டாவது குலோத்துங்கனுக்குப்பின் இரண்டாவது இராச இராசனும், இரண்டாவது இராசாதி

ராசனும் அரசாண்டனர். சங்கரசோழன் உலா என்னும் நூலானது பன்னிரண்டாவது நூற்றாண்டின் இறுதியில் ஆண்ட இரண்டாவது இராசாதிராசன் மீது பாடிய நூலாக இருத்தல் கூடும். அவன் குமாரன் மூன்றாவது குலோத்துங்கமன்னன் கி.பி. 1188-முதல் 1216-வரை ஆண்டதாகத் தெரிகிறது. குலோத்துங்கன்கோவையென்னும் நூல் இவனைப்பற்றிப் பாடப் பெற்றதே.

## வள்ளல்கள்.

கடைச்சங்க காலத்திலே வேளிர்பலர் இரவலர்களுக்கு வரையாதியும் பெருவள்ளல்களாய்த் திகழ்ந்தமை போலக் கி. பி. பதினோராவது நூற்றாண்டு முதற் பதினைந்தாவது நூற்றாண்டுவரை, தொண்டை நாட்டினும் பிற இடங்களினும் வேளாளப் பெருஞ் செல்வர்கள்பலரும், பிறகுலத்தவருட் சிலரும் தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் ஆதரித்து வந்தனர். திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளல் கம்பரை ஆதரித்தமை யார்க்கும் வெளிப்படை. புதுவைச் சேதிராயன் என்பார் தம் மகனைப் பாம்பு தீண்டியதையும் பொருட்படுத்தாது கம்பராமாயணத்தைக் கேட்டு வந்தன ரென்ப. கம்பர் காலத்திலே திருவேங்கடமென்னும் ஊரிற்றிகழ்ந்த காளிம்பனென்னும் சிற்றரசன், பால் சுரக்கும் ஆயிரம் எருமைகளைப் புலவர்களுக்குப் பரிசளித்தன னென்று கேட்கப்படுகின்றது. தொண்டைநாட்டிலே திருநின்றையூரக் காளத்தியப்பரென்னும் வள்ளல், புலவரொருவர்க்கு ஈவதற்கொன்றுமில்லாமை கண்டு அரவின் புற்றினுட்

கை வைத்து உயிர்விடக் கருதியகாலை, அங்கிருந்த நாகப்பாம்பு நல்கிய மணியினைக் கொணர்ந்து புலவர்க்கே அதனைப் பரிசளித்த பெருந்தகையாராவர். வல்லம் அல்லது வல்லையென்னு மூரிற்றிகழ்ந்த காளத்தியப்ப வள்ளலும், திருக்குறுங்குடி நம்பி முதலிய புலவர்களுக்குப் பல கறவைப் பசுக்களும், பசு மேய்த்தற்கும் பால் கறப்பதற்கும் அதனைக் காய்ச்சுவதற்கும் வேண்டப்படும் வேலையாட்களையும் உடனுதவி வந்தனரென்ப. அறுபத்துமூன்று நாயன்மார் எவ்வாறு சிவனடியார்களைப் பணிந்து அவர்கள் வேண்டிய எவற்றையு மீவதிற் றலைநின்றனரோ அவ்வாறே இவ்வேளாளப் பெரியாரும் செந்தமிழ்ப் புலவர் விரும்பிய எத்தகைய பொருளையும் நல்கினரென்று தெரிகின்றது. குன்றையூர் எல்லப்பவள்ளல் தமது தலையையும், வீரூர் வைரப்பமுதலியார் தமது மனைவியையும் கொடுத்தனரென்ப. அயன்றைப்பதிச் சடையன் என்பவர் ஒரு புலவர்க்குத் தமது மனைவி சூலியாயிருந்தகாலத்து அவள் முதுகிற் சோறிட்டமையும், வல்லைக் கச்சியப்பன் என்பார் ஒரு புலவரால் மார்பினுதைக்கப்பட்டும் அவருக்குப் பல்லக்குப் பரிசளித்தமையும், கொங்குநாட்டு ஆனூர்ச் சர்க்கரை யென்னும் வள்ளல் தமது தாயின் முதுகின்மேல் ஒரு புலவன் ஏறிய காலை, அதற்குச் சினந்த தாயை நோக்கி என்னைப் பத்துமாதஞ் சுமந்தீர்களே இப்புலவரைச் சிறிது நேரஞ் சுமக்கக்கூடாதா வென்று கேட்டமையும், வண்ணார் மரபிற் பிறந்த புலவனொருவனைத் தாம் இகழவில்லை யென்று காட்டக் கொதிநெய்யிற் கையிட்டமையும், போரூர் வள்ளலொருவர் கொலையாளிகளிற்

றப்பி யோடி அடைக்கலம் புகுந்தபறையன் ஒருவனைக் காத்தற் பொருட்டு அவனோடுடனுண்டமையுந் தொண்டை மண்டல சதகங் கூறுகின்றது. பிற மரபினருட் கூவத்து நாரணன் என்னுந் தட்டான் ஒருவன், திருமயிலைத் தட்டான், மாவண்டூர்க் கோலன், நென்மலிவாழ் தச்சன் முதலியவர்கள் பெருவள்ளல்களாய்த் திகழ்ந்தனர். இவர் வரலாறுகளைத் தொகுத்து ஒரு நூல் தனியே இயற்றப்பட வேண்டும். இவ்வள்ளல் காலத்திற்குப் பின் சிற்றரசரான செமீன்தாரர்களும், சைவ ஆதீனத்தாரும் தமிழ்ப் புலவரைப் பேணின ரெனலாம்.

## அதிகாரம் ௫௭.

# உரையாசிரியர் காலம்.

---

தொல்காப்பிய உரையாசிரியர் காலம் கஉ - முதல் கச-வது நூற்றாண்டுவரையா மென்று கருதலாம். ஒட்டக்கூத்தர்காலமே பேராசிரியர் காலமாகும். தொல்காப்பிய முதல் உரையாசிரியர் இளம் பூரணர். அவர் பதினோராவது நூற்றாண்டின் இறுதியிலாவது, பன்னிரண்டாவது நூற்றாண்டின் தொடக்கத்திலாவது வாழ்ந்திருத்தல் கூடும். அவரே உரையாசிரியர் என்னும் பெயரால் வழங்கப்படுவர். இளம்பூரணரென்ற பெயர் முருகக் கடவுள தென்பர். அங்ஙனமாயின் இவர் சைவரா யிருத்தல் வேண்டும். பேராசிரியர் சைவ ரென்பது அவர் திருக்கோவையாருக் கெழுதிய உரையால்

விளங்கும். பேராசிரியர் தொல்காப்பியப் பொருளதி கார முழுவதற்கும் எழுதிய உரை இப்பொழுதுள் ளது. பேராசிரியர் குறுந்தொகைக்கும் சுருங்கிய உரை எழுதியுள்ளார். இளம்பூரணர் உரை தொல் காப்பிய எழுத்திற்கும் சொல்லிற்கும் பொருளதி காரத்தின் ஒரு பகுதிக்குமே அகப்பட்டுள்ளது. சேனாவரையர் பேராசிரியர்க்குப் பின்னிருந்து சொல் லதிகாரத்திற்கு மாத்திரமே உரை யெழுதினவர். அவரது உரையே பிறரது உரைகளினும் சிறந்ததாக ஆசிரியர் சிவஞான முனிவர் போற்றினர். ஆசிரியர் நச்சினார்க் கினியர் சேனாவரையரது சில கருத்துக்களை மறுத்ததால், அவர் அவர்க்குப் பின்னிருந்தவராவர். அவரே மிகுந்த பண்டை நூல்களுக்கு உரை யெழு தினவர். சிந்தாமணி, பத்துப் பாட்டு, கலித்தொகை, குறுந்தொகையில் இருபதுபாட்டு, தொல்காப்பியம் என் பவற்றிற்கு அவர் எழுதிய உரைகள் இப்பொழுதும் நின்று நிலவுகின்றன. இவர் பாரத்துவாச கோத்திரத் தைச்சேர்ந்த அந்தண ரென்றும், மதுரைவாசி யென் றுங்கூறுப. திருக்குறளுக்குத்,

> தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
> பரிதி பரிமே லழகர் திருமலையர்
> மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்கு
> எல்லை உரைசெய்தார் இவர்.

என்றவாறு கண்ட, பத்து உரைகளுள் 'நச்சர்' உரை யென்பது நச்சினார்க்கினியர் உரை என்று கூறுவாரும் உளர்.

இப்பொழுது பெருவழக்கிற்ருய் நிகழ்வது பரிமேலழகர் உரையாகும். இவரே பிற உரைகாரர்களுட் பிற்பட்டவர். பரிபாடலுக்கும் இவர் உரை யெழுதியுள்ளார். இவர் காஞ்சிபுரத்திற் பிறந்து வளர்ந்த ஒரு வைணவ ஆசிரியர். இவரைச் சில சான்ருேர்கள் தங்களவ ரென்றும், திருநெல்வேலிச் சில்லாவைச் சார்ந்தவ ரென்றும் வாதாடுகின்ருர்கள். இவர் நூலினுலே இவர் ஆரியக் கொள்கையின ரென்பது நன்கு தெளியப்படும். இவர் பதினென்காவது நூற்ருண்டின ரென்னலாம். சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லாருரை பொருணயத்தோடு சொல்வளப்பங்களமைந்துள்ளது. வடமொழிக்கண் பிரமசூத்திர பாடியங்கள் ஏற்பட்ட காலத்தை ஒட்டித் தமிழில் தொல்காப்பிய முதலிய பெருநூல்களுக்கு உரைகள் ஏற்பட்டன. பரிமேலழகருக்குப் பின் சிவஞான முனிவர் ஒருவரே பெரிய உரையாசிரியராகத் திகழ்ந்தனர்.

## வைணவ உரையாசிரியர் காலம்.

பதினென்காவது பதினைந்தாவது நூற்ருண்டுகளிலே வைணவ ஆசிரியன்மார் நாலாயிரப் பிரபந்தத்திற்கு விரிந்த உரைகளை வடமொழி மிகுதியுந் தென்மொழி சிறிதுங் கலந்த மணிப்பிரவாள நடையில் இயற்றின காலந்தொட்டுத் தமிழிலே வடசொற்கள் பெருவெள்ளமாகப் பரவலாயின. இக்காலத்திற்குச் சற்று முன்னும் பின்னுந் தோன்றிய சைவ வைணவ ஏகான்மவாதச் சமய நூல்களானும், வில்லிபாரத முதலிய காவியங்களானும், அருணகிரிநாதர் திருப்புக

மூனும் தமிழிற்புகுந்த வடசொற்களுக்கு அளவில்லை. இக்காலத்திற் போல வடமொழிக் கலப்பு இதற்கு முன்னும் பின்னுமில்லையெனலாம். இற்றை நாளிலே யும் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் பிராமணர், மிகுந்த வடசொற்களைப் புகுத்தி வருகின் றார்கள். இது தடைப்படுதற்குரிய முயற்சிகளைத் தமிழ் வாணர் கைக்கொள்ளவேண்டும்.

ஆழ்வார்கள் காலத்திற்குப்பின் நம்மாழ்வாரது திருவாய்மொழியினை யாவருங் கைக்கொள்ளத்தக்க முறையிற் பாராயணத்திலும் ஆட்சியிலும் வைத்தவர் நாதமுனிகளென்பார். இவர் வீரநாராயணத் திருந்த வைணவர். இவர் காலம் கங்கைகொண்ட சோளேச்சரத்திற் சோழமன்னர் ஆளத்தொடங்கிய பின்னரென்பது இவர் வரலாற்றால் விளங்குகின்றது. இவர் காலத்தைக் கலி 3684 என்று குரு பரம்பரை நூல் கூறுவது தவறாகும். கங்கைகொண்ட சோளேச் சரத்தில் சோழராட்சி கி. பி. 1011-க்குப் பின்னாக லின், இவர் காலம் பதினோராம் நூற்றாண்டின் முற் பகுதியேயாம். அதன் பிற்பகுதியென்பாரு முளர். அவர்கள் 1063-முதல் 1117-வரை அவர் காலமென்ப. யோக ரகசியம், நியாயதத்துவ முதலியன இவரியற்றிய நூல்கள். இவர் மாணாக்கர் உய்யக்கொண்டா ரென் பவர். அவர் மாணாக்கர் மணக்கால் நம்பி யென்பவர். அவர் மாணவர் வீரநாராயணபுரம் ஆளவந்தார். இவர்க்கு யமுனைத்துறைவரென்ற பெயருமுண்டு. இவர் மாணவர் பெரிய திருமலைநம்பி, திருக்கச்சிநம்பி,

திருக்கோட்டியூர்நம்பி முதலிய பலர். நம்பி யென்ற அடைமொழி குலத்தைக் குறிப்பதன்று. திருக்கச்சிநம்பி சாத்தாத வகுப்பினர்; பிராமணரல்லர். அவர்பால் உடையவராகிய இராமாநுசர் மிகுந்த அன்பு காட்டினர். ஆளவந்தார்க்குப்பின் இராமாநுசரே வைணவப் பெருந் தலைவராய் விளங்கினர். இவர்க்கு எம்பெருமானாரென்ற பெயருமுண்டு. இவர் கலி 4118-க்குமேல் செங்கற்பட்டுச் சில்லா சிபெரும்பூதூரிற் பிறந்தவரென்ப. (குரு பரம்பரையிற் குறித்த காலம் பிழையற்றதென்று கூற இடமில்லை. நாதமுனிகள் காலம் கலி. 3684-ம், அவர்க்கு நான்கு தலைமுறைக்குப்பின் வந்த இராமாநுசர் காலம் 4118-ம் ஆக விருத்தல் பொருத்த மில்லாததே.) நாதமுனிகள் காலம் பதினோராவது நூற்றாண்டும் இராமாநுசர் காலம் பன்னிரண்டாவது நூற்றாண்டுமாகக்கொள்ளுதல் பொருத்தமாகும். ஆதலால் இராமாநுசர் ஏறத்தாழ கி. பி. 1118-க்குப்பின் தோன்றியவரென்னலாம். சோழமன்னர் சைவராயிருந்தமையால், இராமாநுசரைச் சமயச் சார்பாகத் துன்புறுத்தினர் போலும்! உடையவர் வைணவ சமயத்திற்கு ஆசிரிய பரம்பரை வகுப்பான் எழுபத்திநாலு சிம்மாசனாதிபதிகளை நியமித்தனரென்ப. உடையவர் மாணவராகிய திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் திருவாய்மொழிக்கு ஆயிரப்படியென்னும் உரை இயற்றினர். உடையவர் மாணாக்கருட் சிறந்தவர் கூரத்தாழ்வாரென்பவர். கூரத்தாழ்வார் மாணாக்கர் திருவரங்கத்தமுதனாரென்பார். இவர் இராமாநுச நூற்றந்தாதி

யென்னுஞ் சிறுகாப்பிய மியற்றினர். கூரத்தாழ்வார் குமாரர் பராசரபட்டர் என்பவர். இவர் சீபட்டரென வுங் கூறப்படுவர். பகவத்கீதையைத் தமிழில் விருத்தப்பாவா லியற்றியவர் இவரின் வேறுவர். இவர்க்கு வேதாந்தாசாரியர் என்ற பெயருமுண்டு. இவர் 'சகத்திரநாம பாடிய' முதலிய நூல்களியற்றியவர். இவர் சரித்திரத்தால் இவர் திரிபுவன வீரதேவர் காலத்திருந்தவ ரென்று தோன்றுகிறது. அம்மன்னன் காலம் கி. பி. 1267-க்கு மேலாதலின், இவர் பதின்மூன்றும் நூற்றுண்டினிறுதிவரை திகழ்ந்தவராவர். பட்டரது மாணுக்கர் நஞ்சீய ரென்பார். இவர்க்குச் சீரங்க நாதரென்பது இயற்பெயர். இவர் திருநாராயண புரத்தினர். இவர் திருவாய்மொழி உரை ஆயிரப்படி யென்பதும், பெரிய திருமொழி உரையு மியற்றியவர். இவர் மாணுக்கர் நம்பிள்ளை யென்பார். இவர் நம்பூரிற் பிறந்தவர். இவருக்கு வரதராசரென்பது இயற்பெயர். இவரியற்றிய நூல்கள் திருவாய்மொழி உரை, ஒன்பதிறுயிரப்படி, திருப்பள்ளியெழுச்சி உரை, திருவிருத்த உரை, பெரிய திருமொழி உரை என்பன.

இவர் மாணுக்கர்கள் பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பின்பழகிய பெருமாள் சீயர், ஈயுண்ணி மாதவப்பெருமாள் என்பவர்கள். இவர்கள் காலத்திலே பிள்ளையென்ற பட்டம் அந்தணர்க்கும் வழங்கிற்று. பெரியவாச்சான் பிள்ளை நாலாயிரப் பிரபந்த உரை 24000 படியியற்றியவர். கத்தி

யத்திரய உரை, பாசுரப்படி, இராமாயணம் முதலியனவும் இவர் நூல்களே. இவர் காலம் 15-வது நூற்றாண்டின் முற்பகுதி. இவர் தென்கலையாரார் பெரிதுங் கொண்டாடப்படுபவர்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை யென்பவர் திருவாய்மொழிக்கு 36000 படி உரை இயற்றியவர். இவரோடு ஒத்த காலத்தவராகிய கிடாம்பியூர் அப்புள்ளாரது மாணாக்கரே வேதாந்த தேசிகரென்னும் வடகலையாசிரியர். இவர் திருக்காஞ்சிபுரத்திற் பிறந்தவர்; திருவேங்கடமுடையானென்ற பிள்ளைத் திருநாமமுடையவர். இவர் இல்லறம் நடாத்தித் திருவகீந்திரபுரமென்னும் திருப்பதியில் நோன்பிருந்து, பெரிய திருவடியைக் காணப்பெற்று அவர்பால் அயக்கிரீவ மந்திரோபதேசம் பெற்றவரென்ப. இவர் பல அற்புதங்களியற்றினரென்ப. பாதுகா சகத்திர மென்னு நூலியற்றி அழகிய மணவாள நயினாரை வென்றனரென்ப. இவர் காலத்திலே வித்தியாரண்யர் பஞ்சதசப் பிரகரண மியற்றினார். வித்தியாரண்யரையும் இவர் வென்றனரென்ப. இவர் நூறாண்டு உயிர் வாழ்ந்தவர். இவர் வடமொழியில் கூ0-நூல்களியற்றினார்; தமிழிலே இருபத்து நான்கு நூல்களியற்றியுள்ளார். இவர் சர்வக்கிய சிங்கப்ப நாய்க்கனுக்கு அருள்செய்தார்; காஞ்சிபுர வரதராசப் பெருமாளது பெருமையை அத்திகிரி மான்மியம் என்பதில் வெளியிட்டனர். இவர் பாடிய தோத்திர நூல்கள் அடைக்கலப் பத்து, நவரத்தினமாலை, திருச்சின்னமாலை, என்பன. இவர் பகவத் கீதையின் சாரத்தைக் 'கீதார்த்த சங்கிர

கம்' என்னும் நூலில் இனிது விளக்கினர். இவர் பரமதபங்கம் என்னும் நூலில் புறச்சமயங்களை மறுத்தனர். நாடோறும் செய்தற்குரிய கடமைகளை சீ வைணவ தினசரி என்பதில் வரைந்தனர். ஆகாரணீயம் என்பதும் அதன் சார்பாயதே. இன்னும் அவர் செய்த நூல்கள் அர்த்த பஞ்சகம், பிரபந்தசாரம், மும்மணிக்கோவை, துவயச்சுருக்கு, திருமந்திரச் சுருக்கு, பரமதசோபானம், சரமசுலோகம், அமிர்தரஞ்சினி, அமிர்தாசு வாதினி, பதினேழு ரசசியம்,பன்னிருநாமம், அதிகாரசங்கிரகம் என்பன.

பின் பழகிய பெருமாள் சீயரென்பவர் குருபரம்பரை நூல் வகுத்ததாகக் கூறுப. ஈயுண்ணி மாதவப் பெருமாள் முப்பத்தாறுயிரப் படியென்னும் உரையை நம்பிள்ளையாற் பெற்றனரென்ப.

வடக்குத் திருவீதிப் பிள்ளையின் மக்கள் பிள்ளை லோகாசாரியாரும், அழகிய மணவாள நயினுரென்பவருமாவர். இவர்கள் காலத்தில் துருக்கர் தொந்தரவு தென்னுட்டில் ஏற்பட்டு விட்டது. பிள்ளை லோகாசாரிய ரியற்றிய நூல்கள். அட்டாதசரகசியம் என்னும் பதினெட்டுத் தத்துவ நூல்களாம். அவற்றுட் சிறந்தது சீவசனபூடணமென்பர். பிற நூல்கள் தத்துவசேகரம், தத்துவத்திரயம், தனிப்பிரணவம், தனித்துவயம், தனிசரமம், நவிதசம்பந்தம், நவரத்தினமாலை, பரந்தபடி, முமுட்சுப்படி, யாத்ருச்சிகபடி, சீயப்பதிபடி, பிரபந்ந பரித்திராணம், பிரயோகசேகரம், சாரசங்கிரகம், அர்ச்சவதி, அர்த்த பஞ்சரம், சம்சார சாம்பிராச்சியம்

என்னுமிவை. அழகிய மணவாளப் பெருமாணயினர் வேதாந்த தேசிகரோடு, பகைத்து, அவர் பொறுமை கண்டு அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டவ ரென்ப. இவர் செய்த நூல்கள் திருப்பாவை உரை ஆறாயிரப்படி, "அமலனாதிப் பிரான்" "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்னும் இரண்டிக்கும் உரை, மாணிக் கமாலை, ஆசாரிய இருதயம், அருளிச்செயல் இரகசி யம் என்பன.

பிள்ளை லோகாசாரியர் மாணவர் பலருள் விளாஞ் சோலைப் பிள்ளையென்பார் திருவனந்தபுரத்திருந்தவர். இவர் சத்தகாதையென்னும் நூலியற்றினர். பிள்ளை லோகாச்சாரியரது மற்றொரு மாணவராய அண்ணர் என்பாரது மகன் திருவாய்மொழிப் பிள்ளை. இவர்க்கு சீசைலேசரென்ற பெயருமுண்டு. இவரே மணவாளமுனிகட்கு ஆசிரியர். மணவாள முனிகள் காலம் 16-ம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இவரே பெரிய சீயர் எனப்படுபவர். இவரே தென்கலையார்க் குத் தலைவர். இவர் பாண்டி மண்டலத்திற் சிக்கிற் கடாரமென்னு மூரிற் பிறந்து வளர்ந்து கலைபயின்று அரசவேலையிலமர்ந்து பின் துறவற நெறி நின்றவர். இவர்க்கு யதீந்திரப் பிரணவர் என்ற பெயருமுண்டு. இவர் முப்பத்தாறாயிரப் படியைப் பலர்க்கும் போதித் தவர். இவர்தாம் வானமாமலைச்சீயராக அழகிய வரதர் என்பாரை நியமித்தவர். இவரது நூல்கள்:— உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, பிரமேய சாரம், ஆர்த்திப் பிரபந்தம் முதலியன இவரது பாட்டு நூல்கள். கீதாதாத்பர்யதீபம், திருவாராதனைக்கிரமம்,

விரோதிபரிகாரம் என்பன இவரது உரைநடை நூல்கள். இராமாநுசநூற்றந்தாதி உரை, சப்தவியாக்கியாநம், சிவசனபூடண உரை, ஞானசார உரை, தத்துவத்திரய உரை, பெரியாழ்வார் திருமொழி உரை, மூமுட்சுப்படி உரை என்னும் பேருரை நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இவரது மாணுக்கர் பலருள் பரவத்துபட்ட ரென்பா ரொருவர். அவர் மாணுக்கர் பிள்ளைப்பெருமாளையங்காராவர். அவர்க்கு அழகிய மணவாள தாசரென்ற பெயருமுண்டு. சீயர் மரபிற் பிள்ளை லோகார்ய சீயர் என்பார் பல வைணவ நூல்களுக்கு உரை வகுத்தனர். அவரியற்றிய நூல்கள் இராமாநுச திவ்ய சூரிசரிதை, யதீந்திரப்ரவ பிரபாவம் என்பவற்றோடு உபதேச இரத்தினமாலை, இராமாநுச நூற்றந்தாதி, ஆர்த்திப் பிரபந்தம், நாலாயிரத் தனியன் என்பவைகளுக்கு உரைகளுமாகும். வைணவ உரையாசிரியர் பரம்பரை இதனோடு ஒரு நிலைப்பட்டது.

## அதிகாரம் க௮.

# தத்துவ நூல்கள்.

---

பதின்மூன்றும் நூற்றுண்டிலே சமய நூல்கள் சிறப்பாகத் தோன்றுவவாயின. மெய்கண்டதேவரது சிவஞானபோதம் சிறந்தொரு முழுச் சைவ சித்தாந்தப் பெருமறையாதலின், அதுவே பிற்றோன்றிய சைவ சித்தாந்த முதனூல்களுக்கெல்லாம் அடிப்படையாயிற்று. 13-வது நூற்றுண்டு முதல் 15-வது நூற்றுண்டு வரை தோன்றிய வைணவப் பேருரை நூல்

களும் தமிழ்நாட்டிலே வட சொற்பெரு வெள்ளத்தைப் பெருக்கின. ஏகான்மவாத நூல்களும் வட சொல் வழக்கினை மிகுதிப்படுத்தின. கரு-வது நூற்றாண்டிலே பல சைவாதீனங்களும், வைணவ மடங்களும் தமிழ்நாட்டிற் பல விடங்களிலும் தோன்றிச் சமய நூற்பயிற்சியைப் பரவச் செய்தன. பதினான்காவது நூற்றாண்டு முதல் தலபுராணங்கள் காப்பிய நயங்களோடு தமிழில் எழுந்தன. பதினாறு பதினேழாவது நூற்றாண்டுகளில் பலவகைச் சிறு காப்பியங்களும், ஞான நூல் உரை நூல்களும், சில தலபுராணங்களும் பெருகி வளர்ந்தன. சைவ சமயக் கிளர்ச்சி பதினேழாம் நூற்றாண்டில் இமயம்வரை பரவிற்று. இந்நூற்றாண்டில் மகமதியப் பாவலரும் தமிழை வளர்த்தனர். பதினெட்டாம் நூற்றாண்டிலே சில இலக்கண நூல்களும், சதகமென்னும் சிறு காப்பியங்களும் தோன்றின. வீரசைவக் கருத்துக்களும் தமிழ்நாட்டிற் பரவின. மேலை நாட்டிலிருந்து வந்த பெசுக்கி (Beschi) என்னும் பாதிரியாரால் கிறித்துவ சமயமும் தலைகாட்டிற்று. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், சித்தாந்தமாபாடியர் (சிவஞானபோதத்தின் பேருரை) தோன்றினமையால், சைவ சித்தாந்தம் சிறப்புற்றோங்கிற்று. இசை நாடகங்களும் இந்நூற்றாண்டிலே சிறந்து விளங்கின. பத்தொன்பதாவது நூற்றாண்டிலே சைவ வைணவ ஏகான்மவாத கிறித்துவ உறழ்ச்சி தழைத்தது. ஆங்கிலச் சார்பும், உரைநடை நூல்களும், அச்சுமுயற்சியும், பல்கலைக்கழகத்தார் தமிழ் வளர்ச்சியும் ஏற்பட்டன.

ஏகான்மவாத ஆசிரியர்களுள் தத்துவராய ரென்பார் பதினைந்தாவது நூற்றாண்டிலே சோழநாட்டிலே வீரைநகரிலே பிறந்த பிராமணர். இவர் சொரூபானந்த ரென்னுந் துறவியின் மாணாக்கர். இவர் அஞ்ஞைவதைப்பரணி, மோகவதைப்பரணி யென்னும் அழகிய பாட்டு நூல்களில் அறியாமையையும் அவாவையுஞ் செற்று வெற்றிகொள்ளும் வீரத்தைப் புனைந்துரைத்தார். இவரது பாடுதுறை யென்பது சிறுமகார்க்கும் இன்பமீயவல்ல பல்வகைப் பாவினங்களைக்கொண்டுள்ளது. இவரது சசிவர்ண போதம் என்பது ஏகான்வாதத்தைப் போதிக்கும் தத்துவ நூல். இவர் செய்த சிறு நூல்கள் பல. அவை குறுந்திரட்டு, பெருந்திரட்டு முதலியனவாக இருபத்துமூன்றுள்ளன. தத்துவராய முனிவரென்பார் ஈசுரகீதை, பிரமகீதை என்னும் நூல்களை எக்காலத்திற் செய்தாரென்று விளங்கவில்லை. அவையும் ஏகான்மவாதச் சார்பான தத்துவ நூல்களே.

சைவ சித்தாந்த நூல்கள்:—சங்கரர், இராமாநுசர் முதலிய வடமொழி ஆசிரியரது பாடியங்கள் மிக்கு வழங்கிய காலத்தே சைவ சித்தாந்த விளக்கம் தென்னாட்டிலே குறைவுற்றிருந்தது. அக்குறையை ஒழித்தற் பொருட்டுப் பதின்மூன்றாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் திருவெண்ணெய் நல்லூரில் அச்சுதகளப்பாள ரென்னும் வேளாள குலத் தலைவராய்ச் சடையப்பவள்ளலின் மனைவி வழித் தோன்றிய உறவினராய் மெய்கண்ட தேவர் பிறந்தார். அவர் 'சிவஞான போதம்' என்னும் சைவ சித்தாந்தத் தலைமணி நூலை

இயற்றியருளினர். அது பன்னிரண்டு சூத்திரங்களை யும், எண்பத்தொரு வெண்பாக்களையும் உடையது. அதற்கு முன்னரேயே திருவுந்தியார், திருக்களிற்றுப் படியா ரென்னுஞ் சைவ சித்தாந்தச் சிறப்பு நூல்கள் இயற்றப் பட்டன. திருவுந்தியார் திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனாரால் கி. பி.1148-ல் இயற்றப்பட்டது. உய்யவந்தாரது மாணவர் ஆளுடைய தேவ நாயனார். அவருடைய மாணாக்கர் திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார். அவரியற்றிய நூல் திருக்களிற்றுப் படியார். அதன் காலம் கி. பி. 1178. இவ்விரண்டு நூல்களும் அநுபவ நூல் என்று கூறப்படும். இவை தமிழ்ப் போக்கில் உள்ளன. திருக்களிற்றுப் படியார் அறு பத்துமூன்று நாயன்மார் அற்புதநிகழ்ச்சிக்குக் காரண மான வல்வினை மெல்வினையைப் பற்றிக் கூறுவதுடன் ஆசிரியர் திருவள்ளுவரது குறள்களிற் சிலவற்றை மேற்கோளாகக்கொண்டு அவற்றின் பொருளை இனிது விளக்குகின்றது. ஓர் உதாரணம்,

'சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற்
சார்புணர்த லேனே தியானமுமாஞ்—சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று"

அன்பின் சிறப்பைப் பற்றிக் கூறும் செய்யுள் வருமாறு:—

"அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழிபு—மன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாஞ்
சாற்றும் பழமன்றே தான்"

ஆசிரியர் மெய்கண்ட தேவரது சிவஞானபோதம் முப்பொருளின் உண்மையையும் இலக்கணத்தையுங் கூறும் பொதுப் பகுதியும், வீட்டிற்குரிய ஞான நெறியினையும் அந்நெறியின் நின்றோர் பெறும் பயனையுங் கூறுஞ் சிறப்புப் பகுதியையு முடைய முழுமுதல் நூலாகும்.

திருவண்ணாமலையில் மூன்றாவது இராசஇராசன் ஆட்சியில் பதினாறாவது ஆண்டில் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவர் என்பாரால் விடப்பட்ட தருமப் பொருள் சாசனமொன்று கிடைத்துள்ளது. மூன்றாவது இராச இராசன் காலம் கி. பி. 1216 முதல் 1248 வரை ஆகும். ஆகவே இச்சாசனத்தின் காலம் கி. பி. 1232 ஆகும். ஆகவே அதற்கு முன்னமேயே மெய்கண்டார் வாழ்ந்திருந்தன ரென்பது தெளிவு. அவர் சிவஞானபோத மியற்றிய காலம் 1215 ஆதல் கூடும். ஆசிரியர் மெய்கண்டார்க்கு நாற்பத்தொன்பது மாணாக்கர்கள் இருந்தார்கள். அவருள் முதல் நின்றவர் மெய்கண்டாரது தந்தையார்க்குக் குல குருவாகிய திருத்துறையூர் அருணந்திசிவாசாரிய ரென்னும் ஆதி சைவரே. இவர் சிவஞான சித்தியா ரென்னும் வழி நூலையும், இருபாஇருபஃது என்னும் சைவ சித்தாந்தச் சிறு நூலினையும் இயற்றினார். இவருடைய மாணாக்கர் மறைஞான சம்பந்தர். மறைஞான சம்பந்தரின் மாணாக்கர் உமாபதி சிவாசாரியார்.

இவர் தில்லையிலே வாழுகின்ற திருவுடை யந்தணர் மரபைச் சார்ந்தவர். இவர் சிவப்பிரகாச மென்னுஞ் சிவஞானபோதச் சார்பு நூலையும், கோடிக்கவி,

உண்மைநெறி விளக்கம், நெஞ்சுவிடு தூது, வினா வெண்பா, திருவருட்பயன், சங்கற்ப நிராகரணம், போற்றிப் பஃறொடை என்னும் பிற ஏழு சித்தாந்த நூல்களையும் இயற்றியருளினார். கோயிற் புராணம், சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருப்பதிகக் கோவை முதலியனவும் இவரால் இயற்றப்பட்டன என்ப. வடமொழியிற் பவுட்கரம் என்னும் உபாகமத்திற்கு இவர் இயற்றிய விரிவுரை ஒன்றுண்டு. இவர்தாம் சங்கற்ப நிராகரணம் இயற்றிய காலத்தைத் தெளிவாகக் குறித்துள்ளார். "ஏழஞ்சு இருநூறு எடுத்த வாயிரம்" என்றதனால் அக்காலம் சாலிவாகனன் ஆண்டு 1235-ஆகும். அது கி. பி. 1313-க்கு நேர். இவரது ஞான பரம்பரையிலே திருவாவடுதுறை யாதீனத்து முதல் தலைவராகிய நமச்சிவாய தேசிகர் நான்காவதாக நின்றவர். ஆசிரியர் மெய்கண்டாரின் மற்றொரு மாணவரது ஞானபரம்பரையில் வந்த ஞானசம்பந்த தேசிகரே தருமபுரவாதீனத்தை நிறுவியவராவர். மெய்கண்டாரின் இன்னொரு மாணவர் மனவாசங் கடந்தா ரென்பவர் கி. பி. 1245-ல் 'உண்மை விளக்க' மென்னும் சைவசித்தாந்த நூலை அருளிச் செய்தார். இதுகாறும் கூறிய சைவசித்தாந்த நூல்கள் பதினான்கும் மெய்கண்ட சாத்திர மெனப்படும். அவற்றைத் தொகுத்துரைக்கும் பாட்டு வருமாறு:

"உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று."

## சைவ மடங்கள்.

### திருவாவடுதுறை மடம்.

பதினான்காவது நூற்றாண்டின் தொடக்கத்தில் உமாபதி சிவாசாரியார் சைவசித்தாந்தத் தலைவராய்த் திகழ்ந்தனர். அவர் முதன் மாணாக்கர் அருணமச்சிவாய தேசிகர். அவர் திருவாவடுதுறையி லிருந்த சித்தர் சிவப்பிரகாசர்க்கு ஞான உரை பகர்ந்தார். அவர் மூவலூரில் வேளாளகுல திலகமாய்ப் பிரமசரியத்திற் றலைநின்ற நமச்சிவாய மூர்த்திகளுக்கு ஞான முரைத்தார். இவரே திருவாவடுதுறை யாதீனத்தை நிலைநாட்டினர். இவரிடத்தில் அருளுரை பெற்ற சிவப்பிரகாசர் சிதம்பரத்திலே கூத்தப்பெருமான் வழிபாட்டிற்கு வைணவர்களால் விளைந்த இடையூற்றை நீக்கி ஆங்கு வீற்றிருந்து நிட்டை கூடினர்.

நமச்சிவாயமூர்த்திகள் பின்னர் மறைஞான தேசிகரென்பார்க்கு ஞானத்தை நல்கினர். அவர் சத்திநிபாதத் துத்தமராய் நிட்டையிலே வீற்றிருந்தார். பின் அவரால் ஆசிரிய பரம்பரை நிலைபெற இடமின்மையால் இவர் அம்பலவாண தேசிகருக்கும் தெக்கணாமூர்த்தி தேசிகருக்கும் ஆசிரியநிலை யருளினர். அக்காலத்தே பதினைந்தாவது நூற்றாண்டு தொடங்கியிருத்தலாகும். தெக்கணாமூர்த்தி தேசிக ரியற்றிய தசகாரியம், உபதேசப் பஃறொடை யென்னு மிரண்டு ஞான நூல்களும் கி. பி. கரு-வது நூற்றாண்டிற் றோன்றியவனவாகக் கருதலாம். அவர் சின்னப்பட்டத்தில்

வீற்றிருந்தபோதே சிவனடி சேர்ந்தனர். பெரிய பட்டத்தி லிருந்த அம்பலவாண தேசிகர் தசகாரியம் சன்மார்க்க சித்தியார், சிவாக்கிரமத் தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாய நிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டை விளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை என்னும் பத்துநூல்களையருளிச் செய்தார். தசகாரியமென்பது வீடெய்துமுயிர்கள் அறியற்பாலனவாய தத்துவரூபம், தத்துவ தெரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதெரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதெரிசனம், சிவயோகம், சிவபோகம், என்னும் பத்துமாம். அவர் இவற்றைப் பலப்பலவாறு விரித்துரைத்தனர் ஏகான்மவாதிகளும் இப்பெயருடைய நூல்களியற்றியுள்ளார். மேற்கூறிய நூல்கள் சைவாதீனத் தலைவர்களாகிய பண்டார சந்நிதிகளாற் செய்யப் பெற்றமையால், பண்டாரசாத்திரமென்று பெயர் பெறுவன இவற்றோடு ஈசான தேசிகரியற்றிய தசகாரியமும் பின் வேலப்பதேசிகரியற்றிய பஞ்சாக்கரப் பஃறொடையுஞ் சேர்ப்பின், பண்டாரசாத்திரம் பதினான்காதல் காண்க. 'இவை மெய்கண்டசாத்திரம் பதினான்கிற்குந் துணை நூல்களாகத் திகழ்வன. மேற்கூறிய அம்பலவாண தேசிகரது மாணவருள் ஒருவர் வைணவப் பிராமணராயிருந்து சிவசமயம் புகுந்து தீக்கை பெற்று உலகுடைய நாயனாரென்ற திருப்பெயருடன் விளங்கினர். அவர் தமது தேசிகர்மீது செய்தருளிய விருத்தங்கள் பத்தும் நயமிக்கன. சிவபுரம் பிள்ளையென்பாரும் அம்பலவாண தேசிகர்மீது புகழ்மாலை செய்தனர்.

தருமபுர வாதீனத்தைச் சார்ந்த சம்பந்த சரணாலய சுவாமிகள் மைசூரரசரான் மதிக்கப்பெற்றவர். அவர் அரசர் வேண்டுகோட் கிணங்கிக் கந்தபுராணச் சுருக்கமென்னும் நூலைச் செய்யுளா லியற்றினர். அவர் மைசூரரசர்பாற் பெற்ற பெருநிதியினைக் குருலிங்க சங்கமங்கட்கெனவே வைத்தனர். அடியார் குழாங்கள் செய்யுந் தொழிலைப்பற்றி இவர் கூறிய பாட்டு நினைவு கூரத்தக்கது.

ஆய்வார் பதிபசு பாசங் களினுண்மை யாய்ந்துகொண்டு
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஒய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன்றி ரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப்பிர காசநற் றொண்டர்களே.

திருவாரூரிலிருந்த ஞானப்பிரகாச ரென்னும் பெரியவரே தருமபுரவாதீனத் தலைவர். ஆறாவது பட்டத்திலிருந்த திருஞான சம்பந்த தேசிகர் திருவடியைச் சார்ந்தவர் சம்பந்த சரணாலய ரென்றறிக.

துறைசை யாதீனத்திற் பதினோராவது பட்டத்திலிருந்த பின்வேலப்ப தேசிகர் காலத்திலே சிவஞான முனிவர் திகழ்ந்தவராவர். அக்காலத்திலே சின்னப்பட்டத்திலும் வேலப்ப தேசிகரென்னும் திருப்பெயருடையவ ரொருவரிருந்தனர். (இப்பொழுதுள்ள துறைசை யாதீனத் தலைவர் கசு-வது பட்டத்திலுள்ளவர் போலும்) பெரிய பட்டத்திலிருந்தவர் திருப்பறியலூர்ப் புராணம் பாடினர். சின்னப்பட்டத்திலிருந்தவர் பஞ்சாக்கரப்பஃறொடை, ஞானபூசாவிதி, மரபட்டவணையென்னும் நூல்களியற்றி யருளினர்.

தருமபுர வாதீனம்:— உமாபதி சிவாசாரியர் மாணாக்கருள் ஒருவர் மச்சுச் செட்டியார் என்பவர். இவர் சீகாழிச் சைவவேளாளர். இவரியற்றிய நூல் ஞானபூசைத் திருவிருத்தம். இவர் உலகை நோக்காது இறைவனை நோக்கியே யிருத்தற் பொருட்டுத் தம் வீட்டு மாடியிலிருந்தமையால், மச்சுச்செட்டியா ரென்ற பெயர் இவர்க்கு அமைந்தது. இவருடைய மாணாக்கர் நால்வருட் சிறந்தவர் கங்கை மெய்கண்டார். இவர் மாணாக்கர் சீகாழிச் சிற்றம்பல நாடிகள். இவர் சித்தக்காட்டிலே அறுபத்து நான்கு மாணாக்கர்களுடன் சமாதியுற்றனர். சிற்றம்பல நாடிகள் இயற்றிய நூல்கள் துகளறு போதம், சிவப்பிரகாசக் கருத்துரைச் சூத்திரம், திருச்செந்தூரகவல் முதலியன. அவர் மாணவராகிய தத்துவப் பிரகாசர் தத்துவப் பிரகாச மென்னுமோர் சித்தாந்த நூ லியற்றியுள்ளார். சிற்றம் பல நாடிகளது மாணாக்கராகிய பழுதைகட்டி ஞானப் பிரகாசரது மாணாக்கர் திருவாரூர் ஞானப் பிரகாசர். இவரியற்றிய நூல்கள் சிவானந்த போதம், பிரசாதக் கட்டளை, அத்துவாக் கட்டளை, சிவபூசை யகவல் முதலியன. இவரது முதன் மாணாக்கரே தருமபுர வாதீனத்தை நிலை நாட்டிய ஞானசம்பந்த தேசிகராவர். இவர் பாண்டி நாட்டுச்சீவில்லிபுத்தூர் வேளாளர். இவரியற்றிய நூல்கள் சிவபோக சாரம், சொக்கநாத வெண்பா, பரமானந்த விளக்கம், முத்திநிச்சயம், திரிபதார்த்த ரூபாதிதசகாரிய அகவல் முதலியன.

தருமபுரத்தில் நான்காவது பட்டத்திலிருந்த மாசிலாமணி தேசிகர் குமரகுருபர அடிகளுக்கு ஞானோ

பதேசஞ் செய்தவர். ஆறாவது பட்டத்திலிருந்த திருஞான சம்பந்தரது மாணாக்கர் வெள்ளியம்பலத் தம்பிரான் என்பவர். இவர் திருநெல்வேலிச் சிந்து பூந்துறையிலிருந்தகாலை துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளுக்குப் போதகாசிரியராய்த் திகழ்ந்தார். இவர் முத்தி நிச்சயமென்பதற்கு ஓர் உரையும், சிவஞான சித்தியார்க்கு ஞானாவரண விளக்கமெனும் விரிவுரையு மியற்றினார். தருமபுரவாதீனம் எட்டாவது பட்டத் திலிருந்த அழகிய திருச்சிற்றம்பலதேசிகரால், சுவர்க்கபுரமடம் ஏற்படுத்தப்பட்டது. அம்மடத்துத் தம்பிரான் அழகிய திருச்சிற்றம்பலத் தம்பிரான் என் பவரால், திரிபதார்த்ததீபமென்னு நூலியற்றப்பட் டது. சுவர்க்கபுர மடம் சின்னாட்களுக்கு முன் நிலை குலைந்தது. (இப்பொழுதுள்ள தருமபுரவாதீனத் தலைவர் இருபத்திரண்டாவது பட்டத்திலுள்ளவர் போலும்.) இவ்வாதீனப் பெரும் புலவருள் ஒருவரா கிய வடுகநாத தேசிக ரென்பவரால் திருமுல்லைவாயிற் புராண மியற்றப் பெற்றது. இத்தேசிகர் இலக்கணம் வைத்தியநாத நாவலரது நான்காவது புதல்வர்.

இவ்வாதீனத்துப் பண்டார சாத்திரங்களும் பிற நூல்களும் பலவுள்ளன. அவை ஞானப் பிரகாசர் தசகாரியம், போதானந்த சித்தியார், திரிபதார்த்த ரூபாதி தசகாரியம், பதிபசு பாசப் பனுவல், சிவா னந்த மாலை, சாம்பிரதாய தீபம், ஞானாவரண விளக் கக்குறள், சித்தாந்த நிச்சயம், சதமணிக் கோவை, பரமத சங்கற்ப பரமோபதேசம், நிராகரணம், பரமத திமிரபானு, சிவானுபோக சாரம் முதலியன.

இத்துடன் ஆதீன காலம் முடிந்தது. இனி தனிப்புல வர் வரலாறு ஆய்வாம்.

(அதிகாரம் கக)

# பாரதகாப்பியக் காலம்.

---

## பதினாறும் நூற்றாண்டு

பதினான்காவது நூற்றாண்டிலே தோன்றிய சில சிறு நூல்கள் ஈண்டு கருதற்பாலன. சீவில்லிபுத்தூரிற் றிகழ்ந்த புலவரொருவர் உவமான சங்கிரக மென்ற அணிநூ லியற்றினர். காங்கேயன் என்பாரியற்றிய உரிச்சொல் நிகண்டும் அக்காலத்ததே யாம். இவரைச் செங்கற்பட்டி லிருந்த ஒரு துறவி யென்று சிலர் கூறுவர். கொங்குமண்டல சதகம் கக-ம் பாட்டில் இவர் கொங்குநாட்டு மோரூரில் வாழ்ந்தவரென்று குறிக்கப் பட்டது. இவர் வேளாள மரபினர்.

தொல்காப்பியத் தேவரென்னும் புலவரால் திருப் பாதிரிப்புலியூர்க் கலம்பகமென்ப தியற்றப்பட்டது. இக்கலம்பகத்தை இரட்டையர்கள் புகழ்ந்துரைத் தமை காண்க. அவர்கள்,

"தொல்காப்பியத் தேவர்சொன்ன தமிழ்ப்பாட லன்றி
நல்காத் திருச்செவிக்கு நாமுரைப்ப தேறுமோ"

என்றனர்.

வைணவருள் அருளாள் பெருமாள் என்பவர் பிரமேயசார மென்னு நூலியற்றினர்.

நெற்குன்றவாண ரென்னும் ஒரு வேளாளகுல திலகர் தொண்டை நாட்டு நெற்குன்ற மென்னும் ஊரிலே சிறந்த வள்ளலாய்த் திகழ்ந்தது மன்றிச் செவ்விய பாவலராகவும் விளங்கினர். இவர் 'திருப் புகலூர் அந்தாதி' ஒன்று மிக அழகாகப் பாடியுள்ளார். இவர் தம்முடைய வீட்டில் இல்லாதபோது ஆண்டுச் சென்ற காளமேகப் புலவருக்கு அவரது தாதி ஒருத்தி பரிசளித்தா ளென்றும், அதனைக் கேட்டுகந்து தாமும் அப்புலவர்க்கோ ரடிமையென்று இவர் ஒரு செய்யுள் செய்ததாகவும் கேட்கப்படுகின்றது. அந்தப் பாட்டு வருமாறு:

கற்கும் கவிவல்ல வந்தணர் கோனபி காளிக்குயாம்
விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்
பொற்குன்ற மும்புகழ்க் கங்காநதியும் பொதியமும் போல்
நெற்குன்ற மும்நம் மரபுமெந் நாளும் நிலைசிறக்கவே.

காளமேகப்புலவர் பதினான்காம் நூற்றாண்டி னிறுதியிலும் பதினைந்தாம் நூற்றாண்டின் முதலிலும் திகழ்ந்த பெரும்புலவர். இவர் கும்பகோணத்து வைணவ அந்தணர்; சிரங்கக் கோயிலில் மடைப்பள்ளி வேலை பார்த்தவர். மோகனாங்கி யென்னுந் திருவானைக் காச் சிவன்கோயிற் றாசியாற் சைவராய், ஒரு நாளிரவு திருவானைக் காவிலெழுந்தருளி யிருக்கும் அகிலாண்ட நாயகி தம்பலமுமிழப்பெற்று இவர் வரகவியாயினர். இவர் இயற்பெயர் வரதர். எம்முறையில் எச்சொல்லை இப்புலவர் எவ்வாறு அமைத்துப் பாடவேண்டி னும், அவ்வாறே உடனே தெளிதமிழிற் பாடவல்ல

ஆசுகவி. சிலேடை பாடுவதிலும் நகைச்சுவை யமைடயப் பாடல் பாடுவதிலும் இவர் இணையற்றவர்; 'ஆசுகவி மாரியிலெ வுலகமெலாம் வீசுகவி காளமேக'மெனப் பிறரால் புகழப்பெற்றவர். இவர் முதலிற் பாடிய நூல் திருவானைக்காவுலா வென்பது.

> "கங்கையினன் கங்கையினன் காசியிலான் காசியிலான்
> பைங்கடல்சூழ் பாரிடத்தான் பாரிடத்தான்"

என்பதில், கம்-தலை, கையினன்-கையினுடையவன்; கங்கையைத் தரித்தவன்; காசியை (இல்-வீடு) வீடாக உடையவன்; பாரிடம்-நிலம், பாரிடம்-பூதம்.

இராமையனென்னுமோர் அரச வேலைக்காரன் திறலில்லாத ஒரு குதிரையிலேறி மெள்ளமெள்ளப் போதலைக் கண்டு இவர் கூறிய பாட்டு,

> "முன்னே கடிவாள மூன்றுபேர் போட்டிழுக்கப்
> பின்னே இருந்திரண்டு பேர்தள்ள—எந்நேரம்
> வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை
> மாதம்போங் காத வழி"

ஒரு தேவடியாள் காதிற்கொவ்வாத சடியசுரத்திற் பாடுவதைக்கேட்டு அவளை இவர் இகழ்ந்துரைத்த அடிகள்:-

> "கழுதைகெட்ட வண்ணான் கண்டேன்கண் டேனென்று
> பழுதையெடுத் தோடிவந்தான் பார்த்து"

திருமலைராயன் பட்டணத்திலிருந்த அதிமதுர கவி யென்பாரோடு வீரவாது நிகழ்த்தி வென்ற இவர் பேராண்மை இவர் திருவருட்பேறுடையாரென்பதை வற்புறுத்தும். திருமலைராயனிடம் அரண்மனைப் பாவலனாயிருந்த அதிமதுரகவி அறுபத்து

நான்கு மாணவரோடு மிகச் செருக்குற்றிருந்தான். அவன் சிவிகையிலேறிச் சென்றகாலை அவனது பரிசனத்தோடு கலந்த காளமேகத்தை அவனது மாணவர் நோக்கி அதிமதுரகவியின் புகழைப் பரவச் சொன்ன காலை நகையாடி அதிமதுரம் இனிய கள்வெறி என்று பொருள்பட உரைத்தார். இதனைக் கேள்வியுற்றுச் சினங்கொண்ட அதிமதுரகவி 'காளமேகத்தைப் பிடித்தெடுத்துக் கொண்டுவா' என்று ஆளனுப்ப, அவரும்,

"தூதைந்து நாழிகையி லாறுநா ழிகைதனிற்
சொற்சந்த மாலை சொல்லத்
தூக்ஷிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்
றொகைபட விரித்து ரைக்கப்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனிற்
பரணியொரு நாண்முழு துமே
பாரகா வியமெலா மோரிரு தினத்திலே
பகரக்கொ டிக்கட் டினேன்
சீதஞ்செ யுந்திங்கண் மரபினு னீடுபுகழ்
செய்யதிரு மலைரா யன்முன்
சீறுமா றுகவே தாறுமா றுகள்சொல்
திருட்டுக் கவிப்பு லவரைக்
காதங் கறுத்துச் செருப்பிட் டடித்துக்
கதுப்பிற் புடைத்து வெற்றிக்
கல்லணையி னொடுகொடிய கடிவாள மிட்டேறு
கவிகாள மேக நானே"

என்று தம் பெருமை கூறும் பாட்டொன்று பாடி, அரண்மனைக்கு விரைந்து சென்றார்.

காளமேகம் அரசவை செல்லுங்காலை இருக்க இடமின்மையை முன்னறிந்து கலைமகளைப்பாடி அரசிருக்கையிலேயே இடம் நீளப்பெற்று வைகினர்.

"வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்—வெள்ளை
யரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய்"

பிறகு இருபுலவரும் சொற்போர் நிகழ்த்திய பின்னர் யமகண்டம் பாடக் காளமேகம் ஒப்புக்கொண்டு, சதுரத் தீக்குழிக்கு மேல் இருப்புத்தூண் முடியிலிருந்து கீழே கொதிக்கின்ற எண்ணெய்க் கொப்பறையையும், நான்கு பக்கத்து இருப்புத்தூணைத் தவறு நேரிட்டால் அசைக்க அவைகளிற் கட்டப்பட்ட யானைகளையும், தமது அரையிலுங் கழுத்திலுங் கட்டியுள்ள கத்திகளையும் பொருட்படுத்தாது விரும்பியவர்கள் விரும்பிய வண்ணமே கவிமாரி பொழிந்தும், திருமலைராயனும் அவன் கவிஞனும் தம்மை மதியாமை கண்டு, அப்பட்டணத்தில் மண்மாரி பெய்கவென வெஞ்சொற் கூறிப்போந்தார். இவர் முதலிலே திருமலைராயன் அரசவை சென்றமர்ந்தபோது அங்குள்ள போலிப் புலவரைப் பார்த்துப் பாடிய பாட்டு,

"வாலெங்கே நீண்ட வயிறெங்கே யிரண்டு
காலெங்கே யுட்குழிந்த கண்ணெங்கே—சாலப்
புவிராசர் போற்றும் புலவீர்காள் நீங்கள்
கவிராச ரென்றிருந்தக் கால்"

என்பது.

(வடமொழியிற் கபி- குரங்கு; கபி, தமிழிற் கவி யாயிற்று.) காளமேகப் புலவர் சிவபெருமானே முழு முதற் கடவுளென்று நிலைநாட்டப் 'பரப்பிரமவிளக்க' மென்னு நூலியற்றினர்.

"பங்கயக்கண் மாலைப் பரத்துவனென் றேவியாசன்
கங்கைக் கரையுரைத்த கைந்நாவன்—றங்கவற்குத்
தம்பிக்க மால்வந்து சங்கரனே யெவ்வுயிர்க்கும்
எம்பிரா னென்று னிசைந்து."

இறுதியில் இவர் திருவாரூர் சென்று இரட்டையர் பாடி முடிக்காது மதிலில் எழுதியிருந்த,

"நாணென்று னஞ்சிருக்கு நற்சாபம் கற்சாபம்"

என்ற முதலடியைக் கண்டு,

"பாணந்தான் மண்டின்ற பாணமே—தாணுவே
சீராரூர் மேவுஞ் சிவனேநீ யெப்படியோ
நேரார் புரமெரித்த நேர்"

என்று மற்றையடிகளையும் பாடிமுடித்தன ரென்ப.

இஃதறிந்த இரட்டையர் காளமேகம் இறந்த ஞான்று அவர் உடல் தீயினால் வெந்தழிதல் கண்டு, அதனை

"ஆசு கவியா லகில வுலகெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே—பூசுரா
விண்கொண்ட செந்தழலாய் வேகுதே யையையோ
மண்தின்ற பாணமென்ற வாய்"

என்று வருந்திப் பாடிய பாட்டிற் குறித்தனரென்க.

இதனாற் காளமேகப்புலவர் இரட்டையர் காலத்திலிருந்து அவர்களுக்குமுன் சிவபதமடைந்ததாகத் தெரிகின்றது.

## இரட்டையர்.

இரட்டைய ரென்னும் இருபுலவர்கள் ஒருங்கு சேர்ந்து பலபதிகளுக்குஞ் சென்று சிவபிரான்மீது பாமாலை புனைந்தனர். இவர்கள் பராக்கிரம பாண்டியன் காலத்தவர். இவர்கள் சோழநாட்டிலுள்ள ஆலந்துறையிற் செங்குந்தர் மரபிற் பிறந்தவர்கள். ஒருவர் ஒரு பாட்டின் முற்பாதிபாட, மற்றொருவர் அதன் பிற்பாதியைப் பாடுதல் வழக்கம். இவர்கள் ஆறு விலக்குதல் முதலான அற்புதங்களியற்றியதாகக் கேள்விப்படுகிறோம். இவர்களுள் ஒருவர் முடவர்; மற்றொருவர் குருடர். முடவரைக் குருடர் சுமந்து சென்றாரென்றும், முடவர் வழி காட்டினரென்றுங் கூறுப. இளஞ்சூரிய ரென்றும் முதுசூரிய ரென்றும் அவர்கள் அழைக்கப்பட்டனர். அவர்கள் இயற்றிய திருவாமாத்தூர்க் கலம்பகம் நயமிக்கது. தில்லைக் கலம்பகம், ஏகம்பநாதருலா, கச்சிக் கலம்பகம் முதலியன பாடி இவர்கள் வரபதியாட் கொண்டானென்னுங் கொங்கு மன்னனாற் போற்றப்பெற்றவர். 'கலம்பகத்திற் கிரட்டையர்க' ளென்றதுங் காண்க. அவர்கள் திருவண்ணாமலையிலிருந்த சம்பந்தாண்டானென்னுஞ் சமணப் புலவர் விரும்பிய 'சமுத்தி'யென்னுஞ் சித்திரக்கவி பாடினதாகவுங் கேள்வி. திருவக்க பாகை வரபதியாட் கொண்டானை அவர்கள் பாடிய பாட்டு வருமாறு:—

"சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்ட நாயன் றமிழ்க்
கொங்கர்கோன்
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே

யூனுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி யுயர்வானிலே
வீணுக்கு நின்றுக மெலிகின்ற தெவ்வாறு வெண்டிங்களே"

## காளிமுத்துப் புலவர்.

இரட்டையர் பராக்கிரம பாண்டியன் காலத்தவர். பராக்கிரம பாண்டியனைக் காளிமுத்துப் புலவர் என்பாரும் பாடியிருத்தலால், அவரும் இரட்டையர் காலத்தவரென்றே தெரிகின்றது. அப்பாட்டு வருமாறு:—

"கடந்தூங்கு வேழப் பிடர்க்கே வரக்கண்டு கண்கண்முத்துத்
தடந்தூங்க வாடுங் கிளிக்கென்செய் வேன்மணி வாய்திறக்க
விடந்தூங்கு பாம்பின் படத்தின் மிசைதிமி தித்தியெனப்
படந்தூங்க வாடும் புயலே பராக்கிரம பாண்டியனே."

## அருணகிரிநாதர்.

இவர்கள் காலத்திலே சந்தவிருத்தப் பெருங்கடலாகிய திருப்புகழ் பதினாறாயிரம் பாடிய அருணகிரிநாதர் நிகழ்ந்தனர். இவர் ஒரு செட்டியார்க்குப் பரத்தைமாதிடம் பிறந்தவரென்ப. முருகப்பெருமான் திருவருள் பெற்றுக் கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு, வேல்விருத்தம், உடற்கூற்றுவண்ணம் என்னும் பிற நூல்களையும் இவரியற்றினர். இவர் கந்தரந்தாதி பாடி வில்லிபுத்தூராரை வென்றனரென்ப; சம்பந்தாண்டா னென்பானை உபாசனையில் வென்றவர். அவன் தான் உபாசிக்குந் தேவியை வரவழைக்க முடியவில்லை. இவர் முருகப்பிரானை யாவர்க்குங் காட்சியருளச் செய்தனர். இவர்கள் காலத்திலாண்ட மன்னன் பிரபுடதேவராசன் என்பான்.

அவன் கருநடவேந்தன் போலும். அருணகிரியார் பாடிய பெருநூலாகிய திருப்புகழிலே இன்பக்கலையினையெடுத்து விதந்து அதன் றீமையிற் றப்பிக் கடவுணெறி தலைப்பட வேண்டுமென்று அளவற்ற பாடல்களில் வற்புறுத்தினர். இவர் இளமையிற் கழிபெருங் காமுகராயிருந்து பின்னர் முற்செய் பெருந்தவத்தாற் குமரக் கடவுளின் திருவருள் தலைக்கூடினர். இவர் அருள் பெற்றவரென்பதைத் தாயுமானுர் 'கந்தரனுபூதி பெற்றுக் கந்தரனு பூதிசொன்ன எந்தை யருணகிரி' என்றமையா லறிக. இவர் பாடிய திருப்புகழ்ச் சந்த விருத்தங்களில் இரண்டொன்று காட்டுகிறேம்.

"சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத
சகடசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்க முறுவேனே
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதிரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடப்ப மணிவோனே
தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுநெய்த்த வடிவேலா
அருணதள பாதபத்ம மதுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா
அதிசயம நேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழகதிரு வேரகத்தின் முருகோனே."

"ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
வள்ளியைம ணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டு
மாதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே"

## வில்லிபுத்தூராழ்வார்

அருணகிரிநாதருடன் வாதாடினவர் திருமுனைப்பாடி நாட்டிற் சனியூரிற் பிறந்து பெரியாழ்வார் திருநாம மிடப்பெற்ற சீவில்லிபுத்தூரார் என்னும் வைணவ அந்தணராவர். அவர் மெய்ப்புலமை யில்லாரோடு சொற்போர் புரிந்து தோற்றவர்களது காதைக் குறும் பியளவாக் குடைந்து தோண்டி வெட்டினரென்னும் வரலாறு கேட்கப்படுகின்றது. அருணகிரிநாதரது கந்தரந்தாதிக்கு அவர் தட்டின்றி உரை கூறிவந்த போது அதன் 54-ம் கவியாகிய 'திதத்தத்த' என்னும் யமகப்பாட்டிற்குப் பொருள் கூறச் சற்றுத் திகைத்தவுடன், அது தோல்வித்தானமாத லறிந்து பின்னிட்டோடின ரென்ப. இவர் அருணகிரிநாதர் சட்டைக்கிணங்கியே சிவபிரானை யிகழாது 'பிள்ளை யார் வணக்க' முதலியன கூறிப் பாரத நூல் இனிது செய்து முடித்தனர். பாரதத்தை பிள்ளையார் மேரு வில் எழுதினரென்ற கதையால், அக்கடவுள் வணக்கம் ஏற்புடைக் கடவுள் வணக்கமென்பாருமுளர். திருவக்க பாகையி லாண்ட கொங்கர்குல மன்னனாகிய வரப தியாட் கொண்டான் வேண்ட இவர் பாரதம் பாடின

ரென்ப. இவர் தமது தம்பியது தாயபாகத்தைத் தாமே எடுத்துக்கொண்டமையால், இவர்க்கு நல்லறி வூட்டுங் கருத்தோடு மன்னன் இவரைப் பாரதம் பாடுவித்தானென்னுங் கதை பொருத்தமாய்த் தோன்றவில்லை. இவர் கொங்கர்கோனது வண்மையைப் பாரதத்துட் சில விடங்களிற் சிறப்பித்துள்ளார்.

"கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாவை பந்தன்
பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவல ரெமரென் றெமல் வெங்களந் தன்னி னின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி."

இவர்தான் வடமொழிச் சந்தங்களையும் தத்தம் அவ்வியம் முதலிய சொல்வகைகளையு மிகுதியாகச் சிதைத்துத் தமிழ்ப்பெருங் காப்பியத்தில் வழங்கினவர். சந்தச்செய்யுள் செய்வதில் வல்லவர். இதனாலும் இவர் அருணகிரிநாதர் காலத்தவரென்று கருதலாம். இவர் நூற்குப் பாயிரஞ் செய்தவர் இவர் மகனாராய வரந்தருவார். வில்லிபுத்தூரார் சிவபரத்துவங் காட்டி இயற்றிய செய்யுள் ஒன்று வருமாறு:—

ஓரேனந் தனைத்தேட வொளித்தருளு மிருபாதத்
தொருவ னந்தப்
போரேனந் தனைத்தேடிக் கணங்களுடன் புறப்பட்டான
புனங்க ளெல்லாஞ்
சீரேனல் விளைகிரிக்குத் தேவதையாங் குழவியையுஞ்
செங்கை யேந்திப்
பாரேனை யுலகனைத்தும் பணிவுடனே புகழ்ந்திடத்தன்
பதிபின் வந்தாள்.

## அதிவீரராம பாண்டியன்

அதிவீரராம பாண்டியரென்னு மன்னர் தமது நைடதத்தாற் பெரும்புகழ் படைத்தனர். நைடதம் புலவர்க் கௌடதம். இவர் கொற்கையி லரசாண்டவ ரென்ப. தென்காசியில் இவர் சிறப்புடன் வீற்றிருந்து அத்திருக்கோயிலைக் கட்டினரென்று தெரிகிறது. பாண்டிய மன்னவருள் இறுதியாகப் புலமை பூண்டவர் இவரே. இவர் கூர்மபுராணம், காசிகாண்டம், இலிங்கபுராணம், மாக புராணம் என்னு மதுர காவியங்களையு மியற்றினர். இன்னும் இவர் கரிவலம் வந்த நல்லூரெனுந் தலத்தில் வீற்றிருக்குஞ் சிவபிரான்மீது கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி இயற்றினர். இது 'குட்டித் திருவாசக' மென்று புகழப்படுகின்றது. இவர் தமையன் வரதுங்க பாண்டியனும் கல்வி மிக்கவரே. அவர் பிரமோத்தரகாண்டம், கொக்கோகம் என்னும் நூல்களை யியற்றினர் என்ப.

வரதுங்கராம பாண்டியன் மனைவி நிறைந்த கல்வி யுடையவர். இவர் பிரிவாற்றாமையைக் குறித்துப் பாடிய பாட்டு வருமாறு:—

"செப்பாரு முகிழ்முலையா ரெல்லாருங் கணவருடன்
சேர்ந்து வாழ
ஒப்பாரு மில்லாவென் கணவனுடன் யான்கூடி
யுறவா டாமல்
எப்பாலும் மிருகாமத் துயராலும் நாடோறும்
மெலிந்து வாடி
இப்பாடு படவென்றே யிறைவனென் றலையோட்டி
லெழுதினனே"

இவரே நைடதத்தை 'நாய் விரைந்தோடி யிளைத் தாற் போன்ற தன்மையுடைய' தென்று கூறி, அது சென்றுதேய்ந்திறுத லென்னுங் குற்ற முடைத் தென்று குறிப்பித்தா ரென்ப.

## பதினாறாம் நூற்றாண்டு.

பதினாறாம் நூற்றாண்டி னிறுதியிலே சுந்தரபாண்டியமென்னும் மதுரை மான்மியம் செந்தமிழிற் செய்யப்பட்டது. வேம்பத்தூரார் திருவிளையாடலாகிய பழைய திருவிளையாடலும் இக்காலத்தெழுந்த தென்ப. பாண்டிநாட்டு வீரசோழன் அல்லது வீரை யென்னும் ஊரிலிருந்த ஆலவந்தா ரென்னும் அந்தணப்புலவர் ஞானவாசிட்டம் என்னும் அரியவேதாந்த நூலியற்றினர். இதற்குப் பிற்காலத்திலே புரசை அருணாசலசுவாமி யென்பார் ஒருரை யியற்றினர்.

௧௬-ம் நூற்றாண்டிலே சைவசித்தாந்த உரையாசிரியர்கள் பலர் திகழ்ந்தனர். சோழநாட்டிலுள்ள சூரியனார் கோயில் ஆதீனத்தலைவராய் விளங்கிய சிவாக்கிரயோகிகள் என்பார் சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு ஒரு நல்லுரை யியற்றினர். இவர் வடமொழிச் சிவஞான போதத்திற்குப் பன்னீராயிரம் கிரந்தமுடைய ஒரு பேருரை யியற்றினார். இவரது பிறநூல்கள் சைவபரிபாஷை, தத்துவதரிசனம், சித்தாந்ததீபிகை, வேதாந்ததீபிகை, பாஞ்சராத்திரமதபேடிகை முதலியன. இலங்கையி னின்றும் சோழநாட்டிற்கு வந்த ஞானப்பிரகாச ரென்பார் சிவஞானசித்தி சுபக்கத்திற்கு ஓர் உரை இயற்றினர். இவர் கார்காத்த வேளாள மரபினர்;

வடநாடு சென்று வடமொழி நன்கு பயின்றவர். திருவண்ணாமலைச் சைவ ஆதீனத்தில் இவர் துறவுபூண்டு பல நூல்களியற்றினர். இவர் ஒரு புதையல் கண்டெடுத்து மடமுங் குளமும் கட்டினரென்ப. இவர் பௌட்கர ஆகமத்திற்கு விரிவுரை இயற்றினரென்ப. இவர் காஞ்சிபுரத்திற் சைவ முதலிமார்க்கு முதன் முதல் ஆதீனத்தலைவராய் விளங்கிய ஞானப்பிரகாசரின் வேறுவர்.

காஞ்சிபுரம் ஞானப்பிரகாசர்மடம் கி.பி. 1511-ல் நிலைநாட்டப் பட்டது. திருவொற்றியூர் ஞானப்பிரகாச ரென்பார் சிவஞானசித்தியார் பரபக்கத்துக்கு உரைவகுத்தனர். சிவஞானசித்தியார் சுபக்கத்துக்கு மறைஞானதேசிக ரென்பாரும் ஓர் உரையியற்றியுள்ளார். இன்னும் அதற்குப் பிறிதோருரை நிரம்ப அழகிய தேசிகராலே இயற்றப்பட்டது. அவர் திருவருட் பயனுக்கும் உரைகண்டனர். அவர் வேதாரணியத்தில் சைவவேளாளர் குலத்தில் சைவாசிரியர் மரபிற் பிறந்தவர். இவர் பாடிய பெருங்காப்பியம் சேது புராணமாகும். இவர் இலக்கண நயங்களைப் பாட்டில் அமைத்துக் காட்டுவதில் மிக்க திறமைவாய்ந்தவர். 'செல்வ முண்டாக்கு' மென்னுங் கருத்தை,

"வெறுங்கைய ரென்னும் சொல்லின் மென்மையை
வன்மையாக்கும்"

என்பதாற் றெளிவித்தனர்.

'வெறுங்கை' யென்பது 'வெறுக்கை' யென்ற விடத்துச் செல்வமென்று பொருள்படுதல் காண்க.

இவர் இந்நூல்செய்த காலம் கி. பி. 1508. கி. பி. 1524-லே பாண்டி நாட்டிலுள்ள நல்லூரில் பொற் கொல்லர் மரபிற் பிறந்த வீரகவிராய ரென்பார் அரிச் சந்திர புராணம் பாடினவர்.

"பதி யிழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதி யிழந்தனம் இனிநமக் குளதென நினைக்குங்
கதி யிழக்கினுங் கட்டுரை யிழக்கிலே மென்றூர்.
மதி யிழந்துதன் வாயிழந்தருந்தவன் மறைந்தான்"

என்பது அரிச்சந்திர புராணச் செய்யுள்.

இந்நூற்றூண்டிலேயே செவ்வைச் சூடுவாரென்னும் வேம்பத்தூர் வேதியப் புலவர் விண்டு பாக வதத்தை இனிய செந்தமிழ்ப் பாவில் இயற்றினர். நெல்லிநகர் அருளாளதாசர் என்னும் வைணவப் புல வரும் பாகவதம் இயற்றினர். அனதாரியப்பரென்னும் தொண்டை நாட்டு வாயற்பதியூரிற் றிகழ்ந்த பெரும்புலவர் சுந்தரபாண்டியமென்னும் மதுரை மான்மியத்தைத் திருந்தவந்தவ னென்னும் வள்ளல் வேண்டுகோளாற் றமிழிற் செய்தனரென்ப.

திருநெல்வேலியைச் சார்ந்த ஆழ்வார் திருநகரி யிற் றிகழ்ந்த திருக்குருகைப்பெருமாள் கவிராயரென் பார் மாறனலங்கார மென்னும் பெரியதோர் அணி நூலியற்றினர். மாறன் கிளவிமாலை யென்னும் சிறு காப்பியமும் இவர் இயற்றினரென்ப. இக்காலத்திறுதி யிற் றிருநெல்வேலிச் சில்லா செங்கோட்டையிற் றிகழ்ந்த கவிராச பண்டிதரென்பார் சங்கராசாரியர் வடமொழியி லியற்றிய சவுந்தரியலகரியைத் தமிழில் மொழிபெயர்த்தனர்.

## பரஞ்சோதி முனிவர்.

பரஞ்சோதிமாமுனிவ ரென்பார் திருமறைக் காட்டில் சைவவேளாள ஆசிரிய மரபிற் பிறந்தவர். அவர் நிரம்பஅழகியரோடு உடன்கல்வி பயின்றதாக ஒரு சரித்திரங் கேட்கப்படுகின்றது. அங்ஙனமாயின் இவர் பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதியிற் றிகழ்ந் தவராவர். இவர் வடமொழிக் காந்தத்தின் ஈசசங்கி தையிற் கூறப்பட்ட திருவாலவாய் மான்மியத்தைத் தமிழிற் செய்வதாகத் தமது நூற்பாயிரத்துட் செப்புகின்றார். இவருடைய திருவிளையாடற்புராணம் சொன்னடையிலும் அன்பு விளைக்குந் தன்மையினும் சுந்தர பாண்டியம், வேம்பத்தூரார் திருவிளையாடல் முதலிய பிற கூடன்மான்மியங்களை வென்று மேம் பட்ட தென்னலாம். பெருங்காப்பிய நயங்களும் இதன் கண்ணேயே சிறந்துள்ளன. அளவிலும் இது பெரியதாகும். இந்நூலாசிரியர் சைவசித்தாந்த உணர்ச்சி மிக்கவர் என்பது இதன்கண் உள்ள பாட் டுக்களால் நன்கு விளங்கும்.

"பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ளமதியின்
பேதங்க ளல்ல விவையன்றி நின்ற பிறிதல்லவென்று பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்சவெளி யென்ப கூடன்மறுகிற்
பாதங்க ணோவ வளை யிந்தனுதி பகர்வாரையாயு மவரே."

ஆனால் இவர் ஆரியக் கோட்பாடுடையவர். வர லாற்றாராய்ச்சிக்கு இவர் நூல் மிகப் பயன்படுவதில்லை.

பதினேழாம் நூற்றாண்டின் முற் பகுதியிலே (1633-1650வரை) திருமலைநாயக்கர் மதுரையிலாண்ட போது மணவாளதாச ரென்னும் பிள்ளைப் பெருமாளையங்காரும், சைவ எல்லப்ப நாவலரும், குமரகுருபர சுவாமிகளும் தத்தஞ் சமயங்களை நிறுவுதலிற்றலை நின்றனர்.

## அதிகாரம் (உம)

# சைவவைணவ வாதம்.

(பதினேழாம் நூற்றாண்டு பிற்பகுதி)

### பிள்ளைப்பெருமாளையங்கார்.

பிள்ளைப்பெருமாளையங்கார் என்பவர் சோழநாட்டு வைணவப் பிராமணர். திருவரங்கத்தில் வாழ்ந்தவர். இவர் சிலேடை, யமகம், திரிபு முதலியன அமைத்துப் பாடுவதில் வல்லவர். இவர் திருவரங்கக் கலம்பகத்திற் செய்த சிவநிந்தனையை மறுத்து, எல்லப்ப நாவலர் மனைவி அருணைக் கலம்பகத்திலோர் பாட்டுப் பாடினரென்ப.

நாவலர் மனைவி பாட்டு,

“கருடனோடு மற்சமாமை கமலமோடு முற்காங்
காட்டிலோடு மூன்றிராமர் கண்டமட்டி லோடவே
மருளிவந்த சிங்கமோடு வாமனென்பு பாறவே
வஞ்சமுள்ள கண்ணனோடு மாரனீறச் சேனனும்
இருளினோடு முண்டகத்த னேங்கியோடு வென்றவர்
நீறுரு தங் குயிரளித்த வேந்தல்யாவன் வேதமே
அருளுமந்த முதல்வன்யாவ னருணைகண்டு வாழ்மினோ
வாரநாதி மூலமென்ப தறிகிலாத மாக்களே.”

ஐயங்கார் ஒரு பசுவினால் முட்டப்பெற்று முடிவுற்றார். இவரியற்றிய சிறுகாப்பியங்கள் அட்டப்பிரபந்தமெனப்படும். அவை அழகரந்தாதி, திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்து மாலை, திருவரங்கத்துச சற்றிருநாமம், திருவேங்கடத் தந்தாதி, திருவேங்கடமாலை, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியென்பன.

## சைவ எல்லப்ப நாவலர்

சைவ எல்லப்ப நாவலர் தொண்டை நாட்டிலே தாழைநகரிற் பிறந்து வாழ்ந்தவர். இவர் பெருமை அருணசலப் புராணத்தினுலும், அருணைக் கலம்பகத்தாலும் இனிது விளங்கும். இவர் கலம்பகத்தில் சைவத்தின் ஒப்புயர்வின்மையையெடுத்துமொழிந்தார்.

'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை அதிற்சார் சிவமாம்
தெய்வத்தின் மேற்றெய்வம் இல்லெனும் நான்மறைச்
செம்பொருள்வாய்
மைவைத்த சீர்த்திருத் தேவார முந்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றூளெம் உயிர்த்
துணையே!

சைவத்தை நிலைநாட்டினமையால், இவர் 'சைவ' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டார். இவரும் சிலேடையில் வல்லவர்.

" ஆராயுங்கா லெடுப்ப தைய மன்றோ வம்மானை
அன்னமறியா ரெடுப்ப தையமோ வம்மானை,"

என்ற இடத்தில் அன்னம், சோறு, அன்னப்பறவையென்றிரு பொருள்பட மொழிந்தமை காண்க.

(ஐயம்-பிச்சை, சந்தேகம்-) இவர் செவ்வந்திப்புராணம், திருவெண்காட்டுப் புராணம், திருச்செங்காட்டங் குடிப்புராணம், திருவிரிஞ்சைப்புராணம் முதலியன பாடினவர்; சௌந்தரியலகரிக்கு உரை கண்டனர்.

## குமரகுருபர அடிகள்

பதினேழாம் நூற்றாண்டின் முற்பாதியிலே இமயமுதற் குமரிவரை, திருமலைநாயக்கர் காலத்தில், சைவத்தை நிலைநாட்டின பெருந்தகையார் குமரகுருபரராவர். திருநெல்வேலிச் சில்லா சிறீவைகுண்டத்திற் சைவவேளாள மரபிற் பிறந்து, ஐந்தாண்டுவரை ஊமையாயிருந்து திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளாற் பேசுந்திறம்பெற்ற ஐந்தாவது ஆண்டிலேயே அப்பெருமான்மீது, 'கந்தர் கலிவெண்பாப்' பாடியருளினர். முருகப்பெருமான் கனவிற்றோன்றி அவரைக் 'குமரகுருபர' வென்றழைத்தமையால், அவர் அப்பெயர் பெற்றனர். அவர் தம்மூரிலுள்ள கயிலாய நாதர்மீது கயிலைக் கலம்பக மென்னுமோர் நூலியற்றினர். பின் தம்பெற்றோரிடம் விடைபெற்றுக்கொண்டு அவர் மதுரை சென்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடித் திருமலை நாயக்கர்முன் அரங்கேற்றும்போது அங்கயற்கண்ணம்மை பூசாரியது குழந்தை வடிவாய்த்தோன்றி அரசன் கழுத்திலிருந்த முத்தாரத்தை யெடுத்து அடிகள் கழுத்திலணிந்திட்டு மறைந்தருளினமை கண்டு யாவரும் வியப்புற்றனர். அரசன் அடிகட்குப் பொன்முழுக்குச் சாத்தி விருதுகள் பல அளித்தனன். பின் அடிகள்

திருவாலவாயண்ணல்மீது மதுரைக் கலம்பகம் பாடினர். அரசரது வேண்டுகோட் கிணங்கி அறவுரைகள் பலவும் இனிது தொகுத்து அவர் நீதிநெறிவிளக்க மென்னுமோர் நூலியற்றினர்.

அடிகள் திரிசிரபுரஞ் சென்று பிள்ளைப் பெருமாளையங்காரை வாதில் வென்ற செய்தி கேட்கப்படுகின்றது. பின்னர் அவர் திருவாரூரை யடைந்து 'திருவாரூர் நான்மணி மாலை' பாடியருளினர். அடிகள் அப்பால் தருமபுர மடத்தையடைந்தார். அங்கு வீற்றிருந்த மாசிலாமணி தேசிகர், பெரியபுராணத்திலுள்ள 'ஐந்துபேரறிவும்' என்ற திருப்பாட்டிற்கு அவரை அநுபவப் பொருள் கேட்ட காலை, விடை கூறத் தடைப்பட்டவுடன், அடிகள் அத் தேசிகர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அவர் கட்டளைப்படித் தில்லைக்குப் புறப்பட்டு வழியிலே புள்ளிருக்கும் வேளூராகிய வைத்தீசுரன் கோயிலையடைந்து முருகப்பெருமான் மீது 'முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்' பாடிப் பணிந்தனர். அவர் சிதம்பரஞ் சென்று 'சிதம்பர மும்மணிக்கோவை' பாடினர். பின்னர் அடிகள் அடியார் வேண்டுகோட் கிணக்கிப் பல்வகை யாப்பிற்குங் காட்டுக ளடங்கிய 'செய்யுட் கோவை' யென்னும் அழகிய நூல் இயற்றி யருளினர். சிவகாமியம்பிகை மீது 'இரட்டை மணிமாலையும்' அவர் பாடினர். பின்னர்த் தருமபுரத்திற்கு மீண்டு அவர் தேசிக மூர்த்திகளால் ஆட்கொள்ளப்பட்டு 'பண்டார மும்மணிக் கோவை' யென்னுஞ் சைவ சித்தாந்தச் சிறு காப்பிய மியற்றினர். பின் அவர் கட்டளைப்படித் தம்

பொருளைக் கொண்டு அறஞ் செய்வான், காசிக்குட் போய் உலக முதல்வனை வணங்கிக் 'காசிக் கலம்பகம்' பாடியருளினர். அங்கிருந்த மகமதிய அரசன்பாற் சென்று 'சகலகலா வல்லிமாலை' பாடிக் கலைமகளருளால், 'இந்துத்தானி' மொழி வரப்பெற்று, சிங்க முதுகின்மேற் கோடல், பழுக்கக் காய்ச்சிய இருப்புக் கோலைத் தாங்குதல் முதலிய வியத்தகு செயல்கள் பலவியற்றி, அவர் அரசனாற் பெரிது மதிக்கப்பெற்றுச் காசியில் கேதாரநாதர் கோயில் முதலிய திருக்கோயில்களும், குமாரசாமி மட முதலிய மடங்களுங் கட்டி அறங்கள் பல புரிந்தனர். காசி மடத்தின் கிளைமடமாகவே தஞ்சாவூர்ச் சில்லாவிலுள்ள திருப்பனந்தாள் மடம் ஆதியிலேற்பட்டது.

இவரியற்றிய பண்டார மும்மணிக்கோவையி னொரு பகுதி வருமாறு:—

'திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தத்
திறவா நிலைமைபெற் றின்பமார்ந் திருக்கும்
பிறவா நன்னெறி பெறப்புரி வதுவே
ஆங்கது புரிதற் கரிதெனி னிங்கொரு
சனனம்யான் வேண்டுவ தினிதரு ளெனக்கே.

அதுவே,

ஐந்தரு நிழற்கீ ழாசுவீற் றிருக்கு
மிந்திர னாகிவாழ்ந் திருப்பதோ வன்றே
மலரோ னாகி மன்னுயிர்த் தொகுதி
பலர்புகழ்ந் திசைப்பப் படைப்பதோ வன்றே
அடலரா வணையி லறிதுயி லமர்ந்த
கடவுளா யுலகங் காப்பதோ வன்றே

அவைதாம்,

ஆரா வின்பமென் றரும்பெயர் பெறினும்
வாரா வல்வினை வருவிக் கும்மே
அன்னவை யொழியமற் றென்னைகொல் பிறவெனி
னிழுக்குறு கல்வியு மொழுக்கமு மிலராய்ப்
பழிப்புள ராயினு மாக வழுத்திநின்
பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருவமு தார்ந்து திருக்கடை யெறிந்த
பரிகல மாந்தியிப் பவக்கட லுழக்கும்
வானுடை நுமலி யாகிநின்
னருளையு மயரா தவதரிப் பதுவே.'

இதன், இன்னுமொரு பகுதி வருமாறு:—

'மாசி லாமணி ஞானசம் பந்த
வாக்கு மனனும் யாக்கையு மொன்றாய்ச்
சொற்றரு காரண மற்றிவை மூன்று
நின்புகழ் நவிற்றியு நினைத்து நின்றுணைத்தா
ளன்புட னிறைஞ்சியு மின்பமுற் றனவா
லவகா ரணங்களே யல்லமற் றம்ம
சிவகா ரணங்களாய்த் திரிந்தன வன்றே.'

அதனால்,

'திரிகா ரணங்களென் றுரைசெயு மப்பெய
ரொரு பொருட் கிளவியெல் லோர்க்கு
மிருபொருட் கிளவியா யிருந்ததின் றெனக்கே.'

## அதிகாரம் உக.

# குமரகுருபர அடிகள் காலம்.

---

## (பதினேழாம் நூற்றாண்டு-பிற்பகுதி)

### பிறபுலவர். காரிரத்தினக்கவிராயர்.

ஆழ்வார் திருநகரிலிருந்த காரிரத்தினக் கவிராயரென்பவர் மாறனலங்கார வுரையும், பரிமேலழகர் நுண்பொருண் மாலையும் பிற நூல்களுமியற்றினர்.

### நமச்சிவாயத்தம்பிரானும் பாண்டிப்பெருமாளும்

கி. பி. 1678-ல் திருவாவடுதுறையில் இருந்த நமச்சிவாயத் தம்பிரான் என்பவர் இருபாவிருபஃதென்பதற்கு உரை வகுத்தனர். பாண்டிப் பெருமாள் என்பார் சிவஞானபோதத்திற்கோர் உரைகண்டனர்.

### அமிர்தகவிராயர்

பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே அமிர்தகவி ராயரென்னும் புலவர், பாண்டி நாட்டிற் பொன்னுங்காலில், வேளாளகுல திலகராய்த்தோன்றி இராமநாதபுரத் தலைவராய இரகுநாதசேதுபதி அவையினைப் பொலிவுறச் செய்தனர். சேதுபதி பல புலவரை நோக்கி அகப்பொருட்டுறை ஒவ்வொன்றிற்கும் பல பாடல்கள் பாடக்கூடுமோ வென்ன, அமுதகவி ‘நான் ‘ஊ’ பாடுவேன்’ றென்றனர். பிறர், இவர்

நான்கு நூறு பாடுகிறேன் என்கிறார் என்று அழுத் காற்றிறு விழித்துப் பேச, அவர் அத்தனைப் பாடல் களைப்பாடத் துணிந்து 'நாணிக்கண் புதைத்தல் என்னும் ஒரு துறைக்கே நானூறு பாட்டுப்பாடி 'ஒரு துறைக்கோவை' யென்னும் பிரபந்தத்தை முடித்த தும், புலவரும் மன்னரும் அவர் திறமையை வியந்த னர். அதில் ஒரு அருமையான பாடல் வருமாறு:—

அங்கந் கலிங்க மலையாள மீழமனைத்தும் வென்ற
சிங்க விசய சயரகுநாதன் சிலம்பிற் பொன்னே
சங்கிலி யாரையுங் கண்டேன் பரவை தனையுங்கண்டால்
மங்கல சுந்தர னென்றெனை யேதொழு மண்டலமே.

## அந்தகக் கவி வீரராகவ முதலியார்

அந்தகக் கவி வீரராகவ முதலியார் என்பவர் தொண்டை மண்டலத்திற் பூதூரிற் பிறந்தவர். இவர் குருடரா யிருந்தமையால், "ஏடாயிரங் கோடி யெழு தாது தன்மனத் தெழுதிப் படித்த விரகர்." இவர் இலங்கை சென்று பராசசேகர மன்னர்பால் யானை முதலிய சிறந்த பரிசில் பெற்றவர். இவர் சேயூர் முரு கன் பிள்ளைத்தமிழ், சேயூர்க்கலம்பகம், திருவாரூருலா கழுக்குன்றமாலை, சந்திரவாணன் கோவை, கழுக்குன் றப் புராண முதலியன இயற்றியவர். பரராச மன்ன ரிடம் பொற்பந்தம் பெற்றபோது இவர் பாடியது:

பொங்குமிடி யின்பந்தம் போயதே யென்கவிதைக்
கெங்கும் விருதுபந்த மேற்றதே—குங்குமந்தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம்
பொற்பந்த மின்றளித்த போது.

மன்னன் அம்பும் வில்லுங் கையிற்கொண்டு தன் கோலம் எவ்வாறிருந்ததென்று கேட்டபோது இவர் பாடியது,

வாழு மிலங்கைக்கோ மானில்லை மானில்லை
எழு மராமரமோ விங்கில்லை—ஆழி
யலையடைத்த செங்கை யபிராமா வின்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு.

## அரசகேசரி

பரராசசேகர மன்னனின் மருகனாகிய அரச கேசரி யென்பார் யாழ்ப்பாணத்து நல்லூரிற் பிறந்து வளர்ந்து, ஆழ்வார் திருநகரியிலிருந்த ஒரு கவிராயரிடம் தமிழ் கற்றுத்தேர்ந்து காளிதாசரின் இரகுவமிசத்தைச் செந்தமிழின் மொழி பெயர்த்தவர். திலீப மன்னர் காமதேனுவை வணங்கி இரகுவைப் பெற்றதையும், இரகு அயனையும், அயன் தசரதனையும் பெற்றதையும், தசரதன் இராமனையும், இராமன் குசனையும் பெற்றதையுங் கூறுவது; அந்நூல் அரிய சொன்னடையுடையது. இவ்வாசிரியரது சங்கநூற் புலமையும் இதன்கண் வெளியாகின்றது. இதில்தமிழ்ச் சொற்களைமிக்குப் பயின்று வந்தமை காண்க.

“புன்கட் குறளா வேட்டை யிளவா வெறுப் பொய்யேற்
றின்கட் பேரவா மாதராரவா விந்த விறைவன்
றன்கட் பட்டவர் தழைந்தவா விலை யெனிற் றவறில்
என்கட் பட்டவா வெய்திடு மனத்திடை யிவற்கே”

இது நடுக்காலக் கம்பர் தமிழை யொப்பதென்ப.

## அழகிய சிற்றம்பலக் கவிராயர்

அழகிய சிற்றம்பலக் கவிராயர் என்பார் பாண்டி நாட்டிலே மிதிலைப்பட்டியார். இவர் தளவாய் இரகுநாத சேதுபதி செய்த திருப்பணிகளையும், கல்வி, செல்வம் பிறவற்றையும் வியந்தோதித் 'தளசிங்க மாலை" யென்னும் அழகிய சிறுகாப்பியத்தைக் கட்டளைக் கலித்துறையிற் பாடினவர்.

“ ஞாயிறு போய்விழத் திங்கள்வந் தெய்திட நண்ணியசெவ்
வாயனல் வீசப் புதனம்பு தாவநல் வியாழன்வர
வேயுறு வெள்ளி வளைசோர நாலுவளை மேவுதற்குத்
தாய்சனி யாயினை ரகுநாத தளசிங்கமே ”

## இரேவணசித்தர்

இரேவணசித்த ரென்பார் பேரளத்திற் பிறந்து சிதம்பரத்திலிருந்த வேளாளப்புலவர். இவர் 'சிவ ஞானதீப'மென்னும் ஞானநூலும், பட்டீச்சுரப் புராணமும், அகராதி நிகண்டும் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பாதியி லியற்றினர்.

## வைத்தியநாத தேசிகர்

இந்நூற்றாண்டி னிறுதியிலே தோன்றியது திருவாரூரில் வதிந்த வைத்தியநாத தேசிகரது இலக்கண விளக்கம். இது நன்னூலையும், பதினோராவது நூற்றாண்டிற்குப் பின் தோன்றிய பொருள், யாப்பு, அணி நூல்களையும் பின்பற்றி ஐந்திலக்கணத்தையும் விரித்துக் கூறும் பெருநூல். பிற்காலத்தார்க்குத் தொல்காப்பியம்போன்றிலங்கிய திதுவே. ஆசிரியர் சிவஞான யோகிகள் இந்நூற் குற்றங்களை 'இலக்கண விளக்கச் சூறாவளி யென்னு நூலுள் மறுத்தனர்.

இவரது பிறநூல்கள் திருவாரூர்ப் பன்மணிமாலை, நல்லூர்ப் புராணம், மயிலம்மை பிள்ளைத்தமிழ் என்பன. படிக்காசுப் புலவர் முதலியவர்க்கு இவராசிரியர். யாழ்பாணத்து வைத்தியநாத முனிவரின் இவர் வேறுவர். அவர் சிதம்பரத்திற்றங்கி வியாக்கிரபாத புராணமென்னு நூல் செய்தவர்.

## சொக்கநாதப் புலவர்

சோழநாட்டிலே மாதையென்னுமூரிற் பிறந்து மதுரையிலே அரங்க கிருட்ணப்ப நாயக்கரின் (1682-1689) அமைச்சராய்த் திகழ்ந்த திருவேங்கட நாதய்யரென்பார், வைத்தியநாத நாவலரைப்பெரிதும் பேணி இலக்கண விளக்க மியற்றுவித்தனர். பிரபோத சந்திரோதயமென்னும் வேதாந்த நூலை நாடகமாக வியற்றினவர் இவரே. தொண்டை நாட்டினராகிய சொக்கநாதப் புலவரென்பார் இவரைப் பாடிய பாட்டு வருமாறு:

"எல்லப்பனம் மையப்பன் றருதிருவேங்
கடராம னெழிற்சிராமன்
வல்லக்கொண் டமனுடனே மாதைவேங்க
டேசனைப்போல் வரிசைதந்தான்
செல்லத்தம் பியருடனே மாவையில்வாழ்
கறுப்பண்ணன் றெருவீதிக்கே
பல்லக்குத் தான்சுமந்தா னதுநமக்கோ
ராயிரம்பொன் பரிசுதானே"

இப்புலவர் நகைச்சுவை யமைத்துப் பாடுதலிற் சிறந்தவர்.

"செல்லாரும் பொழில்புடைசூழ் புலியூரம்
பலவாண தேவா வும்மைக்
கல்லாலும் வில்லாலுஞ் செருப்பாலும்
பிரம்பாலுங் கடிந்து சாடும்
எல்லாரு நல்லவரென் றெண்ணியரு
ளீந்ததென்ன விகழ்ச்சியொன்றும்
சொல்லாமன் மலரால்விட் டெறிந்தவனைக்
காய்ந்ததென்ன சொல்லுவீரே."

## சுவாமிநாத தேசிகர்

திருவாவடுதுறை யாதீனத்தலைவர்களில், ஐந்தாவது பட்டத்திலுறைந்த மாசிலாமணி தேசிகர் பால் ஞானதீக்கையும் சங்காபிடேகமும் பெற்ற ஈசான தேசிகர் அல்லது சுவாமிநாத தேசிகர் திருநெல்வேலியில் மயிலேறும்பெருமாள்பிள்ளையிடந் தமிழ்க் கல்வியும், செப்பறைக் கனகசபாபதி சிவாசாரியரிடத்தே வடமொழிக்கலையும் பயின்றனர். இவரும் இவர் காலத்தில் ஆழ்வார்திருநகரியில் வாழ்ந்த சுப்பிரமணிய தீக்கிதரும், திருவாரூரில் வதிந்த இலக்கண விளக்க ஆசிரியராய வைத்தியநாததேசிகரும் வடமொழிக்குந் தமிழ்மொழிக்கும் இலக்கணம் ஒன்றென்ற கொள்கை யுடையவர்கள். சுவாமிநாத தேசிகர் இலக்கணக்கொத்து என்ற தமது நூலில், தமிழைச் சற்றிழித்துக் கூறினமையால், இவர் வரலாற்று உணர்ச்சியில்லாமல் வடமொழிப் பற்று மிகவுமுடையரென்பது தெளியப்படும்.

"ஐந்தெழுத் தாலொரு பாடையு முண்டென
அறையவு நாணுவ ரறிவுடை யோரே,"

என்று தமிழைக் கூறுமிடத்துப் பொது வெழுத்துக் களை வடமொழிக்கேயுரிய எழுத்துக்க ளென்றது திரி புணர்ச்சியா லன்றோ? இவர்தொல்காப்பிடம், திருவள் ளுவர், திருக்கோவையார் மூன்றினுமே தமிழிற் சிறந்த கருத்துக்கள் காணப்படுமென்றும், இன்னுந் தெரி யாதன உளவாமாயின் வடமொழியிற் காண்கவென் றுங் கூறியது, இவரது ஒருபாற் கோடிய பற்றினை யுணர்த்தும். தசகாரியமென்ற பண்டார சாத்திரத்தை யும், சிவஞான போத சூர்ணிக்கொத்தையும் இவரியற் றின ரென்ப. இவர் சங்கர நமச்சிவாயப்புலவர் முதலி யோர்க்குத் தமிழ் கற்பித்தவர்.

## சுப்பிரமணிய தீக்கிதர்.

சுப்பிரமணிய தீக்கிதர் என்னும் பிராமணர் பிர யோகவிவேக மென்னுமோர் நூல் செய்து தமிழுக் கும் வடமொழிக்கும் இலக்கண மொன்றென்று காட்டு முகத்தான், வடமொழிக் கேற்றங் கற்பிக்க முன் வந் தவர். இவர் கொள்கை ஆசிரியர் சிவஞான யோகி களால், சூத்திர விருத்தியில் மறுக்கப்பட் டொழிந் தது.

## படிக்காசுப் புலவர்.

படிக்காசுப் புலவர் தொண்டை மண்டலத்திற் களர்தையிற் பிறந்த செங்குந்த மரபினர். இவர் காலம்

1686-1723 வரையாகும். இவர் இலக்கண விளக்க மியற்றிய வைத்தியநாத நாவலர்க்கு மாணவர். இவர் சந்தப் பாட்டில் வல்லவரென்பது 'பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலாலொருவர் பகரொணுதே' என்பதனுற் றெளிவு. தொண்டைமண்டல சதகம் பாடினவரிவரே. இரகுநாதசேதுபதி காலத்திற் காயற்பட்டினத்திருந்த சீதக்காதியென்னு மகமதிய வள்ளலை இவர் பாடிய தனிக்கவிகள் பலவுள்ளன.

"தேட்டாளன் காயற் றுரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்ப நாட்டிவைத் தான்றமிழ் நாவலரை
ஒட்டாண்டி யாக்கி யவர்கள்தம் வாயில் ஒருபிடிமண்
போட்டா னவனும் ஒளித்தான் சமாதிக் குழிபுகுந்தே,"

என்பது சீதக்காதி இறந்தபின் இவர் அவனைப் பாடிய பாட்டு.

வேறார்க் கலம்பகமென்பதும் இவர் பாடியதே. 'அடகெடுவாய் பல் தொழிலு'மென்று தொடங்குங் கவியு மிவர் பாடியதென்ப.

## உமாறுப்புலவர்.

உமாறுப்புலவர் என்னும் மகமதியப் புலவர் சீறாப்புராணம் பாடி சீதக்காதியின் மந்திரியாகிய அப்துல்காசி முன் அரங்கேற்றிப் பரிசு பெற்றனர். அது 12000 பாட்டுடையது.

## சவ்வாதுப்புலவர்

சவ்வாதுப்புலவரென்னு மகமதியர் 'முகையதீன் ஆண்டவன் பிள்ளைத்தமிழ்' என்று ஒரு சிறுகாப்பியஞ் செய்தவர். இவர் மைத்துனர், ஒரு புலவர், அரேபியாவில் மெடிஞ நகரைச் சிறப்பித்து ஓர் அந்தாதி பாடியுள்ளார். இவர் காலத்திலே சர்க்கரைப் புலவரென்னும் சைவப் புலவர் (1645-70) இராமநாதபுரம் கடாரவூரினர் திருச்செந்தூர்க் கோவை பாடினர். இரண்டாவது சர்க்கரைப்புலவர் மிழலைச்சதகம் பாடியுள்ளார். அவர் பரம்பரையில் இராமசாமிப்புலவர் என்பார் அண்ணுமலைப் பல்கலைக்கழகத்திலொரு தமிழ்ஆசிரியராய்த் திகழ்கின்றார்.

## நமச்சிவாயப்புலவர்.

நமச்சிவாயப்புலவர் பிரம்பூர் ஆநந்தரங்கனைப் புகழ்ந்து பாடி யிருத்தலால், அவரைத் தொண்டை நாட்டிலிருந்தவராகக் கூறுப. அவர் பாடிய தனிப் பாடல்கள் பலவுள்ளன. திருக்கருவை, திருக்காளத்தி, திருக்குடந்தை, திருக்கழுக்குன்றம், தில்லை, திருமாலிருஞ்சோலை, மதுரை முதலான திருப்பதிகளிலுள்ள கடவுளரையும் அவர் பரிந்து பாடியிருக்கின்றார். அவர் ஆநந்தரங்கப் பிரபுவைப் பாடியபாட்டு வருமாறு:

பானுகிர ணம்பார்க்கும் பங்கே ருகநிலவு
நானும்வரப் பார்க்குஞ் சகோரங்கள்—வானமரும்
மையைப்பார்க் கும்மயில்கண் மாவிசயா நந்தரங்கன்
கையைப்பார்க் கும்புலவோர் கண்.

## மதுரகவிராயர்

மதுரகவிராயர் தொண்டைநாட்டு அகரம்பேட்டிற் பிறந்தவர். இவர் திருக்கச்சூர் நொண்டிநாடகம் பாடியிருக்கின்றார். இவர் பல தனிப்பாடல்களும் இயற்றினர். இவரும் பிரம்பூர் ஆநந்தரங்கன் மீது தனிப்பாடல்கள் பாடியுள்ளார்.

## பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்

பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் தொண்டைநாட்டினர். இவர் படிக்காசுப்புலவர் கவியைப் புகழ்ந்து பாடியிருப்பதோடு பலப்பல தனிப்பாடல்களும் இயற்றியிருக்கின்றனர்.

## அரிதாசர்.

பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அரிதாசர் என்னும் வைணவப்புலவர் 2000 பாடல்களில் இருசமயவிளக்க மென்னும் தத்துவ நூலெழுதி அதன்கண் சைவம், சுமார்த்தம், வைணவ சமயங்களைப் பற்றித் தாமறிந்ததை விரித்துரைத்தார்.

## வடமலையப்பபிள்ளையன்

1693 கி. பி யில் திருநெல்வேலி இரசை வடமலையப்பப்பிள்ளை யனென்பவர் மச்சபுராண மியற்றியவர்; ‘வடமலைவெண்பா’ வென்பது காவை வடமலையப்ப பிள்ளையன்மீது ஏகசந்தக்கிராகி யென்பார் பாடியது.

திருக்குருகூர்ச் சிறியரத்தினக் கவிராய ரென்பவர் வடமலையப்பப் பிள்ளையனைப் புகழ்ந்து 'புலவராற்றுப்படை'யைப் பாடினர்.

## சிவப்பிரகாசமுனிவர் (காலம் 1652. கி. பி.)

கற்பனைக் களஞ்சியமென்று போற்றப்படும் சிவப்பிரகாச சுவாமிகள் தொண்டைநாட்டிற் றுறைமங்கல மென்னுமூரில் வாழ்ந்தவர். இவர் தம்பியர் வேலைய சுவாமிகள், கருணைப்பிரகாச ரென்னுமிருவராவர். இவர் தகப்பனுர் பூசைச்சாமியை யிழந்தமையால், இலிங்கதாரணஞ் செய்துகொண்டு வீரசைவரானுர். திருநெல்வேலியிற் றருமபுர வாதீனத்திலிருந்த வெள்ளியம்பலத் தம்பிரானிடம் இவர் இலக்கணங் கற்றவர்; விரும்பியவண்ணங் கவிபாடவல்லவர். வெள்ளியம்பலத்தம்பிரானுக்கு எதிரியாயிருந்த புலவரோடு வாதாடித் திருச்செந்தூர் முருகர்மீது நீரோட்டக யமகவந்தாதி யென்னும் முப்பது பாட்டுப் பாடி அவரை இவர் வென்ருர். இதழ்கள் சேராமற்சொல்லு மொழிகளையே யமைத்துப் பாடுவது இத்தகைய சிறு காப்பியம். இவரது நால்வர் நான்மணிமாலை சைவசித்தாந்த சமயத்தலைவர்களது பெருமையை விளக்குவதில் இணையற்றது.

"விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ,
வாதிசேர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனே,
யாதோ சிறந்த தென்குவி ராயின்,

வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்.
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்க
டொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே."

நீதி நூல்களுள் நன்னெறி யியற்றியவர் இவரே. சீகாளத்திப் புராணத்தில் நடுஇரண்டு சருக்கம் இவர் பாடினர். இவர் தம்பி கருணைப்பிரகாசர் சீகாளத்திச் சருக்கம்வரை பாடினர். வேலைய தேசிகர் அதில் எஞ்சிய பன்னிரண்டு சருக்கமும் பாடினர். ஆக அப்புராணம் மூவராற் பாடப்பெற்றது.

## கருணைப்பிரகாசர்.

சிவப்பிரகாசரைக் கூறுமிடத்து, இறைமுதனுமத் தோடியைதரும் விளக்கப்பேரோன் என்றனர். இவ்வாறு பல விடங்களிற் சிறப்புப் பெயர்களைப் பொதுச் சொற்றொடர்களால் விளக்குதல் இவர்க்கு வழக்கம். இவர் 'இட்டலிங்கவகவல்' என்னுஞ் சிறுநூலு மியற்றினர். சிவப்பிரகாச சுவாமிகள் திருக்கூவப் புராணம், கைத்தல மாலை, வெங்கைக்கோவை, சோணசைல மாலை முதலிய பலநூல் செய்தவர். இவரது வடமொழித் தேர்ச்சி தர்க்கபாடைமொழிபெயர்ப்பு முதலியவற்றால் விளங்கும். இவர் தமது வீரசைவ சமய சம்பந்தமாகப் பிரபுலிங்கலீலையென்னும் பெருங்

காப்பிய மியற்றினர். அது கற்பனை நயங்களும் சொற் பொருணயங்களும் பொதுளியுள்ளது. மேலும் இவர் ஏசுமத நிராகரணமென்னுநூல் செய்து வீரமாமுனிவர் தமது கிறித்து சமயத்தைப் பரவவொட்டாது தடுத்தனர்.

## சாந்தலிங்க சுவாமிகள்.

தொண்டை நாட்டிலே பேறையூரிலே சங்கம குலத்திலே சாந்தலிங்க சுவாமிகளென்னும் பெரியார் திகழ்ந்தனர். அவர் கொள்கைகள் வீரசைவச் சார் பாயன. அவர் பேரூரிலே மடமொன்று நிறுவி அவணிருந்து வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார், கொலைமறுத்தல், நெஞ்சுவிடு தூது முதலிய தத்துவ நூல்களியற்றினர். சாந்தலிங்க சுவாமிகளது மாணுக்கராய்த் திருப்பேரூரில் வாழ்ந்த சிதம்பரசுவாமிகள் தமது ஆசிரியரது நூல்களுக் குரைவகுத்தனர். உபதேசவுண்மை, உபதேசக் கட்டளை, பஞ்சதிகார விளக்கம் என்னும் ஞானநூல்களும், திருப்பேரூர்ச் சந்நிதி முறை, தோத்திரமாலை முதலிய துதிநூல்களும், திருப்பாதிரிப்புலியூர்ப் புராணமு மியற்றினர்.

## கோனேரியப்ப முதலியார்.

கோனேரியப்ப முதலியார் உபதேசகாண்ட மியற்றிய காலமுமதுவே. மறைஞானதேசிகரென்பாரொருவர் தில்லையில் வாழ்ந்திருந்த சைவர். அவர் தமிழில் அருணகிரிப்புராணம் இயற்றினவர்.

## கண்ணுடைய வள்ளலாரும் பிறரும்.

கண்ணுடைய வள்ளல் சீர்காழியிற் றிகழ்ந்த சைவத்துறவி. ஒழிவிலொடுக்க மென்னும் ஐக்கிய வாதநூல் செய்தவர் இவர். இதற்குரை கண்டவர் திருப்பேரூர்ச் சிதம்பர சுவாமிகள்.

சிவஞானவள்ளல் வள்ளலார் சரித்திர மியற்றி னவர்.

சட்டைநாதவள்ளல் வாதுளாகமச் சாரமாகச் சதாசிவ ரூபமியற்றினர்.

## சிதம்பரநாத முனிவர்.

தருமபுரம் பத்தாவது பட்டத்தி லெழுந்தருளி யிருந்த சிவஞான தேசிகர்பால் ஞானோபதேசம் பெற்ற சிதம்பரநாத முனிவர் என்பார், குறட்பாவால், 'நித்திய கன்மநெறி' யென்னு நூலியற்றினர்.

## வீரமாமுனிவர்.

வீரமாமுனிவர் (1680 - 1746) பிரான்சு தேசத் திலிருந்து தென் தமிழ்நாட்டிற்கு வந்து திருநெல் வேலிச்சில்லாவில் வடக்கன்குளம் என்னுமிடத்தில் 1714 - ல் தங்கித் தமது பாதிரிவேலையைத் தொடங் கினர். அவர் தமிழரைப்போலவே வேடம்பூண்டு இந்திய குருக்கள்போலச் சிவிகையிற் சென்றனர். தமிழ்க்கல்வியை நன்கு பயின்று பாடுந்திறமைபெற்று 1724 - ல் இயேசுவின் வாழ்க்கையைக் கூறுந் 'தேம்பா வணி' யென்னும் பெருங்காப்பிய மியற்றினர்; 1729-ல்

அதற்குரை வகுத்தனர். இவர் ஐந்திலக்கணத்தொன் னூலென்னும் இலக்கண நூலும், சதுரகராதியும் வே தியரொழுக்கமும் இயற்றினர். இவரது அவிவேக பூரண குருகதையென்பது ஒரு வேடிக்கை நூல். இவர் 1746-ல் திருநெல்வேலிச்சில்லாவில் மரண மடைந்தார். இவரது பிற நூல்கள் திருக்காவலூர்க் கலம்பகம், வேத விளக்கம், அடைக்கலமாலை யென் பன. வீரமா முனிவர்க்குப் பெரிதுந் துணைபுரிந்த தமிழர் சுப்பிரதீபக்கவிராய ரென்பவர், சைவராயி ருந்து கிறித்தவரானவர். இவர் 'நாமக்கூளப்பன் காதல்' என்னு நூலினை யியற்றித் திரிசிரபுர நாயக்க மன்னனை மகிழ்வித்தனரென்ப.

சீரங்கத்திலிருந்த அட்டாவதானி யென்னும் பிராமணப் புலவர் நாமக்கூளப்ப நாயக்கனுக்கு விறலி விடுதூது பாடிக்கொடுத்தார். இது காமநூல்.

## தாயுமான அடிகள்.

பதினேழாம் நூற்றாண்டிலே (1608 - 1664) திக ழ்ந்த பெரியார் தாயுமான சுவாமிகள். இவரது பாடல் கள் இப்போது பலராற் போற்றப் படுதல் போலப் பிறபாடல்கள் போற்றப்படவில்லை. தாயுமானவர் திருமறைக்காட்டிலே சைவ வேளாளர் குலத்தே கேடிலியப்பபிள்ளையின் இரண்டாவது மகனாகப் பிறந்தவர். திரிசிரபுரத்தில் விசய ரகுநாத சொக்க லிங்க நாயக்கரின் கணக்கராகக் கேடிலியப்பபிள்ளை யமர்ந்தபோது தாயுமானசுவாமியின் திருவருளாற் பிறந்து அக்கடவுளின் பெயரே இடப்பெற்று இவர்

வடமொழி தென்மொழி யிரண்டிலும் பயிற்சியுற்று மௌனகுரு வென்பாரிடம் அறிவுரை பெற்றனர். தந்தையா ரிறந்தவுடன் அரசவேலையிலமர்ந்து நாயக்க ரிறந்தபின் அரசி தன்பாற் காட்டிய தவறிய காதல் காரணமாக இவர் ஒருநாளிரவு ஊரைவிட்டு ஓடிப் போய் இராமநாதபுரத்தில் தம் தமையனாரோ டிருந்தார். இவர் அவரது கட்டாயத்திற்காக ஒரு பெண்மணியை மணந்து ஒரு குழந்தை பிறந்தவுடன் அவளை யிழந்து துறவுபூண்டு யோகஞானங்களிற் றலைசிறந்தார். இவர் சைவசமயத்தின் விரிந்த நோக்கங்களைத் தமது இனிய பாடல்களில் வெளியிட்டார்.

## நல்லாப்பிள்ளை.

1732-ல் நல்லாப்பிள்ளை யென்பார் தொண்டை நாட்டிலே மதலம்பேடு என்னுமூரிற் பிறந்தவர். வில்லிபாரதத்தைப் பதினொன்காயிரம் பாட்டுடைய பெருநூலாக்கினர்.

## காளிமுத்து.

தாசி காளிமுத்து என்பவள் வருணகுலாதித்தன் மடல் பாடினள்.

## சேகராசசேகர மன்னன்.

இக்காலத்திலே, இலங்கையிலே பராசசேகரனுக்குப் பின்னவன் சேகராசசேகர மன்னன், தன் பெயரால் ஒரு மாலை நூல் தோற்றுவித்தான். இவன் தமிழை வளர்த்தவன்; தக்கிண கைலாச புராணம் பாடினவன்.

## கடிகை முத்துப் புலவர்.

திருநெல்வேலிச்சில்லா, எட்டையபுரம் குறுநிலமன்னரின் அரண்மனைப் பாவலராய் இவர் விளங்கினர்; சிலேடை, யமகம், திரிபு அமைத்துப் பாடல் பாடுவதில் வல்லவர். இவர் வெங்கடேசுர எட்டப்பூபதிமேற் பல தனிப்பாடல் பாடினர். இவர்பாடிய சமுத்திர விலாசம் என்னுநூல் 'கழிக்கரைப் புலம்பல்' என்னுந் துறையொன்றின் மேலதே. சிவகிரிச் செமீன்தார் மீது பாடிய திக்குவிசயமும் திருவிடைமருதூரந்தாதியும் இவரது பிறநூல்கள்.

## திரிகூடராசப்பக்கவிராயர்.

இதேகாலத்திற் பாண்டிநாட்டிலே திருக்குற்றாலத் தருகிலுள்ள மேலகரத்திற் றிகழ்ந்த சிறந்தகவி திரிகூடராசப்பக்கவிராயர். இவரது குற்றாலக்குறவஞ்சி மிக அழகான சிறுகாப்பியம். குறவஞ்சிப் பிரபந்தங்களுட் டலைசிறந்தது அதுவே. இவர் குற்றாலத் தலபுராணம், குற்றாலமாலை, குற்றாலச்சிலேடை, குற்றால யமகவந்தாதி முதலிய பன்னூலியற்றினவர்.

## அருணாசலக்கவிராயர்.

சீகாழியிலே அருணாசலக்கவிராய ரென்பவர் (1712-1779) இராமநாடகஞ் செய்து நாடகத் தமிழைப் புதுப்பித்தார். சீகாழிப் புராண மியற்றினவரு மவரே. அவரியற்றிய பிற நூல்கள் அசோமுகி நாடகம், சீகாழிக்கோவை, அனுமார் பிள்ளைத்

தமிழ் என்பன. அவர் தருமபுரத்திலிருந்த அம்பலவாணக் கவிராயரிடங் கல்வி பயின்றவர்; தரங்கம்பாடி வேளாள மரபினர். தில்லையாடி மணலி முத்துக் கிருட்டின முதலியாரிடம் இராமநாடகத்தை அவர் அரங்கேற்றினர்.

## வரதபண்டிதர்.

வரதபண்டிதர் யாழ்ப்பாணத்துச் சுன்னாகவூரார்; சைவ அந்தணர். இவர் சிவராத்திரிப் புராணம் பாடினவர். இவர் பாடிய கிள்ளை விடுதூது முதலிய சிறுகாப்பியங்களுஞ் சிலவுள.

## நெல்லைநாதர்.

இவர்க்குப் பின் பாண்டி நாட்டிலே நெல்லைநாதர் என்பார் பாடிய சிவராத்திரிப் புராணமொன்றுண்டு.

## குகைநமச்சிவாயரும் குருநமச்சிவாயரும்.

குகைநமச்சிவாயர் என்பார் திருவண்ணமலையில் ஒரு குகையில் யோகம் இயற்றிக் கொண்டிருந்த ஒரு சித்தர். அவர் செய்தநூல் அருணகிரியந்தாதி. அவருடைய மாணக்கர் குருநமச்சிவாயர் என்பவர். அவர் செய்த நூல்கள் சிதம்பர வெண்பா, அண்ணமலை வெண்பா, பரமரகசிய மாலையென்பன.

## மறைஞான சம்பந்தர்.

மறைஞான சம்பந்தர் சிதம்பரத்திலிருந்த துறவியார்; ஆகம நூற்பயிற்சி சான்றவர். அவர் சிவதரு

"பழிக்கே சுழன்றுவெம் பாவங்களே செய்து பாழ்நரகக்
குழிக்கே யழுந்துங் கயவர்தம் மோடென்ன கூட்டினியே,"

### அரிபத்த நாவலர்.

அரிபத்த நாவலர் 'இராஜதந்திர இலக்கண'மென்னு நூலினாசிரியர். இவர் திருப்பெருந்துறையிலிருந்த வேளாண் புலவர். அரிபத்த நாவலரென்பார் அழகர் கலம்பக மியற்றினரெனவும், வேம்பத்தூரிலிருந்த தமிழ்ச் சங்கத்தார் அழகர் பிள்ளைத்தமி ழியற்றினரென்வும் கூறுப. இச்சங்கத்தாரே அழகர் கலம்பக மியற்றின ரென்பாருமுளர்.

### நமச்சிவாயக்கவிராயர்.

பாண்டி நாட்டிலே விக்கிரம சிங்கபுரமென்னு மூரிலிருந்த நமச்சிவாயக் கவிராயர் பாவநாசத்து உலகம்மைமீது உலகம்மையந்தாதி முதலிய பல நூல்களியற்றினார். சிங்கைச் 'சிலேடை வெண்பா' வென்னு நூலும் இவரியற்றியதே. அதனின்று பாட்டொன்று வருமாறு:—

"மாலைக் குழன்மடவார் வாய்விழியு மாளிகையுஞ்
சேலைக் கொடிதிகழுஞ் சிங்கையே—ஆலைக்
கரும்பனைக்கா யங்கெடுத்தார் காலருந்தத் தாட்டில்
விரும்பனைக்கா யங்கெடுத்தார் வீடு."

### அருமருந்து தேசிகர்.

அருமருந்து தேசிகர் திருச்செந்தூர்ச் சைவப் புலவர். அவர் அருட்பெயருள் விளக்கநிகண்டென்னு மொரு

நூல் செய்தனர். அஃது எழுநூறு விருத்தமுடை யது. அவர் அதனைத் தில்லையி லரங்கேற்றினர்.

## குமரகுருபரதேசிகர்.

குமரகுருபரதேசிக ரென்பார் ஆத்தும ராமாய ணம், ஞானக்குறவஞ்சி யென்னு நூல்களை யருளிச் செய்தார்.

## குமாரசாமிதேசிகர்

பாண்டி நாட்டிலே வீரவநல்லூரிற் பிறந்து திருச்செந்தூராதீனத்தில் வசித்த குமாரசாமிதேசிகர் 'குமாரசுவாமியம்' என்னுஞ் சோதிடநூலொன் றியற்றினர்.

## இராமானந்த சுவாமிகள்.

இராமானந்தசுவாமிகள் என்பார் சங்கற்பநிராக ரண மென்னு நூலியற்றினர். இது வேதாந்த நூல். இது அருணசல சுவாமிகள் இயற்றின உரையுடன் ங்குகின்றது.

## தாண்டவராய சுவாமிகள்.

தாண்டவராய சுவாமிகள் இயற்றின கைவல்ய வநீதத்திற்கும் அருணசல சுவாமிகள் உரை கண் டனர்.

## சடகோபதாசர்.

சடகோபதாச ரென்னும் வைணவப்புலவர் 'அரி சமயதீப' மென்ற பெருநூலியற்றினர்.

## அழகிய நம்பி.

அழகிய நம்பி யென்பார் குருபரம்பரை யென்னும் வைணவக் குருமார் சரித்திரம் விரிவாகச் செய்து முடித்தார்.

## அப்புள்ளையார்.

அப்புள்ளையார் ஆழ்வார்கள் வாழித் திருநாமம், திருவந்தாதியுரை, திருவிருத்தவுரை யியற்றினர்.

## சாந்தக்கவிராயர்.

சாந்தக்கவிராய ரென்பவர் 'இரங்கேசவெண்பா' வென்னு நூலில், ஒவ்வொரு பாட்டிலும் ஒரு திருக்குறளும், அதற்குதாரணமு மமைத்துள்ளார். இவர் வேளாளர்.

## சாந்துப்புலவர்.

சாந்துப்புலவ ரென்பார் பாண்டி நாட்டுச் சிறுகம்பையூரினர்; மயூரகிரிக்கோவை பாடினவர்.

## உபேந்திராசிரியர்.

உபேந்திராசிரிய ரென்பார் 'சினேந்திர மாலை' யென்னுஞ் சோதிட நூலியற்றினர்.

## மீகாமன்.

கும்பகோணம் வலங்கிமானிலுள்ள மீகாமனென்பான் 'அறிவானந்த சித்தி' யென்னு நூலியற்றினன்.

## நைநாரச்சாம் பிள்ளை.

நைநாரச்சாம் பிள்ளை யென்பவர் 'சரமோபாய நிர்ணய' மென்னு நூலியற்றினர்.

## விசயராகவப் பிள்ளை.

விசயராகவப் பிள்ளை யென்பா ரெழுதிய குருபரம்பரைப் புராணம் 4361 செய்யுளுடையது.

## சதகங்கள்.

சாந்தலிங்கக் கவிராயரென்பார் போலி வேடத்தாரை எள்ளி நகையாடு மியல்பினர்; சோழநாட்டுத் தண்டலையென்னு மூரினர். இவர் பாடிய தண்டலையார் சதக மென்ற சைவத்தோத்திர நூலுள்,

" காதிலேகுண் டலங்கள் கையிலே செபமாலை
 கழுத்தில் மார்பில்
மீதிலே தாழ்வடங்கள் மனதிலே காவடவாம்
 வேடம் பூண்போன்
தழதழத்துப் பாடுவதின் மவுனமாயிருப்பதுவே
 தக்கதாகும்,"

என்றுங்கு ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு பழமொழி யமைத்திருப்பதால் அந்நூல் பழமொழி விளக்க மெனவும் பெயர் பெறும்.

அம்பலவாணக் கவிராயர் அறப்பளீசுரசதகம் பாடினவர். குருபாததாச ரென்பார் குமரேசசதக நூலாசிரியர். நாராயணபாரதி யென்பார் தொண்டை நாட்டு வெண்மணி யூரினர்; வைணவப் பிராமணர்.

இவர் திருவேங்கட சதகம் பாடியவர். இந்நூற்கு மணவாள நாராயண சதகமென்றும் பெயர். கோவிந்த சதகமென்பது மிவரியற்றினதே. திவ்வியகவி நாராயணதாச ரென்பார் நாராயண சதகமென்று வேறொரு நூல் யாத்தனர். கோபாலகிருட்டினதாச ரென்பார் எம்பிரான்சதக மென்ற நூலியற்றினர்.

## பகழிக்கூத்தர்.

பகழிக்கூத்த ரென்பவர் திருநெல்வேலிக்கடுத்த சந்நியாசிக் கிராமத்தினர். திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழால் அவர் பெயர் விளங்குகின்றது.

## வென்றிமாலைக் கவிராயர்.

வென்றிமாலைக் கவிராய ரென்பார் திருச்செந்தூரார்; திருச்செந்தூர்ப் புராணஞ் செய்தவர்.

## ஞானக்கூத்தர்.

ஞானக்கூத்த ரென்பவர் சிவன்பாக்கத்துச் சைவத்துறவி. இவர் விருத்தாசல புராணம் பாடினவர்.

## மார்க்கசகாய தேவர்.

மார்க்கசகாய தேவர் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் பாடினர்.

## தலைமலைகண்டதேவர்.

தலைமலைகண்டதேவர் திருநெல்வேலிச் சீமை காடடர்ந்த குடியார்; திருப்புடை மருதூரீசர்மீது மருதூர் யமகவந்தாதி பாடினவர்.

### சொக்கப்ப நாவலர்.

சொக்கப்ப நாவலர் தஞ்சை வாணன் கோவைக்கு உரைவகுத்தார்.

## அதிகாரம் உஉ.

# சிவஞானமுனிவர் காலம்.



## (பதினெட்டாம் நூற்றாண்டு)

### சிவஞானமுனிவர்.

சிவஞானமுனிவர் பாண்டி நாட்டிலே பாவநாசத்திருப்பதிக் கருகிலுள்ள விக்கிரமசிங்க புரத்திலே சைவவேளாளர் குலத்திலே அகத்தியமா முனிவர் வரத்தால் ஆனந்தக் கூத்தர் என்பாருக்கு அவர் மனைவியாகிய மயிலம்மை பாற்றோன்றிய அருந்தவ மகனாராவர். முக்களாலிங்கர் என்பது அவர் இயற்பெயர். ஐந்தாண்டிலேயே தம் மூர்க்கு யாத்திரையாய் வந்த திருவாவடுதுறைபாதீனச் சிவனடியார்களாகிய துறவிகள் சிலரைத் தமது இல்லத்திற் கழைத்துச் சென்று இவர் தமது தாயாருக் கறிவித்து அவர்கட்குத் திருவமுது செய்வித்தனர். ஆயகாலை இவர் அழகிய ஒரு வெண்பாப் பாடியருளினர். அது வருமாறு:

" அருந்ததியென் னம்மை அடியவர்கட் கென்றுந்
திருந்த அமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே

ஆனந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு

மானந்த வாத மயில்,"

இப்பாடலை விருந்துண்ட அடியார் பாடியதாக வும் கூறுப. பின் துறவடைந்து வீடு பேறெய்து முள்ளத்துடன், பெற்றோர்பால் விடைபெற்று அத் துறவிகளோடு இவர் துறைசை சென்று ஆண்டு ஆதி னத்தலைவராய்த் திகழ்ந்த பின் வேலப்ப தேசிகரிடம் அருளுரைபெற்று அவராற் 'சிவஞானயோகி' யென் னுஞ் சிறப்புத் திருப்பெயரளிக்கப்பெற்றுப் பல மா ணவர்க்குப் பல்கலையும் பயிற்றுவித்தார். இவர் தொண் டை நாட்டிலே குளத்தூர், தொட்டிக்கலை முதலிய இடங்களிற் பன்னாள் வதிந்தனர். இவர் இயற்றிய நூல்கள் பல. இவரது வரலாற்று விவரம் தனி நூல் களிற் காண்க. சோமேசர் முதுமொழி வெண்பா, திருக்குறட் செய்யுள்கட்கு உதாரணந்தருவது. கலை சையந்தாதி முதலியன உருக்கம்விளைப்பன. முல்லை வாயிலந்தாதி முதலியன யமகம் திரிபின் றிறங் காட் டவல்லன. அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் முதலி யன கற்பனைநயஞ் சிறந்தவை. சித்தாந்த மரபு கண் டன முதலியன இவரது கண்டனத் திறமையையும் வடமொழி வன்மையையும் உணர்த்துவன. காஞ்சிப் புராணம், தொண்டைமண்டலச் சிறப்பும் சித்திரக் கவிநயமுங் குறிப்பது. தொல்காப்பியச் சூத்திரவிரு த்தி முதலியன ஆராய்ச்சி நூல்களிற் றலைசிறந்தவை. இவரியற்றிய சிவஞானபோதப் பேருரையே திராவிட மாபாடிய மெனப்பட்டு, இவரது பெரும்புகழை என்

னும் நிலைநிறுத்த வல்லது. இவர் கி. பி. 1785 ல் சிவ னடி சேர்ந்தனர்.

## கடவுண்மாமுனிவர்.

..........ாமுனிவர் சிவஞான முனிவரது முதன் மாணாக்கராய கச்சியப்பரின் நண்பர். தமது உடலிற் கண்டபிணி நீங்கும் வண்ணம் கச்சியப்பராற் றிருவாத வூரடிகள் புராணம்பாட ஊக்கப்பட்டவர். இவர் தேசி கரோ தம்பிரானோ தெரியவில்லை.

## சிதம்பரநாதமுனிவர்.

சிவஞானமுனிவர் மாணாக்கர் பன்னிருவர். அவ ருள் இலக்கணம் சிதம்பரநாதமுனிவர் திருப்பாதிரிப் புலியூர்ப் புராணம் எழுதியவர்.

## கச்சியப்பமுனிவர்.

மற்றொருவராகிய கச்சியப்பமுனிவர் திருத்தணி கை வேளாளர்; அவ்வூர்க் கந்தப்பையர்க்கு ஆசிரியர். திருத்தணிகைப் புராணம், பூவாளூர்ப்புராணம், பே ரூர்ப்புராணம், விநாயகபுராணம், திருவானைக்காப்பு ராணம், காஞ்சிப்புராணம் பிற்பகுதி; சென்னை விநாய கர் பிள்ளைத் தமிழ், கச்சியானந்தருத்ரேசர் வண்டுவி டுதூது, பதிற்றுப்பத்தந்தாதி, திருத்தணிகையாற் றுப் படை, பஞ்சாக்கரவந்தாதி முதலியன அவரது நூல்கள். அவைகளிற் சிறந்த பெருங்காப்பியமாகிய திருத்தணிகைப்புராணம் கற்பனை நலத்திலும் சொல்ல ருமையிலும் இணையற்றது.

## சுப்பிரமணியமுனிவர்.

சிவஞானமுனிவரின் மற்றொரு மாணாக்கராகிய தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் சுப்பிரமணியர் திருவிருத்தமும், திருத்தணிகைத் திருவிருத்தமும் பாடி, அவற்றை ஓதிவந்த இருவர்க்கு முறையே குட்டநோயும், குருட்டுத்தன்மையும் நீங்கும் வண்ணஞ் செய்தனர். இவர் நூல்கள்: துறைசைக் கோவை, கலைசைக்கோவை, கலைசைச்சிலேடை வெண்பா, சிதம்பரேசர் வண்ணம், திருக்குற்றாலச் சித்திரத்திருவிருத்தம், பழனி முருகக்கடவுள் பஞ்சரத்தினமாலை, திருச்சிற்றம்பலத்தேசிகர் மீது சிந்து, பஞ்சரத்நமாலை, அம்பலவாண தேசிகர் மீது ஆனந்தக் களிப்பு முதலியன.

## சோமசுந்தரம்பிள்ளை.

சிவஞானமுனிவரது மற்றொரு மாணவர் இராமநாதபுரம் சோமசுந்தரப்பிள்ளை. அவர் மாணவர் முகவூர்ச்சரவணப்பெருமாட் கவிராயர்; இவர் சீட்டுக் கவி பாடுவதில் வல்லவர்.

## சங்கரமூர்த்திக் கவிராயர்.

சங்கரமூர்த்திக் கவிராயர் என்பார் இராசபாளையத்திலே கார்காத்த வேளாளர் மரபிலே பிறந்தவர். இவர் கன்னிவாசி செமீன்தார்மீது கோவை பாடி யானைக்கன்றும் ஊரும் பெற்றவர்; சேற்றூர்ச்செமீன் தார்மீது 'பள்ளுப்'பாடினவர். இவர் பாடிய தனிப் பாடல்களும் பல. கற்பனையில் வல்லவர் இவர்.

" ஒருகையிலே யன்னம் ஒருகையிலே சொன்னம்
வருகையிலே சம்மான வார்த்தை—பெருகுபுகழ்ச்
சீமானு மெங்கள் சிவப்பிரகா சத்திருவக்
கோமானுக் குள்ள குணம்."

## கீர்த்தனங்கள்.

பதினெட்டாம் நூற்றுண்டி னிறுதியில் கோபாலகிருட்டினபாரதியா ரென்பவர் நந்தனுர் சரித்திரக் கீர்த்தனை யென்னும் இசைப்பாடல் வகுத்தனர்.

சீகாழி இசைவேளாண்குலம் முத்துத் தாண்டவராயர்* பதம் முன்னரே யேற்பட்டது. முத்துராகவ முதலியா ரென்பவர் பிற்காலத்தில் பாரத கீர்த்தனம் பாடினர்.

## மாரிமுத்துப்பிள்ளை.

சிதம்பரத்துக் கருகில் வசித்த மாரிமுத்துப்பிள்ளை 130 வருடங்களுக்கு முற்பட்டவர். இவர் புலியூர் வெண்பா, சிதம்பரேசர் விறலிவிடுதூது என்னுமிரண்டுமியற்றினவர்; சித்திரக்கவி பாடுவதில் வல்லவர்.

## முத்துராசர்.

முத்துராச ரென்னும் உறையூர்ப் புலவர் 'கயிலாயமாலை' யென்று கலிவெண்பாவிற் பாடியநூலில், சிங்கையாரியச் சக்கரவர்த்தி நல்லூரிலாண்டது, தென் றமிழ் நாட்டிலிருந்து பல வேளாளரை அவண் குடியேற்றினது, கயிலாயநாதர் கோயில் கட்டுவித்தது முதலிய வரலாற்றினை விதந்தோதுகின்றார்.

அது கயிலாயநாத சுவாமிகள்மீது பாடப்பெற்றமை யாற் 'கைலாயமாலை'யெனப்பட்டது. இவர் யாழ்ப்பாணத்து நல்லூரில் வாழ்ந்தவர்.

## முத்து வீரிய உபாத்தியாயர்.

முத்து வீரிய உபாத்தியாயர் முத்து வீரிய மென்னும் யாப்பு நூல் செய்தது எக்காலத்தென்று விளங்கவில்லை.

## கந்தசாமிப் புலவர்.

கந்தசாமிப் புலவ ரென்பார் திருப்பூவணத்திலிருந்த சைவர். இவர் திருப்பூவணவுலா, திருப்பூவணப்புராணம், ஆப்பனூர்ப் புராணம் என்பவையியற்றினர்.

## சென்னமல்லையர்.

வீர சைவராய் விளங்கிய சென்னமல்லைய ரென்பவர் சிதம்பரத்திற் பச்ச கந்தையர் மடத்தில் வசித்தவர். இவர் பெயர் சிவ சிவ வெண்பாவில் நிலையுறுகின்றது.

## வண்ணக்களஞ்சியப் புலவர்.

வண்ணக்களஞ்சியப் புலவர் என்பவர் 'மீசல்' என்னு மூரிற் பிறந்து மதுரையில் ஒரு தம்பிரானிடங் கல்வி கற்றுப் பல நூலியற்றி நாகூர் சென்று தமது முகையதீன் புராணத்தை மிக்க திறமையோடு அரங்கேற்றினர். அதற்குப் பரிசாக அங்கே ஒரு செல்வன் மகளை மணந்து வாழ்ந்தனர்.

## மதாறு சாகிபு புலவர்.

மதாறு சாகிபு புலவ ரென்பவர் 'மிகிறு சாரா' என்னுங் காப்பிய மியற்றினர்.

## அலியார் புலவர்.

அலியார் புலவ ரென்பவர் இந்திராயன் படைப் போர், இபுனி ஆண்டான் படைப்போர் என்னும் நூல்களினாசிரியர்.

## மகம்மது ஊசெயின்.

பெண் புத்தி மாலை யென்ற சிறு குறணூல் மகம்மது ஊசெயின் என்பவரா லியற்றப் பெற்றது.

## நயினா மகம்மதுப் புலவர்.

நயினா மகம்மதுப் புலவர் முன்கிரின்மாலை யென்னு நூலியற்றினர்.

## உலகநாதன்.

உலகநாதன் என்னும் அம்பட்டப் புலவர், உலக நீதி யென்னு நீதிநூலினைத் தந்தனர்.

## கணபதி தாசர்.

கணபதி தாசர் நெஞ்சறி விளக்கமென்னு நூறு செய்யுள் கொண்ட சிறு நூலியற்றினர். அதின் ஒவ்வொரு பாட்டிலும் 'சிவ நாக நாத' என்ற பெயர் வருகிறது.

## பின்வேலப்ப தேசிகர்.

பின்வேலப்ப தேசிக ரிருவருள் முன்னவர் திருப்பறியலூர்ப் புராணஞ் செய்தவர்.

## கந்தப்பையர்.

கந்தப்பைய ரென்பார் கச்சியப்பர் மாணவர்; இவர் சங்கயகுலத்தார். இவர் தணிகையுலா, தணிகைக்கலம்பகம், தணிகையந்தாதி, தணிகைப் பிள்ளைத் தமிழ் முதலியன செய்தவர்; பழமலையந்தாதியுரை செந்தினிரோட்டக யமக வந்தாதியுரை முதலிய பல உரைகள் வகுத்தவர். தணிகாசலவனுபூதி யென்றொரு நூலு மிவர் செய்ததாகத் தெரிகின்றது.

இவர் மகனார் சரவணப்பெருமாளையர் பலநூல்களுக்குரையும் இலக்கண நூல்களு மியற்றினர்.

---

அதிகாரம் உ௩.

# ஆங்கிலச்சார்புக் காலம்.



(கி. பி. பத்தோன்பதாம் நூற்றாண்டு)

கி. பி. பத்தொன்பதா நூற்றாண்டின் முற்பகுதியிலே முந்திய நூற்றாண்டிற் போலவே பலவகைச் சிறுகாப்பியங்களும், சில நாடகங்களும் புலவர்களால் மிகுதியாக எழுதப்பட்டு வந்ததோடு, பல அறிஞர்களாற் பொதுமக்களுக்குப் பயன்படும் உரைநடை நூல்

களும் பல எழுந்தன. பெருங்காப்பியங்கள் மிகுதியும் புராணவடிவாகவே இயற்றப்பட்டன. கதைத்தலைவர் ஒருவரைக் குறித்து நெடுங்காப்பியம் பாடும் வழக்கம் அருகிவிட்டது. பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியிலே தலபுராணங்கள் மிகுதியாக இயற்றப் பட்டன. அவற்றோடு தோத்திரப் பாடல்களும் முருக தாசராலும் இராமலிங்க அடிகளாலும் அளவற்றன பாடப்பட்டன; மொழிபெயர்ப்பு நூல்களும் பல எழுந்தன. இந்நூற்றாண்டி லியற்றப்பட்ட சோதிட நூல்கள் சில. கிறித்துமதப் புலவர்கள் சிலர் பொது வாகவும் தங்கள் சமயச் சார்பாகவும் பாட்டுநூல்க ளும் உரைநடை நூல்களு மியற்றினர். அகராதிகள் சில அமைக்கப் பெற்றன. தமிழ்மொழியின் இலக் கண இலக்கியங்களை ஐரோப்பியப் பாதிரிமார் கற்று ஆராய்ச்சி நூலும் மொழிபெயர்ப்புநூலும் எழுதினர்.

## சரவணப்பெருமாள் கவிராயர்.

பதினெட்டாவது நூற்றாண்டின் பிற்பகுதியிலே சிறந்து விளங்கின பெரியாராகிய ஆசிரியர் சிவஞான முனிவரது மாணவர்களி லொருவராகிய இராமநாத புரம் சோமசுந்தரம் பிள்ளையிடம் கல்விபயின்ற சரவ ணப்பெருமாள் கவிராய ரென்பவர் முத்துராமலிங்க சேதுபதியின் அரண்மனைப் புலவராய்த் திகழ்ந்தனர். இவர் முதுகுளத்தூரிற் பிறந்தவர். நகைச்சுவை நயம் விளங்கக் கற்பனை அமைத்துத் தனிப்பாடல்கள் பாடு வதில் இவர் மிக்க வல்லமையுடையவர். யானை குதிரை வெள்ளி, பட்டு முதலியன வேண்டுமென்பார், சைபி

'ல மூக்குள்ளதொன்று, மாயன் பிறப்பிலொன்று, வாரமது ஒன்று, வெளுத்த சந்திரனென்று இவர் தமக்குவேண்டுவதாகக் கவியுரைத்தனர். பணம் விடு தூது, அசுவமேதயாக புராணம், விநாயகர் திருமுக விலாசம் முதலியன இவரால் பாடப்பட்டன. வசை மொழிகளைத் தொகுத் துரைப்பதில் இவரைவிட வல்லவரில்லை; தமது செருக்குத் தோன்றப் பாடுவதி லும் அங்ஙனமே. இவர் உலக வழக்கிலுள்ள மொழி களையே அமைத்துத் தட்டுத் தடையின்றிப் பாவியற் றும் திறமுடையவர்.

இவர் சேதுபதியின் அமைச்சர் முத்திருளப்பப் பிள்ளைமீது 'காதல்' பாடியுள்ளார். இவர் அட்டாவ தானம் செய்பவராதலின், அச்சொல்லை இவர்க்குமுன் வைத்து வழங்குவ துண்டு. புலவர்க்கு அஞ்சி அவர்க் குப் பொருளீய மனமில்லாது ஒளிப்பாரின் செயலை நகைச்சுவை மிகப் புனைந்துரைத்த பாட்டின்பகுதி வருமாறு:

"ஆரடி வீதியிலோ ரேடுகொண் டோடிய
யவசாம தாய்வருகிறார்
ஐயையோ புலவன்மார் போலே யிருக்கின்ற
தியாரென்று மெல்லவெட்டிப்
பாரடி தலைமறைய நின்றுகொண் டவர்நெடும்
பாதைவழிபோகிறதுதான்
பரண்மே லெனைத்தூக்கி விட்டுவிடு தாளையடை
பழிகாரி கதவுபோடு
கூர்மைமொழி கேட்டதிக சீக்கிரம் வந்திடுவர்

குதூருகருள் மீளமையாள்தருக்
கொள்ளடி யெண்பப்புகலும் லோபியர்கள்...........''

இப்புலவர் இந்நூற்றாண்டின் ஞெடக்கத்திற் பிறந்தவ ராவர்.

## இராமானுசக் கவிராயர்.

இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளையின் மற்றொரு மாணவர் இராமானுசக் கவிராய ரென்பார். இவர் இராமநாதபுரத்திற் பிறந்து சென்னையில் வாழ்ந்திருந்தவர். 'இவர் பாடிய பார்த்தசாரதி மாலை,' 'திருவேங்கட அநுபூதி,' 'வரதராசப்பெருமாள் பதிற்றுப்பத்தந்தாதி' முதலிய சிறு காப்பியங்களால் இவர் வைணவரென்று தெரிகின்றது. இவர் குலத்தில் வடுக ரென்பாருமுளர். பச்சையப்ப முதலியார் முதலிய சில வள்ளல்களை இவர் புகழ்ந்து பாடியுள்ளார். இவர் சங்கராசாரியரையும் பாடியுள்ளார்.

திருக்குறள், நறுந்தொகை, நன்னூல், ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நூல்களுக்குக் காண்டிகையுரை வகுத்திருப்பதால், இவர் சிறந்ததோருரையாசிரியராவர். இவர் 'ஆத்மபோதப் பிரகாசிகை' யென்னும் வடமொழி நூலைத் தமிழில் மொழிபெயர்த் துள்ளார். இவரால் எழுதப்பட்ட இலக்கணச் சுருக்கம் ஒன்று உண்டு.

## வதகிரிமுதலியார்.

இவருடைய மாணவர் வேதகிரிமுதலியா ரென்பவர்; தொண்டைமண்டலத்திலுள்ள களத்தூரினர்.

இவர் 'மறுநீதி சதகம்' 'நீதிசிந்தாமணி' முதலிய நீதிநூல்களை இயற்றியவர். இவர் எழுதியுள்ள இலக்கியக்களஞ்சியமும் இலக்கணக் களஞ்சியமும் பல்வகை இலக்கண இலக்கிய நூல்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட நற்பகுதிகள் உடையன.

## விசுவநாதசாத்திரியார்.

யாழ்ப்பாணத்து அராலியைச் சார்ந்த விசுவநாத சாத்திரியா ரென்பார், வண்ணக் குறவஞ்சி, நகுலமலைக் குறவஞ்சி என்னும் நூல்களை யியற்றினவர். இவர் சிலேடை பாடுவதில் வல்லவர். இவரது குறவஞ்சிகளில் அயன், அரி, அரன் மூவர்க்கும் பொருந்தும் சிலேடைகள் அமைந்துள்ளார். இவரது அஞ்சக்கரத்த ரென்ற சொற்றொடர், 'அஞ்சம் கர்த்தர்' என்று பிரிக்கப்பட்ட காலை, அன்னக் கொடி தாங்கிய கையையுடையவர் எனப் பொருள்பட்டு அயனைக் குறிக்கும்; 'அம்சக்கர்த்தர்' என்று பிரிவுற்றகாலை, அழகிய சக்ராயுதம் உடையவரென்று பொருள்பட்டுத் திருமாலுக்குரியதாகும்; 'அஞ்சு அக்கரத்தர்' என்று பிரிக்கப்பட்டவிடத்து, ஐந்தெழுத்துடையார் என்று பொருள்பட்டு அரனைக்குறிக்கும். இங்ஙனம் வந்த சிலேடைகள் பல்பல.

## வீரராகவ முதலியார்.

முத்தமிழ்க்கவி வீரராகவ முதலியா ரென்பவர் அந்தக்கவி வீரராகவ முதலியாரின் வேறுவர். இவரும் தொண்டைநாட்டுப் பொன்விளைந்த கஸ்தூரி

ணரே. இவர் வைணவர். நம்மாழ்வாரைச் சிறப்பாக வழிபட்டவர். திருவேங்கடக் கலம்பகம், திருக் கண்ணமங்க மாலை, திருவேங்கடமுடையான் பஞ்சு ரத்தினம், வரதராஜர் பஞ்சரத்தினம், பெருந்தே வித்தாயார் பஞ்சரத்தினம், முதலிய நூல்கள் இயற் றினார்.

## சேனாதிராயர்

சேனாதிராயர் என்னும் ஒரு புலவர் ஆறுமுகநாவ லருக்கு ஆசிரியராய்த் திகழ்ந்தவர். இவர் யாழ்ப் பாணத்து இருதலையென்னும் ஊரினர். இவர் சைவ வேளாள வகுப்பினர்; கூழங்கைத் தம்பிரான் என்றவர் பால் கல்வி பயின்றவர், இவர் மிகுந்த நினைவாற்றலு டையவராதலின், புதிதாக யாவராவது பாட்டொன்று கூறக்கேட்டால் அதனை இருமுறை கேட்டுத் தாம தனை மீட்டும் உரைக்கும் ஆற்றலுள்ளவர். இவர் நல்லை வெண்பா, நல்லைக் குறவஞ்சி முதலிய சிறுகாப்பியங்க ளியற்றினர். தமிழகராதி யொன்று இவர் தாம் முதன் முதற் றொகுத்தன ரென்ப. பாநயமுள்ள புதுச் சொற்றொடர் அமைப்பதில் இவர் மிகச் சிறந்த திற முடையவர். சிலேடைபாடுவதிலும் வல்லவர். இது காறுங் கூறிய காப்பியப் புலவர்கள் யாவரும் ஆறுமுக நாவலர் காலத்துக்கு முற்பட்டவராவர்.

## கந்தப்பிள்ளையும் அநந்தபாரதியும்

இவர்கள் காலத்திடையே நாடக இலக்கியங்கள் இயற்றினோரும் சிலர். ஆறுமுகநாவலரது தந்தையா

ரான கந்தப்பிள்ளை யென்பவர் இராமவிலாசம், சந்திர காசம் முதலியன இயற்றினர். தஞ்சையிலிருந்த அநந்தபாரதி அய்யங்கார் உத்தரராமாயண கீர்த்தனை, பாகவத தசமத்கந்த நாடகம், யானைமேலழகர் நொண்டிச்சிந்து முதலிய நாடகச் சார்பான நூல்களியற்றிய வர். இவர் 1786 முதல் 1846 வரை நிலவுலகத்தி லிருந்தவ ரென்ப.

## இராமச்சந்திரக்கவிராயர்

இராமச்சந்திரக்கவிராயரென்னும் புலவர் இராசு குலத்தைச் சேர்ந்தவர்; தொண்டை மண்டலத்தில் இராசு நல்லூரென்னு மிடத்திற் பிறந்து சென்னையில் வதிந்தவர். இவர் சகுந்தலை விலாசம், தாருகாவிலாசம், இரங்கோ சண்டை நாடகம், இரணியவாசகப்பா முதலிய நாடகச் சார்பான நூல்களை இயற்றியவர். இவர் எல்லிசுதுரை யென்பவராலே புகழ்ந்து பாடப் பெற்றவர். இவர் 'சதபங்கி,' 'நவபங்கி' முதலிய சித்திரக்கவிகள் பாடுவதில் வல்லவர். யாவர்க்கும் விளங்கும் இயற்சொற்களினல் நகைச்சுவை ததும்பும் படி பாடுவதிற் றிறமையுடையார் இவர்.

"வஞ்சகர்பா ணடந்தலைந்த காலிற் புண்ணும்
வாசமுறு முட்டுண்ட தலையிற் புண்ணும்
செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சிற் புண்ணும்
தீருமென்றே சங்கரன்பாற் சேர்ந்தே னப்பா
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும் வேடன்
கொடுங்காலால் உதைத்த புண்ணுங் கோபமாகப்
பஞ்சவரி லொருவன்வில்லா லடித்த புண்ணும்
பாரென்றே காட்டி நின்றான் பரமன்றானே."

துன்பங்கள் பலவும் ஒருங்கு சேர்ந்து ஒருவனை வருத்துமியல்பை இவர் மிகவும் அழகாக ஒரு செய்யுளாற் குறித்துள்ளார்.

" ஆவீன மழைபொழிய வில்லம் வீழ
வகத்தடியாள் மெய்நோவ வடிமை சாவ
மாவீரம் போகுதென்று விதைகொண் டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவ ரெதிரே செல்லத்
தள்ளவொண்ணு விருந்துவரச் சர்ப்பந் தீண்டக்
கோவேந்த ருழுதுண்ட கடமை கேட்கக்
குருக்களோ தட்சணைகள் கொடுவென் றாரே"

சுன்னுகம் முத்துக்குமாரக்கவிராயர், பீதாம்பரப் புலவர் என்பாரும் சேனுதிராயர் காலத்தவர். இருவரும் சித்திரக்கவிப் புலவர்கள். பின்னையவர் செய்த நூல்களிற் சிறந்தது மறைசைக்கலம்பக மென்பது.

## ஆண்டான் கவிராயர்

வசை பாடுவதில் வல்ல ஆண்டான்கவிராயரென்பார் திருநெல்வேலிச் சில்லாவிலுள்ள ஒட்டப்பிடாரத்திற் பிறந்தவர். இவர் வைணவ அந்தணரென்ப. இவர் இந்நூற்றுண்டின் தொடக்கத்திற் றிகழ்ந்தவர்.

## நல்லவீரப்ப பிள்ளை

நல்லவீரப்பபிள்ளை என்பவர் இராமநாதபுரத்தைச் சார்ந்த முதுகுளத்தூரினர். இவர் முருகப் பெருமான்மீது பள்ளு, குறவஞ்சி பாடியுள்ளார்.

முருகப்பெருமான் திருவருளால், எமன் அணுகான் என்பதைப் பலபடப் பாராட்டியுள்ளார். உலக வழக்குச் சொற்களை நயமுறச் செய்யுட்களில் அமைப்பதில் இவர் வல்லவர்.

'பேயா தடிமுர டாவந்த காபொய்ப் பிரட்டுரட்டா
நீயாவென் முன்னுக்கு வாராதடாநெடு மான்மருகன்
மாயாவ தாரன் கொடுமூரன் றந்த வயதெனக்குத்
தோயா விதமென்ன போடாநின் புத்தியுந் துற்புத்தியே

## சேறைக்கவிராசபிள்ளை

சேறைக்கவிராசபிள்ளை யென்பார் சோழநாட்டினர். கணக்கர் மரபினர். இவர் சிறந்ததோர் ஆசு கவிராயர்; 'சேயூர் முருகனுலா,' 'வாட்போக்கி நாதருலா' 'அண்ணாமலையார் வண்ணம்' முதலிய சிறு காப்பியங்களை இயற்றியவர்.

## தாச்சி அருணாசல முதலியார்

சென்னையைச் சார்ந்த திருமயிலையில் எழுபது ஆண்டுகட்குமுன் திகழ்ந்த தாச்சி அருணாசல முதலியாரென்பவர் திருமயிலைக் கபாலீசர் கற்பகாம்பிகை மீது பல பதிகங்களும், திருமுல்லைவாயில் மாசிலாமணியீசர் பதிகம் முதலியனவும் இயற்றியுள்ளார். செட்டிமக்கள் திரைகடலோடியுந் திரவியம் தேடுதலை இவர் ஓரெடுத்துக் காட்டால் விளக்கும் செய்யுள் வருமாறு:

"குப் பத்துச் செட்டி குமாரன் கடமுண்டி
முப்பத்து முக்காத முங்கடந்து—கப்பலதில்
ஆபத்து வாரா தகற்றி யவனதிக
லாபத்துக் காளாயி னான்"

## மாம்பழச் சிங்க நாவலர்

மாம்பழச் சிங்க நாவலர் என்பவர் பழனியிற் பிறந்தவர். இவர் கம்மியர் குலத்தவர். இவர் மூன்றுவ தாண்டில் அம்மை நோயாற் கண்ணிழந்தும் முருகப் பெருமான் றிருவருளால் அகக்கண் ஒளிவிளங்கப் பெற் றுப் பன்னூல்களையும் படிக்கக் கேட்டுணர்ந்து பாமாரி பொழிவதில் வல்லவராயினர். இவர் முத்துராமலிங்க சேதுபதியிடம் கவிச்சிங்கநாவலர் என்றபட்டம் பெற் றவர். இவர் கி. பி. 1836 முதல் 1884 வரை வாழ்ந்த வர். பொன்னுச்சாமித்தேவர் மீதும் இவர் கவியியற் றியதாகத் தெரிகின்றது. இவர் அட்டநாகப் பிரபந் தம், சதுரங்க பந்தம் முதலியவற்றிற்கு இலக்கணம் வகுத்துள்ளார். இவரது பிரபந்தத்திரட்டொன்று பழனிச்சாமி ஆசாரி என்பவரால் வெளியிடப் பட்டுள் ளது. சிலேடை பாடுவதிலும் இவர் மிக வல்லவர். பேரையூரிலிருந்த ஒரு வீர சைவப் புலவரை இவர் புகழ்ந்துள்ள பாட்டு வருமாறு:—

"மலைத்தவனு மலைத்தவனு குவன்சாத நாமகனே
மகளே யென்பன்
கலைத்திறமை கம்பனுமோர் கம்பமென நிற்பனுனைக்
கண்டா லென்று
விலைக்கமுகு கற்பகக்கா விந்திரற்கு வெண்கவரி
யிரட்டும் பேரை
நிலைத்தபுகழ் வீரசைவ லிங்கையதே சிகவுனக்கார்
நிகரா வாரே"

## சின்னச்சரவணப் பெருமாள் கவிராயர்

சின்னச்சரவணப் பெருமாள் கவிராயர் என்பவர் பெரிய சரவணப் பெருமாள் கவிராயருக்குப் பேரர். இவர் திருச்சுழிய லந்தாதி, கழுகுமலை ஓரெழுத்தந்தாதி, புலவனேந்திர னம்மானை, கயற்கண்ணி மாலை, கந்தவருக்கச் சந்தவெண்பா, குன்றக்குடிச் சிலேடை வெண்பா என்னுஞ் சிறு காப்பியங்கள் பல இயற்றினவர். இவர் பாற்கர சேதுபதி அரண்மனைப் புலவரா யிருந்தவர்.

## இராம பாரதி

இராம பாரதி யென்பவர் 'ஆத்திசூடி வெண்பா' வென்னும் ஒரு நூல் இயற்றியுள்ளார். இவர் 'ஆத்திசூடி' யின் ஒவ்வொரு சூத்திரத்துக்கும் ஒவ்வொரு கதையினை எடுத்துக்காட்டாக ஒவ்வொரு வெண்பாவிலும் அமைத்திருக்கிறார். இவரது நூலால் இவர் சைவரென்று விளங்குகின்றது.

## நிசகுணயோகி

நிசகுணயோகி யென்பவர் 'விவேக சிந்தாமணி' யென்னும் ஒரு நீதி நூல் இயற்றியுள்ளார். இது படியாதார்க்கும் எளிதில் விளங்கும் சொல் நடையில் அமைந்துள்ளது. இவர் காலம் பத்தொன்பதாவது நூற்றாண்டின் முற்பகுதி.

## ஒப்பிலாமணிப் புலவர்

ஒப்பிலாமணிப் புலவர் என்பவர் குமணன் கதையைப் பாடினவர். இவரும் சிவரகசியத்தைத் தமிழில்

மொழிபெயர்த்த இப்பெயருடையாரும் ஒருவரோ வேறோ என்பது இனிது விளங்கவில்லை. இவரும் பதினொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியைச் சார்ந்தவரே. இவர் திருவாரூரினர். சிவரகசியம், தஞ்சைச் சரபோசி மன்னன் காலத்தில் மொழி பெயர்க்கப்பட்டதென்று தெரிகின்றது.

## வெண்பாப் புலிக் கவிராயர்

வெண்பாப் புலிக்கவிராய ரென்பார் பாண்டி நாட்டிலே மணப்பச்சேரி என்னுஞ் சிற்றூரில் வசித்திருந்த சைவப் பண்டார மரபினர். இவர் சிவகங்கைச் சிற்றரசர் முதலியோரால் ஆதரிக்கப்பட்டவர். வெண்பாப் பாடுவதில் இவர் தலைசிறந்தவராதலின், இவர்க்கு இப்பெயர் அமைந்தது போலும்.

## புலிக்குட்டி இராமலிங்கத் தம்பிரான்

புலிக்குட்டி இராமலிங்கத் தம்பிரான் என்பவர் கவிபாடுவதிற் புலியென்னும் பட்டம் பெற்றவர். இவர் பிற்காலத்தவர்.

## வெறிமங்கை பாகக் கவிராயர்

வெறிமங்கை பாகக் கவிராயர் என்பவர் பாண்டி நாட்டிற் கொடுங்குன்றத்திற் பிறந்தவர். இவர் மருங்காபுரிச் சிற்றரசராற் போற்றப் பெற்று அவர் மீது குறவஞ்சி, உலா, கோவை முதலியன இயற்றினவர். இவர் பாடியுள்ள 'நற்றுயிரங்கல்' என்னுந் துறையமைந்த பாட்டில், பாலை நிலத்தின் பருக்கைக் கற்களின்

வெம்மையை மிக அழகாகப் புனைந்து கூறியது காண்க.

"நன்றே நடாத்துமெம் மங்கைபங் காளர்தந் நாட்டினிலே
அன்றே யிராம னணைகட்டும் போதங் கவன்படைகள்
குன்றேன் சுமந்தவெம் மான் சென்ற பாலைக் குறும்பாவில்
ஒன்றே யிடிலக் கடலூற்றும் வற்ற வுறிஞ்சிடுமே."

## முத்துசாமிப்பிள்ளை முதலியோர்

தேவிப்பட்டினம் முத்துசாமிப்பிள்ளை, கோடீச் சுரக்கோவை பாடிய கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், செயங்கொண்டார் சதகம் பாடிய இளையாற் றங்குடி முத்தப்ப செட்டியார் முதலிய பலபுலவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவரே. சுந்தரக்கவிராய ரென்பவர் எக்காலத் தவரென்று தெளிவாக விளங்கவில்லை. இவர் அழகிய அகத்துறைப் பாடல்கள் பாடியுள்ளார். இவர் தலை வன் தலைவி பிரிவாற்றாமையால் வருந்துவதைத் தாமே துய்த்துப் பாடியது போலப் பாடியபாட்டு வருமாறு:-

"நறையொழுகுங் குழலாளை யமுதொழுகு
மொழியாளை நயன வேலிற்
பிறையொழுகு நுதலாளைப் பிரிந்திருக்க
விப்பிறப்பிற் பெரிதும் யான்செய்
குறையெதுவோ மதன்கணைக்கு மிகவருட
வெனைவிதித்த கொடியோ னென
மறையவனுங் கலைமகளைப் பிரிந்திருந்தாற்
றெரியுமிந்த வருத்தந் தானே."

## சரவணதேசிகர்.

இக்காலத்திலே, சமயநூலுண்மை யுணர்த்தும் பாட்டு நூலெழுதியவர்கள் சிலரே. சரவணதேசிக ரென்பார் 'வீட்டுநெறியுண்மை,' 'தேவிகாலோத்திரம்' என்னும் அரியநூல்களை இயற்றினார்.

## சுந்தரதேசிகர்.

சுந்தரதேசிக ரென்பவர் திருக்கோவையாருண்மை யென்னும் சிறுநூல் இயற்றியுள்ளார்.

## சரவணமுத்துப்புலவர்.

யாழ்ப்பாணத்து நல்லூர் சரவணமுத்துப்புலவர் என்பவர் ஆத்மபோகப் பிரகாசிகை, வேதாந்த சுயஞ்சோதி முதலிய சிலநூல்கள் மிகுந்த வடமொழிக் கலப்புடன் எழுதியுள்ளார்.

## அப்பாவையரும் தில்லைநாயகரும்

அப்பாவையர் என்பவர் தம்மை ஆதரித்த செல்விக்குப்பம் தாண்டவராயர் பெயரினாலே 'தாண்டவமாலை' யென்னுஞ் சோதிட நூலையும், திருவானைக்காத் தில்லைநாயகச்சோதிடர் என்பவர் 'சாதகசிந்தாமணி' யென்னுஞ் சோதிடநூலையு மியற்றினார்.

## பரசுராமக்கவிராயர்.

புரசைவாக்கம் பரசுராமக் கவிராய ரென்பவர் சிறுத்தொண்டர் விலாசம் என்னும் நாடகச் சார்பான நூலியற்றினார்.

## திருச்சிற்றம்பல தேசிகர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே உரைநடை நூல்களியற்றியவருள் முதலாவார் திருச்சிற்றம்பல தேசிக ரென்பவர். இவர் 'கம்பராமாயண வசனம்,' 'உத்தரகாண்ட வசனம்' முதலியவைகளைக் கி. பி. 1815-ம் ஆண்டில் இயற்றினார்; யார்க்கும் இலக்கணம் விளங்கும் பொருட்டுத் தொல்காப்பியத்தைத் தழுவி எழுத்துச் சொல்லிலக்கண நூல் உரைநடையில் இயற்றினார்.

## தாண்டவராய முதலியார்.

தாண்டவராய முதலியார் என்பவர் கி. பி. 1825-ல் 'பஞ்சதந்திரத்'தை மகாராட்டிரத்திலிருந்து மொழிபெயர்த்தனர். இவரும் 'இலக்கண வினவிடை,' 'கதாமஞ்சரி' என்னும் நூல்களைச் சிறுவர் பொருட்டு இயற்றியுள்ளார். இவர் சென்னையில் வதிந்தவர். இவர் திவாகரம், சூடாமணி, சதுரகராதி என்னும் நூல்களை முதன் முதல் அச்சியற்றினார்.

## வீரமார்த்தாண்டத் தேவர்.

செங்குந்தர் மரபைச் சார்ந்த வீரமார்த்தாண்ட தேவ ரென்பவர் பஞ்சதந்திரத்தை விருத்தப் பாவினாற் பாடியுள்ளார்.

## விசாகப்பெருமாளையரும் சரவணப்பெருமாளையரும்.

திருத்தணிகையில் திகழ்ந்த வீரசைவப் புலவராகிய கந்தப்பையரின் மகனான விசாகப் பெருமா

ளையர், சரவணப் பெருமாளையர் என்னும் இருவரும் பல உரை நடை நூல்களை யெழுதி உலகிற்குதவி னர். விசாகப்பெருமாளையர் சென்னை மாகாண அரசிய லார் கலாசாலைத் தமிழாசிரியராகத் திகழ்ந்தனர். இவர் நன்னூலுக்கு ஒரு காண்டிகையுரையும், யாப் பிலக்கண அணியிலக்கண வினாவிடையும் இயற்றியுள் ளார்; இவர் டாக்டர் வின்சுலோவின் தமிழகராதிக்கு மிகவும் துணைபுரிந்தவர். சரவணப் பெருமாளைய ரென் பவர் இராமானுசக் கவிராயருடைய மாணாக்கரென்ப. இவர் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நறுந்தொ கை, நன்னெறி, மூதுரை, வெங்கைக்கோவை, பிரபு லிங்கலீலை, திருவள்ளுவமாலை, நைடதத்தின் ஒரு பகுதி என்னும் இவற்றிற்கு உரை வகுத்தனர். பால போத இலக்கண வினாவிடை, இயற்றமிழ்ச் சுருக்கம், அணியியல் விளக்கம் என்னும் நூல்களை இயற்றின தோ டமையாது களத்தூர்ப்புராணம் ஒன்றும் இவர் இயற்றியுள்ளார். கி. பி. 1830-வது ஆண்டில் இவர் திருக்குறளுக்குப் பரிமேலழகருரையை முதன்முதல் அச்சிட்டனர். திருவாசகம், திருவிளையாடல், நாலடி யார் முதலியவற்றையும் இவர் பதிப்பித்ததாகத் தெரிகிறது.

## நாகநாத பண்டிதர்.

யாழ்ப்பாணத்துச் சுன்னுகம் நாகநாத பண்டிதர் என்பார் 1826 முதல் 1854 வரை நிலவுலகத்தி லிருந் தனர். இவர் வடமொழிப் புலமை சான்றவராதலின், மேகதூதம், பகவத்கீதை, இதோபதேசம், சாந்

நோக்கிய உபநிடதம் முதலியவைகளைத் தமிழில் மொழி பெயர்த்தனர்.

## ஆறுமுக நாவலர்.

மேற்கூறிய உரைநடை நூலியற்றியவர்கள் யாவருள்ளும் தலைசிறந்தவர் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலராவர். இவர் 1823 முதல் 1879 வரையில் இவ்வுலகிற் றிகழ்ந்தனர். இவர் சேனாதிராயருக்கும், சரவண முத்துப் புலவருக்கும் மாணவரென்ப. பொன்னம்பலப்பிள்ளை, சபாபதி நாவலர் முதலியவருக்கு இவர் ஆசிரியர். தமிழ்க் கல்வியையும் சைவ சமயக் கல்வியையும் பரவச் செய்தற் பொருட்டுக் கல்லூரிகளைச் சிதம்பரம், யாழ்ப்பாணம் முதலிய இடங்களில் நிலைநிறுத்தியும், சென்னையிலும் யாழ்ப்பாணத்திலும் அச்சுயந்திரசாலைகளை அமைத்து அவற்றின் வாயிலாகப் பல உயர்ந்த தமிழ் நூல்களையும் சைவ நூல்களையும் பிழையற நன்கு பதிப்பித்தும், சைவசமயச் சொற்பொழிவுகளியற்றியும், மாணவர்க்கு வேண்டும் சிறு உரை நடை நூல்கள் பல இயற்றியும் பெரிது உழைத்தமையால் இவர் பெருமை இன்றும் நின்று நிலவுகின்றது; என்றும் நிலவுதற்குரியது. இவர் நைட்டிகப் பிரமச்சரிய விரதங் காத்து மிகுந்தபேரன்போடு நாடோறும் சிவவழிபாடு இயற்றினவர். கிறித்துவமத கண்டனம், மாயாவாத மத கண்டனம் முதலியன இயற்றுவதில் இவர் வல்லமையுடையவர்; சமய நூற் சார்பாக நம்பிக்கையின் திட்பத்தைப் பெரிதும் பாராட்டுபவர், இக்கால

ஆராய்ச்சி முறையினும் இடைக்காலப் பத்திமுறை யினை மிகவும் போற்றுபவர்.

இவராற் பரிமேலழகருரை, திருக்கோவையுரை, நன்னூற் காண்டிகை, சேனாவரையம், பிரயோக விவேகம், கந்தபுராணம், சேது புராணம், பாரதம், சைவ சமய நெறியுரை, தருக்க சங்கிரகம் முதலிய நூல்கள் அச்சியற்றப்பட்டன; சிறுவர்கள் பொருட்டு நான்கு பால பாடங்களும், இரண்டு சைவ வினு விடைகளும், இலக்கணச் சுருக்கம் ஒன்றும், பெரிய புராண வசனமும், கந்த புராண வசனமும், திரு விளையாடற் புராண வசனம் முதலியவைகளும் பிழை யற்ற இனிய நடையில் இவரால் எழுதப்பட்டிருக்கின் றன. இவரால் இயற்றப்பட்ட பெரிய புராண சூசனம் என்பது முற்றுப் பெறவில்லை. இலங்கைப் பூமி சாத்திரம், சிதம்பர மான்மிய வசனம், கோயிற் புராண உரை முதலியனவும் இவரி யற்றியவைகளே. இவரைக் காலஞ் சென்ற வி. கோ. சூரிய நாராயண சாத்திரியார் 'வசன நடை கைவந்த வல்லாளர்' என் றது காண்க. இவர் ஒன்றிரண்டு செய்யுட்களே இயற் றியதாகத் தெரிகின்றது. 'அகாலச் சித்திவிநாயக விருத்தம்' இவராலியற்றப்பட்ட செய்யுள் நூலென்ப.

## இராமலிங்க அடிகள்.

இனிப் பத்தொன்பதாவது நூற்றுண்டின் பிற் பகுதியிற்றோன்றி விளங்கிய புலவர்களைப் பற்றி ஆராய்வோம். பத்தொன்பதாவது நூற்றுண்டில்

திகழ்ந்த பாவலருள் தலை சிறந்தவர் இராமலிங்க அடிகள் என்பார். இவர் தென்னாற்காட்டுச் சில்லா வின் மருதூரிற் பிறந்து சென்னையில் ஐந்து முதல் இருபத்து நான்கு ஆண்டுவரை வாழ்ந்திருந்து பின் னர் எட்டாண்டுகளாகத் தில்லை முதலிய திருப்பதி களை வணங்கிச் சென்று கருங்குழியில் பதினாறாண்டு கள் வதிந்திருந்து பின்னர் வடலூரினை அடைந்து நான்காண்டுகள் கழிந்ததும் தமது ஐம்பத்து மூன்றாம் ஆண்டினில் வீடெய்தினர். இளமை தொ டங்கியே மிகுந்த உள்ளத்துறவும், இறைவன்பால் அளவற்ற பேரன்பும் உடையராய்த் திகழ்ந்தமை யான், இவர் ஒன்பதாம் ஆண்டிலேயே முருகப் பெருமான் மீது யாவருள்ளத்தையும் உருக்கும் இனிய செந்தமிழ்ப் பாடல்கள் பாடத் தொடங்கி னர். இவர் பதின்மூன்றாம் ஆண்டு முதல் குடும்பப் பற்றொழித்துத் திருவருளையே துணைக்கொண்டு தமது அருள் வாழ்க்கையை நடத்திவந்தனர். இவர் பாடிய பாடல்களனைத்தும் ஆறு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றின் இனிமையுங் கனிவும் இறைவன்பாற் கற்பாரது உள்ளத்தைப் பேரன்பினாற் பிணைக்குந் தன்மையவாய் இருந்தமை யான், இவர் மாணாக்கர்கள் அவற்றின் தொகுப்பைத் 'திருவருட்பா' என்று வழங்கினர். அதனை அங்ஙனங் கூறுதல் தகாதென்றும் தேவார திருவாசகங்களையே அவ்வாறு கூறுதல் வேண்டுமென்றும் ஆறுமுக நாவல ரும் அவரைச் சார்ந்தவர்களும் போராடிப் பெரு வழக்கு நிகழ்த்தினர். அடிகள் சைவத்திருநெறித்

தலைவர் நால்வர்பாலும் கழிபேரன்புடையாரென்பது, அவர்கள்மீது அடிகள் பாடிய இன்தமிழ்ப் பதிகங்களால் இனிது விளங்கும். தாழ்வெனுந் தன்மையிற் சிறந்த அடிகள் தம்மை நால்வரோடொப்பாகவாதல் தம்முடைய பாடல்களை அன்னோர் திருவருட்பாடல்களுக்கு ஈடாகவாதல் கருதினாரென்று கொள்ளுதல் இழுக்காகும். தம்பால் நிகழ்வன யாவும் திருவருளின் ஆற்றலினாலேயாம் என்று அடிகள் கருதினமையால், தம்முடைய பாடல்களைத் தம் மாணவர்கள் அருட்பாவென் றுரைத்ததை மறுத்திலரெனக. தேவார திருவாசகங்கள் முதலிய பன்னிரு திருமுறைகளையே அருட்பாவென்று கூறும் வழக்கம் ஆறுமுக நாவலர் காலத்துக்கு முன் இருந்ததாகத் தோன்றவில்லை.

தேவார திருவாசகப் பொருளைக் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் எளிதிற் புகட்டும் நயமிக்க அமுதப் பாக்கள் அடிகளால் இயற்றப்பட்டுள்ளமையால், பலர் அவற்றை நன்கு கற்றோதி நலம்பெறுதல் கண்கூடாகக் காணலாம். பிற்காலத்துப் பெரும் புலவர்கள் புகழ்ப்பாமாலைகளுள் செந்தமிழ்ச் சொல்நயமும் உள்ள முருக்கும் பொருட்கனிவும் இவர் திருப்பாடல்களுக்குச் சிறப்பாக அமைந்துள்ளன. எவ்வகைச் சுவையும் நிறைந்த இவர் பாடல்களுட் கனிவுமிக்கன சில வருமாறு:—

"நான்படும் பாடு சிவனே உலகர் நவிலும்பஞ்சு (மோ
தான்படு மோசொல்லத் தான்படு மோவெண்ணத் தான்படு

காண்படு கண்ணியின் மாண்படுமாறு கலங்கி நின்றேன்
என்படு கின்றனை யென்றிரங் காயென்னி லென்
(செய்வெனே."

'நான்மறந்தே னெனினுமெனைத் தான்மறவா னெனது
நாயகனென் றுடுகின்றேன் எனினுமிது வரையும்
வான்மறந்தேன் வானவரை மறந்தேன்மா லயனை
மறந்தேனம் முருத்திரனை மறந்தேனென் னுடைய
ஊன்மறந்தே னுயிர்மறந்தே னுணர்ச்சியெலா மறந்தேன்
உலகமெலா மறந்தேனிங் குன்னைமறந் தறியேன்
பான்மறந்த குழவியைப்போல் பாரேலிங் கெனையே
பரிந்துநின தருட்சோதி புரிந்துமகிழ்ந் தருளே.'

## சுப்பிரமணிய தேசிகர்.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியிலே திருவாவடுதுறை யாதீனத்திற் றலைமைபூண்டிருந்த சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் தமிழ்ப்புலவர்களை மிகவும் போற்றி வந்தனர். அவர்களாலே ஆறுமுக நாவலர்க்கு 'நாவலர்' என்னும் பட்டம் அளிக்கப்பட்டதாகத் தெரிகின்றது.

## மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

துறைசை ஆதீனத்திற்குரிய பெரும் புலவராயிருந்தவர் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. இவர் மாணவர்கள் பலர் தமிழ்க்கல்வியை யாண்டும் பரப்பினர். தாக்ஷிணாத்ய கலாநிதி மகாமகோபாத்தியாயராகிய உ. வே. சாமிநாத அய்யர் அவர் மாணவர்களில் ஒருவர். பிள்ளையவர்கள் நால்வகைக் கவி பாடுவதிலும் திறமை வாய்ந்தவர். நாளொன்றுக்கு மூந்நூறு பாட்

டுப் பாடுவது இவர்க்கு எளிதென்ப. இவர் செய்த பெருநூல்கள் தலபுராணங்களாகும். இவர் பதினாறு தலபுராணங்கள் பாடியுள்ளார்கள். அவற்றுட் சிறந்தது திருநாகைக்காரோணப் புராணம். திருக்குடந்தை, மாயவரம், திருத்துருத்தி, திருஉறந்தை, திருக்குறுக்கை வீரட்டம், திருவாழ்கொளிபுத்தூர், ஆற்றூர், மண்ணிப்படிக்கரை, வீரவனம், திருமுல்லைவாயில் முதலிய திருப்பதிகளுக்கு இவர் புராணம் பாடியுள்ளார். சூதசங்கிதை இவரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுத் தேவராசப் பிள்ளை யென்பார் பேரால் வெளியிடப்பட்டுள்ளது. அது மூவாயிரம் பாட்டுடையது.

குசேல புராணமும் இவரால் இயற்றப்பட்டதென்ப. இவராற் பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ் பத்து என்ப. அவற்றுட் பலபல திருப்பதிகளிலே வீற்றிருக்கும் இறைவியின்மீது பாடப்பட்டவை. திருஇடைகழி முருகர்மீது ஒரு பிள்ளைத்தமிழ் இவராற் பாடப்பட்டுள்ளது. இவரது சேக்கிழார் பிள்ளைத்தமிழ் மிகவும் பாராட்டற்பாலது. துறைசை அம்பலவாண தேசிகர்மீதும் இவர் ஒரு பிள்ளைத்தமிழ் பாடினர்.

இவர் செய்த அந்தாதிகள் பதினாறென்ப. அவை தில்லையமக அந்தாதி, திருவானைக்காத் திரிபந்தாதி, திருச்சிராப்பள்ளியந்தாதி, திருத்துறைசையந்தாதி, திருஞானசம்பந்தர் பதிற்றுப்பத்தந்தாதி முதலியன. திருஞானசம்பந்தர் ஆநந்தக்களிப்பு என்ற சிறுகாப்பியமும் இவராற் பாடப்பெற்றது. இவரால் நான்கு

மாலைகள் பாடப்பெற்றுள்ளன. அவற்றுள் திருவா னைக்கா இரட்டை மணிமாலை, துறைசைச் சுப்பிரம ணிய தேசிகர் மாலை என்பவை பெரிதும் பாராட்டற் பாலன. திருவாரூர்த் தியாகராசலீலை, திருவிடைமரு தூர் உலா, காழிக்கோவை, எறும்பியீச்சரம் வெண் பா என்பன இவரது பிற சிறுகாப்பியங்களாகும். இவரால் எவ்வகைச் சித்திரக்கவியும் பாடப்பெற்றுள் ளது. இவரைப்போலத் தமிழிலே அளவிறந்த நற் பாடல்கள் இயற்றினார் வேறொருவரும் இல்லை. இவ ராற் செய்யப்பட்ட தனிப்பாடல்களும் பல. குமர குருபர அடிகளது வரலாறும், சிவஞான முனிவர் வரலாறும் இவராற் செய்யுளில் இயற்றப்பட்டுள்ளன. தம்முடைய பாட்டினை ஒரு தனிச் செய்யுளில் இவர் கொடி முந்திரிக்கனிக்கு உவமித்துள்ளார். அப்பாட்டு வருமாறு:

"முருகார்பூந் தடஞ்சூலவு மாவடுதண் டுறைத்தலத்து
முதல்வா தெய்வத்
திருநாவுக் கரசர்முதன் மூவர்தமிழ்த் தேனுண்டு
தெவிட்டு நிற்குந்
தருநாவுக் கினிமையிஃ தெனக்கொடிமுந் திரிக்கனியான்
றருத லன்பின்
ஒருவேடன் றருதசையு மமிழ்தினுஞ்சீர்த் தெனவுண்ட
வுறுதி கொண்டே,"

சேக்கிழார் பிள்ளைத்தமிழிற் சிறந்தவொரு செய்யுள் வருமாறு:

"பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப்
பாடிய கவிவலவ

பயனில தாகுஞ் சிந்தா மணிவழி
படர்த லெனப்போதித்
தத்திச் சுவையொரு தோள்வைத் திடுபு
லுயர்த்தோன் மனமடியா
ருறுசெய னுடைப் புரிமதிவலவு
வொலாவரு கந்தர்திற
முத்தித் திறமல வென்றள விலர்பான்
முற்றிச் சிவமடைய
யல்செயல் வலவு வயற்கண் மடைச்செறி
முத்த மனைத்தினையுந்
தத்திப் புனல்பாய் குன்றைத் திருமுனி
தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய
தாலோ தாலேலோ.”

## வேதநாயகம் பிள்ளை.

இவரோடொத்த காலத்தவராய்த் திகழ்ந்த மற்றொரு புலவர் வேதநாயகம் பிள்ளை யென்பார். இவரும் தம் காலத்தவராயிருந்த அறைறைசை ஆதீனத்தலைவர் சுப்பிரமணிய தேசிகரிடம் மிகுந்த நட்புப்பாராட்டியவர். திரிசிரபுரத்துக் கருகிலுள்ள வேளாண்குளத்தூரிலே பிறந்து இவர் சீர்காழி, மாயவரம் (திருமயிலாடுதுறை) முதலிய இடங்களில் ‘ஜில்லா முன்சீப்’ (District Munsif) பாக இருந்தவர். இவர் கத்தோலிக் கிறித்துவ மதத்தைச் சேர்ந்தவர். இவர் பொதுநோக்குடையவ ரென்பது இவரது ‘சர்வசமய சமரசக் கீர்த்தனை’ யால் விளங்கும். நீதிநூல், பெண்மணி மாலை யென்னும் இவர் நூல்கள் செய்யுள் வடிவின.

பிரதாப முதலியார் வரலாறு, சுகுணசுந்தரி வரலாறு என்னும் இவர் நூல்கள் ஆங்கிலப் புதுக்கதைகள் (Novels) போல்வன. நகைச்சுவை புணர்த்து எல்லாருள்ளத்திலும் நன்கு பதியத்தக்க முறையில் நீதிகளை யெடுத்துக் கூறுவதில் இவர் திறமைவாய்ந்தவர். இவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மாணாக்கருள் ஒருவர் என்றுங் கூறலாம். இவர் கி. பி. 1889-ம் ஆண்டில் இவ்வுலகை நீத்தனர். இவர் தமது வேலையினின்று விலகியகாலைக் கூறிய பாட்டுக்கள் மிகவும் நகைச்சுவை பயப்பன. அவற்றுளொன்று வருமாறு:

"ஆதியையர் சுப்பையர் அப்பையரென்றுபய
வாதியைய ராக வருவோர்போ—ஓதியே
பன்னாள் கழித்தேன் பரனேயுன் றாமினி
எந்நாளும் பேசவா மீ."

இவர் சுப்பிரமணிய தேசிகர்மீது பாடிய பாட்டுக்கள் பலவற்றுள் ஒன்று வருமாறு:

"சூர்வந்து வணங்கு மேன்மைச் சுப்பிர மணிய தேவே
நேர்வந்து நின்னைக் கண்டு நேற்றிராத் திரியே மீண்டென்
ஊர்வந்து சேர்ந்தே னென்ற னுளம்வந்து சேரக் காணேன்
ஆர்வந்து சொலினுங் கேளே னதனையிங் கனுப்பு வாயே."

மதுரனுன் உன்னும் உயர்குலத்தாரைக் கடிந்து இவர் கூறிய பாட்டுகள் பலவற்றுள் ஒன்று வருமாறு:

"ஆரண வாயினர் மாடாடு கோழி யடித்தவித்துப்
பாரணஞ் செய்யப் பழகிக்கொண் டார்மது பானத்திலும்
பூரண ராயின ரின்னவர்க் கித்தத்தும் புத்தி தந்த
காரணந் தன்னைய மற்றோர்க்கிறங் கொப்பனான் றன்மைகளே."

## இராமலிங்கத் தம்பிரான்.

துறைசைச் சுப்பிரமணிய தேசிகர் காலத்திலே பல தம்பிரான்கள் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்தவராய்ப் பாவியற்றும் திறமையோடு திகழ்ந்தனர். அவருட் புலிக்குட்டி இராமலிங்கத் தம்பிரான் செவ்விய ஆசுகவி பாடுவதில் இணையற்றவர். இவர் காலஞ் சென்று ஏறக்குறைய முப்பத்தைந்து ஆண்டுகளாகின்றன. இவர் துறைசை யாதீனத்தைச் சார்ந்த ஒரு கிளைமடத்தில் அமர்ந்திருந்தகாலை ஆதீனத் தலைநகர்க்கண் வைகப் பெருமையால் வருந்தினபோது, பிற எந்த வாதீனத்திற்காவது செல்லலா மென்று அவ் ஆதீனத் தலைவர் குறிப்பித்ததற்கு விடையாகக் கூறிய பாட்டு,

"கோமுத்தி யடைந்தேன்முன் றருமபுர மெவ்வாறு
குறுகு வேன்பின்
தோமுற்ற சொக்கபுர மிதுவு மொரு பொருளாமோ
துறவி யானேற்
கேமுற்ற குன்றக் குடிவாழ்க்கை மேனெஞ்ச
மிசையு மோசொல்
காமுற்ற கூடலுந்தா னுமோசுப் பிரமணிய
கருணைக் குன்றே."

இவரது திருவாயை இவர் அடக்கட்டு மென்று கூறிய ஒருவர்க்கு விடையாகத் தந்த பாட்டு இது:

"செந்தமிழ் பாடும்வாய் திருவாய்மற் றெவ்வாயும்
சிந்தை மலஞ்சொரிவாய் நீர்சொரிவாய்—முந்தவே

*நாறும்வா யாரு நகைக்கும்வாய் மூடனே*
*தேறுவா யிச்சங் கதி.''*

## முருகதாச அடிகள்

முருகதாசசுவாமிகள் என்பார் எண்ணிறந்த வண்ணக் கவிகள் இயற்றுவதில் வல்லவர். இவர் திருநெல்வேலியிலே சைவ வேளாண் மரபிலே பிறந்து முருகப் பெருமானைச் சிறப்பாக வழிபட்டு அவ்வழி பாட்டின் பயனாகப் பாவியற்றும் வல்லமை பெற்றவர். இவர் திருச்செந்தூர், பழனி முதலிய திருப்பதிகளிற் சில காலந் தங்கியிருந்து திருவாமாத்தூரில் வதிந்தனர். சென்ற நூற்றாண்டின் இறுதிவரை இவர் திகழ்ந்தனர். தண்டபாணி சுவாமிகளென்றும், திருப்புகழ்ச் சுவாமிகளென்றும் இவருக்குப் பெயருண்டு. இவர் தில்லைத் திருவாயிரம், தெய்வத் திருவாயிரம், ஏழாயிரப் பிரபந்தம் என்னுந் துதிநூல்களையும், திருச்செந்தூர்க்கோவை, திருச்செந்தூர்த் திருப்புகழ், திருமயிலைக் கலம்பகம், சென்னைக் கலம்பகம் முதலிய சிறு காப்பியங்களையும், ஆமாத்தூர்த் தலபுராணம், அருணகிரிநாதர் புராணம் முதலிய புராணங்களையு மியற்றினர். இவர் எழுபது புலவர்கள் வரலாற்றைப் 'புலவர் புராணம்' என்னும் நூலிற் கூறியுள்ளார். வண்ணத்திலக்கணம், அறுவகையிலக்கணம் என்னும் இலக்கண நூல்களும் இவர் இயற்றினரென்ப. இவர் சந்தப்பாடல்கள் மிகநெடியன. இவர் நெய்தற்றொழிலை வியந்து கூறியதாகச் சொல்லும் பாட்டு இது:

"செய்யுந் தொழிலனைத்துஞ் சீர்தூக்கிப் பார்க்குங்கால்
நெய்யுந் தொழிற்கு நிகரில்லை—வையகத்தில்
தென்னு தமிழ்வேதஞ் செப்பியநாட் சீர்படுத்தும்
வள்ளுவனுர் கொண்டதல்ல வா."

## முத்துராமலிங்க சேதுபதி

முத்துராமலிங்க சேதுபதி என்பார் இந்நூற்றுண்டின் நடுப் பகுதியிலே இராமநாதபுரம் மன்னராய்த் திகழ்ந்து பன்னூல்க ளியற்றினவர். முருகர் அநுபூதி, பிரவாகரமாலை, வள்ளிமணமாலை, சரசசல்லாபமாலை, சடாக்கரசாரப் பதிகம், நீதிபோதம், பாலபோதம் முதலியன இவரியற்றிய நூல்கள். இவர் சிலேடை பாடுவதில் மிகுந்த ஆற்றலுடையவர். இவர் பெருங் கொடை வள்ளலாய்த் திகழ்ந்து கி. பி. 1873ல் விண்ணுல கடைந்தனர்.

இவர் ஏணிக்குந் தோணிக்கும் பாடிய சிலேடை,

"நீண்டவுரு வாகியதா னீர்மேனடக்கு கையால்
ஈண்ட விரும்படிதா னேந்தலாற்—பூண்டமலர்
வாணிகாணி யாகவாழு மானதேவை மாநகர்க்குள்
ஏணிதோணி யாகவே யிசை."

இவர் முருகரைப் பாடிய பாடல்கள் மிக்க நயமுள்ளன.

"செட்டியெனும் பேர்படைத்த சேவலவ நிற்குரிய
சட்டிகண்டே னெற்குமலர்த் தாடந்தாள்—கட்டிமணிச்
சுட்டிகட்டு மெட்டிளாள் சுரப்பெணுங் குறப்பெணுங்கை
தொட்டுமேவு மிட்டனே யிதோ."

"காமமெனுங் கள்ளுண்டு காயாது வேலர்திரு
நாமமெனுங் கள்ளுண்ண நாடுவாய்—காம
மலைத்துன்பங் காட்டுமற் றந்நாம நெஞ்சின்
மிலைத்தின்பங் காட்டு மிக."

## பாற்கர சேதுபதி.

இவர் குமாரர் பாற்கர சேதுபதி தமிழறிவு சான்றோரா யிருந்தமையோடு நாவலர்க்கும் வரையாது வழங்கிய கொடைவள்ளல். அவர் சிவபதம் உற்ற காலை வேம்பத்தூர்ப் பிச்சுபாரதியார் என்பார் பாடிய பாட்டு,

"மையினையுஞ் சிந்தா மணியினையும் வென்றகொடைக்
கையினையும் வாய்ப்பிரசங் கத்தினையுந்—துய்யபுகழ்
நின்னைறக்கா ளத்தி நிகர்பாற் கரபூபா
என்றைக்குக் காண்போ மினி."

## பொன்னுச்சாமித் தேவர்.

இராமநாதபுரம் சிற்றரசில் தலைமை அதிகாரியா யிருந்த பொன்னுச்சாமித் தேவர் முத்துராமலிங்க சேதுபதிக்கு மூத்தவரென்ப. இவர் ஆறுமுக நாவலர் காலத்தில் மிகப் புகழுடன் விளங்கினர். இவர் யமகம் பாடுவதில் வல்லவர். கடல்வருணனை யொன்று பாடியுள்ளார்.

முத்துவீரப்பப் பிள்ளை யென்னும் புலவர் இவரோடுடன்பயின்றனர். இருவருந் தம்முள் கடவுளுண்மையைப்பற்றி வழக்கிட்டு வினுவிடைகளாகப் பல பாடல்

கள் பாடியுள்ளார். இவர் கன்னியர்க்குக் கடலை உவமித்துப் பாடிய பாடல் வருமாறு:

"எடுத்தும் படுத்து மியம்பியுநின் றேங்கிக்
கொடுத்து மிரிந்துங் குறுதி—அடுத்துந்தாம்
உன்னு பொருட்குழல்வா ரொத்திடுமுன் னாழத்தால்
கன்னியரைப் போலுங் கடல்."

## பாண்டித்துரைத் தேவர்.

பொன்னுசாமித் தேவரவர்களது மகனாராகிய பாண்டித்துரைத் தேவரவர்கள் இப்போதுள்ள மதுரைத்தமிழ்ச் சங்கத்தை நிலைநாட்டினவர். இவர் தமிழிலக்கண இலக்கிய ஆராய்ச்சியும், சைவநூலறிவும் நன்குடையவர். இவர் சைவமஞ்சரி, துதிமஞ்சரி, பன்னூற்றிரட்டு என்னுந் தொகை நூல்களை இயற்றியுள்ளார். ஆசிரியர் சிவஞானயோகிகள் மீது இனிமை மிக்கதோர் இரட்டை மணிமாலை இவர் பாடினார். இராச இராசேசுவரி பதிகம் ஒன்று இவர் தமது தெய்வத்தின்மேற் பாடினாராம். இவர் சிவஞான சுவாமிகள்மீது பாடிய இரட்டைமணி மாலையில் ஒரு செய்யுள் வருமாறு:

"கலைதேர்ந்மச்சி வாயகுரு கருணைக்கடலிற் றிளைத்தாடிக்
கலகப்பாசத் தொடராறுத்துக் காமத்தறியை யறவீழ்த்தி
யலையுஞ்சமய தருக்களைக்கீ ழடிவேரோடு மகழ்ந்தெறிந்திட்
டருளின்படாத்தை முகமேற்கொண் டாதிவேதா கமங்க
(ளெனுந்
தொலையாமணிகளிருமருங்குந் தொனிக்கச்சைவ மதம்பொ
(ழிந்து.

துங்கமோடு முலகமுற்றுஞ் சுற்றும்வெற்றி வாரணமே
மலையாதருளு முனிவர்சிகா மணியேவருக வருகவே
வளமார்துறைசைச் சிவஞான வள்ளால்வருக வருகவே.''

எட்டயபுரமும் சேற்றூரும்.

பாண்டிய நாட்டுச் சேற்றூர்ச் செமீன்தாராய் முப்பதாண்டுக்கு முன்னிருந்த சுந்தரராசு பாண்டிய ரென்பார் ஒரு சிறந்த பாவலராக இருந்தனர். அவர் தலயாத்திரைக் கவிகளும் திருவிழாக் கவிகளும் பல இயற்றியுள்ளார். அவரும் சுப்பிரமணிய தேசிகர் காலத்தவரே.

சுந்தரராசு பாண்டியர்க்கு ஆசிரியராக இருந்த அரண்மனைப் புலவர் இராமசாமிக் கவிராய ரென்பவர் பல அருமையான பாடல்கள் பாடியுள்ளார்.

முகவூர்க்கந்தசாமிக் கவிராயர் என்பார் சேற் றூர்ச்செமீனில் அரண்மனைப் புலவர் பரம்பரையில் வந்தவர். அவர் சுப்பிரமணிய தேசிகரோடு ஒரு சாலை மாணுக்கர்; நினைவாற்றலும் சொற்பொழி வாற்றலும் உடையவர்; 1823 முதல் 1887 வரை நிலவுலகில் வாழ்ந்தவர்.

அவர் மகனார் மீனாட்சிசுந்தரக்கவிராய ரென்ப வர் எட்டயபுரம் செமீனில் அரண்மனைப் புலவராயி ருந்தார். எட்டயபுரம் இளவரசர்மீது ஒருதுறைக் கோவை, முருகர் அனுபூதி, குதிரைமலைப் பதிகம், கழுகுமலைத் திரிபந்தாதி முதலிய நூல்கள் இவராலி யற்றப்பட்டுள்ளன. யமகம் பாடுவதில் மிக்க திறமை வாய்ந்தவர்.

"முத்தமிழைத் தனைகழங்கம் மனைபயிலும் பேதைவந்தனள்
முகத்தி லேலை
முத்தமிழைத் தனையகலா பத்தையெடுத் தணிமயலை
மூட்டு கோவை
முத்தமிழைத் தனைமிபண்டுஞ் சுவைசுவைசம் போகசுக
முயற்சி செய்வாய்
முத்தமிழைத் தனைதுபுக ழாக்குமிந்த யாலயமா
முக்ய மாலே."

"கண்டுவெண்டு நிகர்மதுர மொழிவிழிமா துன்பவனி
காதல் கொண்டு
கண்டுவண்டு காகழுவ வுடைநெகிழ வணைவிரித்து
காம னம்பின்
கண்டுவண்டு வதிமயங்கு மிவளையணை புராணமிலக்
கணமோ டேகி
கண்டுவண்டு திகள்பெருக வுணரிருந்த யாலயசிங்
கார மாலே."

இராச செகவீர ராமகுமார எட்டப்ப மன்னன் வேண்டுகோளின்படி குவலயாநந்தம் இவரால் மொழி பெயர்க்கப்பட்டது. மாணிக்கவாசகத் தம்பிரான் இயற்றிய குவலயானந்த மொழிபெயர்ப்புக்கு உதாரணச் செய்யுள் வருத்தவர் இவரது உடன் பிறந்தார் துறைசைப் பழனிக் குமாரத்தம்பிரான் என்ப.

சேற்றூர்ச் செமீனில் இராமசாமிக் கவிராயரது மக்கள் மூவர். அவர்களுள் மு. ரா. அருணாசலக் கவிராயர் என்பார் சிவகாசித் திருப்பதிப் பெருமான் மீது பல சிறு காப்பியங்கள் செய்தவர். சிவகாசிப் புராணமொன்றும் இவர் இயற்றியுள்ளார். பல அந்

தாதிகளும் பல பிள்ளைத் தமிழ்களும் பல பதிகங்களும் இவர் இயற்றியிருக்கிறார். குறுக்குத்துறைச் சிலேடை வெண்பா என்பதும் இவர் பாடியதே. ஆறுமுக நாவலர் வரலாற்றை இவர் பாட்டில் அமைத்துள்ளார். இவர் திருச்செந்தூர்ப் புராணம், திருப்பரங்கிரிப் புராணம், திருக்குற்றாலப் புராணம் முதலிய புராணங்களுக்கு உரைநடை நூல்கள் வகுத்துள்ளார். சிவரகசியம், கம்பராமாயண ஆரணிய காண்ட உரை முதலியவற்றை இவர் அச்சிற் பதிப்பித்துள்ளார். இவர் பாடல்களுட் சில வருமாறு:—

"சேற்றார் மிகச்சீதஞ் செய்யுமென்றோ செம்பொனுயர்
மாற்றாரு மேனி மழகளிறே—போற்று
மயிலுகந்த கந்தர்முன்பு வந்துதித்த தேவே
வெயிலுகந் திருந்த விரதம்."

"வடவேங் கடமலையில் வாழ்முருகா நிற்குந்
திடமோங்கு நின்சீர் தெரிந்து—மடமோங்க
நாமத்தைச் சாத்தினார் நம்மையுமென் செய்வாரோ
காமுற்றிங் காரிருப்பார் காண்."

இவருடைய தம்பி சுப்பிரமணியக் கவிராயரென்பவர் திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் காலத்தே ஆதீனப் புலவராய்த் திகழ்ந்தனர். இவர் ஞானாமிருதத்தை அச்சிற் பதிப்பித்துள்ளார். செப்பறைப் பிள்ளைத்தமிழ் இவரால் இயற்றப்பட்டது.

இவர் உடன் பிறந்தார் கந்தசாமிக்கவிராயர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் தமிழ்நூற் பரிசோதகராயிருந்து தனிச்செய்யுட் சிந்தாமணி இயற்றியவர்.

திருநெல்வேலிப் போற்றிமுத்துப்பிள்ளை யென்பவர் பொன்னுசாமித் தேவரைப்பற்றி மிக அழகாகப் பாடியுள்ளார்.

“ இப்புவியி லென்கவலை யெப்பொழுது தீருமினி
யேதுமொரு வழியு மறியேன்
ஈசனார் தம்மிடம் பேசுவோ மென்னினு
மிராந்தவனு மலைகி றானே
மற்புயன் றிருமா லிடத்தினிற் செல்லவோ
மண்ணுண் டுறங்கி னானே
மலாயனு மணமெடுத் தலைகிறா னேபுதுவை
வளர்பொன்னு சாமி சமுகம்
இப்பொழுது சேரலா மொப்பிலா முத்த மிழி
லெதினும்வல் லவனுச் சுதே
என்கவி யவன்செவிக் கன்பா யிருக்குமோ
விருகிதிய முதவு வானோ
செப்புசீ புகலிடம் ஞானநெறி யடையவோ
சித்தமொரு நிலையில் லையே
தினமெனுளம் வேண்டவரு கருணைமழை சார்ந்துபொழி
திருவருள்செய் காந்தி மதியே ”

திரிசிரபுரம் கோவிந்தப் பிள்ளை யென்பவரும் பொன்னுசாமித் தேவரைப் பாடியுள்ளார். இவர் 1890 வரை நிலவுலகிற் றிகழ்ந்தவர். இராசமன்னார் கோயில் தலபுராணமும் அலங்காரக் கோவையும் இவர் இயற்றினர்.

விறலி விடுதூது பாடிய சிரங்க அட்டாவதானியார் வேறு; முத்துராமலிங்க சேதுபதி யவர்கள் அரண்மனைப் புலவராயிருந்த அட்டாவதானம் கிருட்டிணையங்காரென்பவர் வேறு.

பொன்னுசாமித் தேவர் காலத்திலே முதுகுளத்தூரில் சுப்பிரமணியபிள்ளை யென்பவரும் பூவாருசாமி பிள்ளை யென்பவரும் சிறந்த புலவராய்த் திகழ்ந்தனர். முன்னையவர் நாலு மந்திரி கதை, பஞ்சதந்திரம், வீர குமார நாடகம், விடநிக்கிரக சிந்தாமணி யென்னுஞ் செய்யுள் நூல்களை இயற்றியவர். இவர் கூறு ஆண்டு நிலவுலகில் திகழ்ந்தவர். பூவாருசாமி பிள்ளையின் மகனார் ஆறுமுகம்பிள்ளை யென்பவர் அரிச்சந்திர வெண்பாவையும், மதுரையமக வந்தாதி முதலிய சிறு காப்பியங்களையு மியற்றினர்.

பொன்னுசாமித்தேவர் காலத்திலேயே சோழ நாட்டிலே தில்லையாம்பூரிற் பிறந்த சந்திரசேகரக் கவி ராயர் என்பவர் தனிப்பாடற்றிரட்டு என்னும் புத்தகத்தை அச்சிட்டனர். இவர் துலுக்காணத்தம்மன் பதிகம் ஒன்று பாடினர். இவரியற்றிய சோதிட நூல் வருடாதி நூலென்ப.

தூரியகவி திருமலைக்கொழுந்துக் கவிராய ரென்பார் இற்றைக்கு 70 ஆண்டுகட்கு முன்னர்ச் சிக்கிலி ஐயர் குளம் என்னும் ஊரிலே கம்மாள மரபிற் பிறந்தவர். இவர் மதுக்குடியில் நோக்குமுள்ளவர்போல் சில அடிகள் இயற்றியுள்ளார். இவர்,

"தாசீசா வொன்றைத் தாவிடிலோ இன்றைக்கு
நீசீசா வென்றே நிகழ்த்துவேன்"

என்றது காண்க.

அழகிய சோக்கநாதபிள்ளை யென்பவர் திருநெல்வேலியைச் சார்ந்த தச்சநல்லூரிற் பிறந்து நெல்லைக்

காந்திமதியம்மைமீது பிள்ளைத் தமிழ்மாலை, அந்தாதி முதலியன பாடினவர். இவர் தம்மைப்போற்றிவந்த முத்துசாமிப்பிள்ளை யென்பார்மீது 'காதல்' லொன்று பாடியுள்ளார். இவர் சிலேடை பாடுவதில் வல்லவர். சிலவருமாறு :—

சிவனுக்கும் தேங்காய்க்கும் :—

"கல்லா லடியுறலாற் கண்மூன் றிருப்பதனால்
எல்லோரும் பூசைக் கெடுத்திடலால்—வல்லோடு
கொன்றைகையாற் கங்கா குலமுத்து சாமிமன்றை
கள்ளிதழி யாணிகர்தேங் காய்."

தாம்பிரபன்னிக்கும் சந்திரனுக்கும் :—

"மீனைப் பொருந்திடலான் மிக்க கலை தோய்ந்திடலால்
தானக்க மண்டலமே சார்ந்திடலான்—மானத்தால்
அம்புவிக்கோ ராபரண மானமுத்து சாமிமன்றை
செம்புந்தி நேர்சந் திரன்."

இவர் சுமார் 45 ஆண்டுகட்கு முன் காலஞ்சென்றவர். இவர் அடைமொழியின்றிப் பாடிய பாட்டுக்களில் ஒன்று வருமாறு :-

"நாய்நரிசிங் கம்மாடா னைமிளா பன்றிகடு
வாய்குதிரைக வரிமான்புல்—வாயொட்
டகங்கழுதை யாட்டுக்க டாபுலிகாண் டாமி
ருகங்க ரடியெ ருமை."

மகம்மதியர்களுக்குள் குணங்குடிமத்தான் சாயபு என்பவருடைய பாடல்கள் மிகவும் அன்பு விளைப்பன. அகத்தீசர் சதகம், நந்தீசர் சதகம் முதலிய சிறுகாப்பியங்களும் தனிப்பாடல்களும் இவர் இயற்றியுள்ளார்.

இவர் வாலையை வழிபட்டுச் சித்தமார்க்கத்தில் நின்ற வர்; கிறித்துமத கண்டனவச்சிர தண்டம் என்னும் ஒரு நூல் இயற்றியுள்ளார். இவர் மகமது நபியையும் பாடினவர். இவர் காலம் இந்நூற்றாண்டின் முற்பகுதி யென்றும், 18-ம் நூற்றாண்டென்றுங் கூறுவாருமுளர். தேவகோட்டைச் சின்னைய செட்டியா ரென்பவர் வன்றொண்டச் செட்டியா ரென்பார்க்கு மாணவராய் அவர்பால் இலக்கிய நூலறிவுஞ் சித்தாந்த நூலறிவும் பெற்றவர். இவர் தேவைத் திரிபந்தாதி, அருணைச் சிலேடை வெண்பாமாலை செய்தவர். இவரது சொற் பொழிவுகள் திரட்டி அச்சிடப்பட்டுள்ளன.

கல்விக் களஞ்சியப் புலவ ரென்பவர் மதுரையை யடுத்த மேலூரிலே உமாறுப் புலவர் மரபிலே பிறந்த வர். புலவர் சீராப் புராண வண்ணம், சித்திரக் கவித் திரட்டு என்னும் நூல்கள் இயற்றியவர். இவர் முருகர் மீதும் பல பாடல்கள் பாடியுள்ளார்.

திருநெல்வேலியிலே கிருட்டிணபிள்ளை யென்ற கிறித்துவப் புலவ ரொருவர் கிறுத்து சமயச் சார் பான இரட்சணிய யாத்திரிகம் முதலிய பல நூல்கள் இயற்றியுள்ளார்.

தேவராய சுவாமி யென்பவர் கந்தர் சட்டிக் கவ சம் என்னும் ஒரு சிறு நூல் இயற்றியுள்ளார்.

சுப்பிரமணியப் புலவ ரென்னும் மருத்துவப் புல வர் பதார்த்தகுண சிந்தாமணி, தைலவருக்கச் சுருக் கம் முதலியன இயற்றினர்.

அறுபது ஆண்டுகட்குமுன் சென்னையில் வசித்த முத்துராம முதலியா ரென்பவர் மகா பாரதக் கீர்த்தனம் என்னும் இசை நூல் இயற்றியுள்ளார். கிலனூர்ச் சோதிட சார்வ பௌமர் என்பவர் சாதகா லங்கார மென்னும் சோதிட நூல் இயற்றியுள்ளார்.

சென்னையில் வசித்த காசி விசுவநாத முதலியா ரென்பார் டம்பாச்சாரி விலாசம், தாசில்தார் நாடகம் என்னும் நாடக நூல்களையும் வேதப்பொருள் விளக்கம், யாப்பிலக்கண வினாவிடை யென்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

சென்னை இராசதானிக் கலாசாலையில் கணித நூற் பேராசிரியராய்த் திகழ்ந்த ராவ்பகதூர் அரங்கநாத முதலியார் M. A; என்பார் தமிழறிவு சான்றோராய்க் கச்சிக் கலம்பக மென்னும் சிறுகாப்பிய மொன்றை இயற்றினார்.

திருவனந்தபுரம் அரசினர் கலாசாலையில் தத்துவ சாத்திரப் பேராசிரியராய்த் திகழ்ந்த ராவ்பகதூர் சுந்தரம் பிள்ளை எம். ஏ. 'மனோன் மணீய' மென்னும் அழகிய நாடகக் காப்பியத்தை மக்களியற்கை செவ்வியின் விளங்கும் நயஞ் செறிந்திலங்க இயற்றியுள்ளார். அவருடைய தத்துவக் கொள்கையை அதற்கு உள்ளீடாகவும் அமைத்தனர். இப்பொழுதுள்ள தமிழ் நாடகக் காப்பியங்களில் தலையாயது இவருடைய நூலே. அதில் இவர் கூறியுள்ள தமிழ்த்தெய்வ வணக்கம் யாவராலும் போற்றற்பாலது. இவர் செய்த நூற்றொகை விளக்க மென்னும் ஓரரிய நூல் ஆங்கி

லத்திலும் தமிழிலு முள்ள நுண்ணூல்களைத் தொகுத்து வகுத்துக் காட்டுவது.

இவர் இக்காலத் தமிழ் ஆராய்ச்சிக்கு அடிப்படை கோலியவர். தமிழும் தமிழரும் ஆரிய வகுப்பு முறையுட் படாத தனிப் பெருமை உடைமையை நிலை நாட்டித் தமிழ்ப் புலவர் கண்ணைத் திறந்தவர். தமிழாராய்ச்சிக் குறைபாடுடைய ஐரோப்பிய ஆரியப் புலவருடைய தப்புக்கொள்கைகளைக் கண்டொதுக்கித் தமிழ் வரலாற்றின் உண்மையை விளக்கும் பொருட்டு இவரியற்றிய நூல் 'திருஞானசம்பந்தர்கால நிச்சய' மென்னும் ஆங்கிலக் கட்டுரையாகும். இவர் நெடுநாளிருந்து தமிழர்க்கு நலம் புரியாது 1897-ல் இவ்வுலகை நீத்தமை தமிழ் மக்களது தவக்குறைவே.

யாழ்ப்பாணத்துப் புலவர்களுள் சங்கர பண்டிதரென்பார் சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன் திகழ்ந்தவர். அவர் வேளாள மரபினர். அவர் வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தலிலும், சைவ சமயத்தை நாட்டுதலிலும் மிக வல்லவர். அவர் சைவப் பிரகாசனம் என்னும் தருக்க நூல் இயற்றியவர். சிவதூடண கண்டனம், கிறித்துமத கண்டனம் என்பன இவரது மறுப்பு நூல்கள். சிவபூசையந்தாதி முதலியவற்றிற்கு இவர் உரையும் எழுதியுள்ளார். இவருடைய மகனார் சிவப்பிரகாசப் பண்டிதரும் வடமொழி வல்லுநரே.

யாழ்ப்பாணத்து உடுப்பட்டிச் சிவ சம்புப் புலவரென்பவர் பாற்கர சேதுபதியின் மீது கல்லாட சாரக்

கவித்துறை யென்னும் நூல் இயற்றியுள்ளார். செந்தில் யமகவந்தாதி, புலோலி நான்மணிமாலை, யாப்பருங்கலக் காரிகை உரை முதலியன இவர் இயற்றிய பிற நூல்கள்.

சங்கர பண்டிதரின் மாணாக்கராகிய முருகேச பண்டித ரென்பவர் இலக்கணப் பயிற்சி மிக்குடையவர். இவர் பலர்க்குத் தமிழ் கற்பித்தவர். இவர் சுன்னாகம் குமாரசாமிப் புலவர்க்கு ஆசிரியர். மயிலணிச் சிலேடை வெண்பா, நீதிநூறு, சந்திரசேகர விநாயக ஊஞ்சல் முதலிய நூல்கள் இவருடையன. நடுவெழுத்தலங்கார முதலிய சித்திரக் கவிகள் பாடுவதில் இவர் வல்லவர். புராண விரிவுரை செய்வதிலும் இவர் வல்லவர்.

சிவசம்புப் புலவரது மாணாக்கராகிய கணபதிப் புலவர் வடமொழிப் பயிற்சி மிக்கவர். இவர் 'வில்கணீயம்' என்னும் வடமொழிக் காப்பியத்தைத் தமிழில் மொழி பெயர்த்தவர்.

வண்ணார்பண்ணைக் கணேச பண்டித ரென்பார் இவரின் வேறாவார். இவர் இளைசைப் புராணம் இயற்றியவர்.

மானிப்பா சதாசிவப்பிள்ளை யென்னும் கிறித்துவப் புலவர் பாவலர் சரித்திர தீபகம், நன்னெறிக்கதா சங்கிரகம் முதலிய நன்னூல்க ளியற்றினர்.

யாழ்ப்பாணங் கணபதிஐய ரென்பவர் பல நாடகங்கள், இயற்றியுள்ளார். அதிரூபவதி நாடகம், அபி

மன்னு நாடகம், அலங்கார ரூபவதி நாடகம், மலையகந்தி நாடகம், வைத்தியலிங்கக் குறவஞ்சி என்பன இவர் இயற்றியவை. இவருங் கணேச பண்டிதரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை. இவர் இயேசுமத சங்கல்ப நிராகரண மென்னும் அரிய நூலின் வாயிலாகக் கிறித்து மதத்தின் கொள்கையும் மறுப்புங் கூறியுள்ளார்.

தமிழையுந் தமிழ்ப்புலவர் பலரையுங் காத்து வந்த யாழ்ப்பாணம் உடுப்பிட்டிக் கதிரைவேற்பிள்ளை யென்பார் ஒரு பெரிய அகராதி தொகுத்தவர்.

டாக்டர் கால்டுவெல் என்னும் ஆங்கிலப் பாதிரியார் திருநெல்வேலிச் சில்லாவில் இடையன்குடி யென்னுமிடத்தில் நெடுநாள் வதிந்திருந்தார். தமிழ் ஆராய்ச்சி செய்து தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலிய தமிழ்க் கிளைமொழிகளையும் நன்கு கற்று இம்மொழிகளின் இலக்கணங்களனைத்தையும் ஒப்பிட்டு மொழிநூல் உண்மைக்கு ஏற்றவாறு ஒப்பிலக்கண மென்று ஆங்கிலத்திற் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னரேயே இயற்றியுள்ளார். அது தமிழ் மக்களாற் போற்றற்பாலது.

டாக்டர் ஜீ. யூ. போப் என்பவர் சைவ சித்தாந்த நூல்களை இனிது கற்று மிக ஆர்வத்தோடு திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் செவ்விய உயர்தர முறையில் அச்சிட்டுள்ளார். இவர் திருக்குறளினையும், நாலடியாரையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இவர் மிகுந்த தமிழ்ப் பற்றுடைய

ரென்பது இவர் இவ்வுலகம் நீத்ததற்கு இடும் நினைவுக் கல்லில் இவர் 'தமிழ் மாணவர்' என்று குறிக்கப்படுவதனால் விளங்கும். ஆசிரியர் திருவள்ளுவனாரை மன்பதைப் பெரும் பாவலரென்று (Bard of universal man) இவர் கூறியது காண்க.

பாண்டி நாட்டிற் கரிவலம் வந்த நல்லூருக்கு அடுத்த சென்னிகுளம் என்னும் சிற்றூரிலே பிறந்து, சேற்றூர், ஊத்துமலை யென்னும் செமீன்களிலே அரண்மனைப் புலவராய்த் திகழ்ந்தவர் அண்ணாமலை ரெட்டியார். இவரது காவடிச் சிந்து, சிந்துகள் யாவற்றினுஞ் சிறந்ததென்ப. சொல்வளமும் ஆற்றொழுக்கும் அதன்கண் அமைந்திருப்பதுபோல யாண்டுங் காண்டலரிது. சங்கரநாராயண கோயிற்றிரிபந்தாதி நவநீத கிருட்டினன் பிள்ளைத்தமிழ் என்பன இவரியற்றிய பிற நூல்கள். இவர் கி. பி. 1890-ம் ஆண்டில் இவ்வுலகை நீத்தனர். இவரது தமிழ்ப் பற்றுப்பின்வரும் பாட்டால் தெரியவரும்.

"தெலுங்கவிக்கு நிகர்துலுக்குக் கன்னடமா ரியம்வரைச்சித்
திரத்தின் சென்னி
குலுங்கவிக்குங் கசக்கமது ரிதத்தமிழு ணர்ந்து பச்சைக்
கோடைத் தேர்முன்
செலுங்கவிக்குந் தெரிவரிய கலைபயின்ற செவியிடையான்
றெரியா தேபு
கலுங்கவிக்கு தலைமொழியும் வினவியனு தினமகிழுங்
கருணை யானே"

இனிப்பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்த உரைநடைநூல் வல்லாரைப்பற்றி ஆராய்வாம்.

சென்னை வீராசாமி செட்டியா ரென்பவர் 1856-க்குப்பின் 'விநோதரச மஞ்சரி' யென்னும் உரை நடை நூல் எழுதினர்: இவர் தெளிதமிழ் நடையிற் பல அரும்பொருள்களைப் பற்றியும் கம்பர் ஒட்டக் கூத்தர், புகழேந்தி, காளமேகம், காளிதாசர் முதலிய புலவர்களைப் பற்றியும் கட்டுரைகள் எழுதிக் கொடுத் துள்ளார்.

பொன்னுசாமித்தேவர் காலத்திருந்த சோழ நாட்டுக் கபித்தலம் துரைசாமி மூப்பனார் என்பவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர். அவர் அயோத்தி மா நகர மான்மியம், மகாபாரதச் சுருக்கம், கம்பராமா யண அருங்கவிப் பொருள் விளக்கம், சானகி பரிண யம் என்னும் பெருநூல்களை யியற்றினவர்.

மூடிச்சூர் அப்பாவு முதலியாரென்பவரும் வைண வச் சமயத்தினரே. இவர் கூரேசவிசயம், தென்னு சாரியப் பிரபாவ தீபிகை, சற்சம்பிரதாய தீபிகை, விட்ணுதத்துவ விளக்கம், இராமானுச நூற்றந்தாதி யுரை என்னும் சமயநூல்களை யியற்றினர். இவரியற் றிய கண்டன நூல்களுக்கு மறுப்பெழுதியவர் சோம சுந்தரநாயகர்.

சென்னை ஆதிமூல முதலியா ரென்பவர் கதா சிந் தாமணி யென்னும் நூலியற்றியவர். இவர் வின்சுலோ அகராதிக்குத் துணை புரிந்தவர்.

காஞ்சீபுரம் சபாபதி முதலியா ரென்பவர் பச்சை யப்ப முதலியார் கலாசாலையில் தலைமைத் தமிழ் புல வராயிருந்தவர். இவர் சைவசமய விளக்க வினுவிடை

பிரமோத்தர காண்டப் பொழிப்புரை என்னும் நூல்க ளியற்றினர். இவர் சந்தநயமிக்க தனிப்பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

சிந்தைகுடி கொண்டெனது செந்தமிழ் பரிந்தினிது
தொந்தமொடு வந்தருள்சொ ரிந்துமல—பந்தமற
வேயருளு மீசரொரு வேயடியி லேயுறைவர்
ஆயுமறை பேசவரி யார்.

தொழுவூர் வேலாயுத முதலியா ரென்பவர் இராச தானிக் கலாசாலையில் தலைமைத் தமிழாசிரியராய் இருந்தன ரென்ப. இவர் திருவெண்காட்டடிகள் வர லாறு, வேளாண்மரபியல், சங்கரவிசயம் என்னும் உரைநூல்க ளியற்றியவர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசிப்பகுதி யில் திகழ்ந்த இருபேரறிவாளர் சபாபதிநாவல ரென்பாரும், சோமசுந்தர நாயகருமாவர். இருவரும் சைவ சித்தாந்தப் பெரும்புலவராவர். சபாபதி நாவலர் யாழ்ப்பாணத்துள்ள வடகோவையிற் பிறந்து கல்வி பயின்று தில்லையிற் பலநாள் வதிந்தவர். இவர் திருவாவடுதுறை ஆதீனப்புலவராயுந் திகழ்ந்தனர்; உயர் தமிழ் நடையிற் சொற்பொழிவாற்றும் ஆற்ற லுடையவர். இவர் சிவஞானபாடியத்தைத் தெளி வுறக்கற்றுச் சித்தாந்த முடிபுணர்ந்து சிவஞான முனி வரைத் தமது குலதெய்வமாகக்கொண்டார்; சிதம்பர சபாநாதர் புராணம், சிவகருணாமிர்த மொழிபெயர்ப்பு பாரததாற் பரிய சங்கிரகம், இராமாயண தாத்பரிய சங்கிரகம் என்னுஞ் செய்யுள் நூல்கள் இயற்றினரே

னும் திராவிடப்பிரகாசிகை யென்னும் இவரது செவ்விய உரைநடை யிலக்கியமே இவரதுபேரை நிலைநிறுத்துவதாகும். இவர் ஆறுமுக நாவலரது மாணாக்கரென்ப.

ஆறுமுக நாவலரது மருகரும் மாணாக்கருமாகிய பொன்னம்பலப்பிள்ளை யென்பார், சிறந்ததோர் நற்றமிழ்ப் புலவர். அவர் கம்பராமாயணச் சொற்பொழிவிற் றலைசிறந்தவர்; பாரதத்தில் ஆதி பருவத்திற்கு உரை வகுத்தவர்.

சோமசுந்தர நாயகர் சென்னைச் சூளையில் வதிந்தவர். வடமொழி தென்மொழி யென்னும் இரு மொழிச் சமய நூல்களையும் நிலைகண்டுணர்ந்தவர். இவர் யாவருள்ளத்தையும் கவரும் சமயச் சொற்பொழிவு இயற்றுவதில் இணையற்ற திறமை வாய்ந்தவர். இவர் பாற்கர சேதுபதியின் பேரவையின்கண் 'வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்' என்னும் பட்டம் பெற்றவர்; வைணவ முதலிய பரசமயங்களைக் கண்டிப்பதில் வல்லவர். இவர் திருஞான சம்பந்தப் பெருமானைத் தமது குல தெய்வமாக வழிபட்டவர்; சைவ சமய உண்மைகளை உலகினர்க்கு விளக்கும் பொருட்டுப் பலப்பல உரைநடை நூல்களியற்றியவர். இவரது உரைநடை நூல்கள் சமயச்சார்பின ஆதலால், வடமொழிக் கலப்பு மிக்கன; சொல்வளமும் மறுப்பு நயமும் ஆண்மைச் சுவையும் பொதுளித் திகழ்வன. இவர் இயற்றிய செய்யுட்கள் மிகுதியும் செந்தமிழ்ச் சொற்களா லாயனவே. இவரியற்றிய நூல்கள் ஆசாரி

யப் பிரபாவம், சிவபாரம்மியப் பரதெரிசினி, சிவா திக்ய ரத்நாவளி, மெய்கண்ட சிவதூடண நிரோதம், சித்தாந்த சேகரம், ஆபாசஞான நிரோதம், வேத சிவாகமப் பிரமாணியம், பிரமாநுபூதி, சிவநாமப் பஃறொடை வெண்பா முதலியன.

தமிழ்ப் பெரு நூல்களை அச்சியற்ற முயன்றவருள் மிக உழைத்தவர் யாழ்ப்பாணம் ராவ்பகதூர் தாமோதரம் பிள்ளை யென்பார். சுன்னுகம் முத்துக் குமாரக் கவிராயரிடம் இவர் கல்வி பயின்றவர். இவர் ஆங்கில மொழியிலும் வல்லவராய்ப் புதுக்கோட்டை நீதிமன்றத் தலைவராய் இருந்தவர். இவர் வீரசோழியம், இறையனூரகப்பொருள், தொல்காப்பியப் பொருளதிகாரம், இலக்கண விளக்கம் என்னும் பெருநூல்களை ஆராய்ச்சி மிக்க பதிப்புரையோடு வெளியிட்டவர். இவரது பதிப்புரைகள் ஆராய்ச்சிக் கட்டுரைக்கு எடுத்துக் காட்டாவன. இவர் பல தனிப்பாடல்களும் பாடியுள்ளார். யாழ்ப்பாணத்தில் ஏழாலை யென்னுமிடத்தில் தமிழ்ப் பாடசாலை யொன்று தாபித்து, முருகேசப் பண்டிதர் வாயிலாகவும், குமாரசாமிப் புலவர் வாயிலாகவும் தமிழ்க் கல்வியைப் பரப்பினவர். இவரது அச்சியற்றுந் திறத்தைக் குமாரசாமிப் புலவர் புகழ்ந்து பாடிய செய்யுள் வருமாறு:—

"ஏட்டி விருந்த அருந்தமிழ் நூல்க ளெனைப்பலவுந்
தீட்டி வழுக்களைந் தச்சினி லாக்குப செந்தமிழ்சேர்
நாட்டி லளித்துயர் தாமோ தரேந்திரன் நண்ணுபுகழ்
பாட்டி லடங்குந் தகைத்தோ புலவர்கள் பாடுதற்கே."

## அதிகாரம் உச.

# தற்காலம்.



### (சசு) கி. பி. இருபதாம் நூற்றாண்டு.

இந்நூற்றாண்டிலே உரைநடை நூல்கள் மிகுதியாக எழுதப்படுவன ஆயின. மேலைநாட்டுச் சார்பினால் வரலாற்றாராய்ச்சி முறையைத் தமிழறிஞர் பலர் கைக்கொள்வா ராயினர். தமிழ்ச் சொற்பொழிவுகள் நிகழ்த்துதற்குரிய அவைகள் பல இடங்களிற் றோன்றின. அச்சுக்கூடங்களும் முன்னையினும் மிகுதியாயின. தமில் நூல்களையும் ஆங்கில நூல்கள்போலச் செவ்வையான அச்சிற் பதிப்பித்துக் கண்கவர் வனப்புடன் வெளியிடும் முயற்சியும் ஏற்படலாயிற்று. இம்முயற்சியிற் றலைசிறந்த சங்கம் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். இக்கழகம் சிறப்புறத் தோன்றி நடைபெறுவதற்கு இதனை நிறுவியவரும் இதன் அமைச்சருமாகிய வ. திருவரங்கம் பிள்ளையின் விடாமுயற்சி பாராட்டத்தக்கது. இதில் ஊக்கத்தோடு தனியே உழைப்பவருட் சிறந்தவர் சென்னைப் போலீசு உயர்தர வேலையிலிருந்து காலஞ்சென்ற கனம் பவானந்தம் பிள்ளையாவர்.

இந்நூற்றாண்டிற் செய்தித் தாள்களும்மிகலாயின. நாடகங்களும், புனைகதைகளும் புலவராலும் பாமரராலும் அளவின்றி இயற்றப்பட்டன. உயர்தரத் தமிழ்க் கல்வி பயின்று தேர்தற்குரிய தேர்வுகள்

தென்னாட்டிலும், இலங்கையிலும் சில தமிழ்ச் சங்கங்களால் ஏற்படுத்தப்பட்டன. ஆராய்ச்சி முறை புதுவதாகத் தோன்றிய பின்னர்த் தமிழ்ப்புலவோர் வடமொழிச் சார்பினரும், தனித் தமிழ்ச் சார்பினருமாக இருவகைப் படுவாராயினர். மதுரைத் தமிழ்ச் சங்கமும், கரந்தைத் தமிழ்ச் சங்கமும் முறையே இருவகைச் சார்பிற்கும் எடுத்துக் காட்டாகும். திருநெல்வேலியில் தோன்றிய தென்னிந்திய தமிழ்ச் சங்கமானது தமிழ்ப் புலவர், இளந்தமிழ்ப் புலவர், தமிழ்த் தேர்வு என்னும் தேர்வுகளை நடத்தி வருகின்றது. முற்கூறிய இரண்டு சங்கங்களைப்போல இச்சங்கம் இன்னுங் கல்விச்சாலையை அமைத்துக் கொள்ளவில்லை.

அரசாங்க சம்பந்தமான பத்திரிகைகளிற் சில செவ்விய தமிழ் நடையை மேற்கொண்டன. சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் தமிழ் வளர்ச்சிக்குரிய சிலமுறைகள் தழுவப்பட்டுள்ளன. மாட்சிமை தங்கிய ஆங்கில அரசரால் அளிக்கப்பட்ட பொருள் கொண்டு தமிழகராதி நூலொன்று தொடங்கிப் பன்னிரண்டு ஆண்டுகட்கு மேலாகின்றன. இன்னுந் தமிழ் வளர்ச்சியின் பொருட்டு நடைபெற வேண்டிய வேலைகளெல்லாம் இனி நிலைநாட்டப்படுந் தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் முற்றுப் பெறுமென அறிஞர் பலர் கருதுகின்றார்கள். சிதம்பரம் அண்ணாமலைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் அத்தகைய முயற்சிகளை மேற்கொள்ளுதல் கூடும்.

மேலைநாட்டு ஐரோப்பியப் புலவரிற் சிலர் தமிழினை விருப்பத்தோடு ஆராய்ந்து முன்னினும் மிகுதியாகக் கற்கத்தொடங்கினர். ரெவரன்டு பாப்பிலி, பிரான்சு தேசத்து சூலியன் வின்சன் முதலியோர் தமிழ்க்கல்வி நிரம்பியவர்கள். சென்ற நூற்றாண்டிறுதியிலே ஆங்கில நுண்ணூலைத் தமிழில் மொழி பெயர்க்கு முயற்சி தொடங்கப்பெற்று யாழ்ப்பாணத்தில் கிரே என்பவர் எழுதிய அனடமி (Gray's Anatomy) என்னும் மருத்துவ நூலைத் தமிழாக்குவதன்கட் சென்றது. இக் காலத்திலே சென்னைத் 'தமிழர் நேசன்' பத்திரிகையார் இம்முயற்சியில் ஊக்கங் காட்டுகின்றார்.

இந்நூற்றாண்டில் தக்க பாவலர் மிகச் சிலரே. இதன் தொடக்கத்தில் வாழ்ந்த புலவருள், பாண்டிநாட்டுக் கொட்டாம்பட்டியிலே கி. பி. 1864-ம் ஆண்டிற் பிறந்த கருப்பையாப் பாவலர் என்பவர் பல சிறு காப்பியங்கள் இயற்றியுள்ளார். அவர் இயற்றிய கோவை, அந்தாதி, மாலை முதலியன பல. திருச்செந்திற் திரிபந்தாதி, ஒரெழுத்தந்தாதி, நாமகளிரட்டை மணிமாலை, ஐந்திணைக் கோவை, திருக்கோட்டாற்றுக் கலம்பகம், அழகர் பதிகம் என்னும் இவை அவற்றுட் சிறந்தன. விக்டோரியா பேரரசியார் வரலாறு இவரால் இயற்றப்பட்டது. இவர் தமிழ் நாடெங்குஞ் சென்று ஆங்காங்கே பாடல்கள் இயற்றியுள்ளார். இவர் பழனிக் குமாரப் பிள்ளையென்னும் வள்ளல்மீது பாடிய பாட்டொன்று வருமாறு:—

"கல்லாத மூடர்கள்பாற் கவியுரைக்கிற்
கற்பனைசொற் கனிவின் சாரம்
எல்லாருங் கறிவரா லறியாதார்க்
குரைத்தல்கம ரினிலே பாலை
இல்லாமற் கவிழ்த்த தொக்கு
மென்பதுநீ யறியாயா வின்பாச் சொல்ல
வல்லாருன் பாலன்றி யெவர்க்குரைப்பர்
பழனிக்கு மார வேளே."

வேறொன்று வருமாறு:

"தேங்குழப் பந்தோகை யித்தியமா வுடலிற்
திகழ்வடையப் பழம்பணியா ரங்களொலா நீத்தே
ஓங்கியமு தலட்டுபல காரமுள வனைமார்க்
கொடுங்கிப்பா யசநிகர்த்த வுற்றார்க்கு மஞ்சி
வீங்கியபக்கோ டாமூலையிற் பூந்தினவு கொண்டுன்
விரகத்தி லதிரசமுற் றன்பிட்டு வந்தாள்
தாங்குதனின் கடன்செந்தில் வேலரசே யவளின்
றன்பாலா யடைதலெழி றருமுறுக்குத் தானே."

சுப்பிரமணிய பாரதி யென்பார் அரசாங்க இயக்கங்களில் மிகுதியும் ஈடுபட்டவரெனினும் யாவர்க்கும் விளங்கும் எளிய இனிய தமிழ்ச் சொற்கோவைகளால் நாட்டுப் பற்றும் நம்மொழிப் பற்றும் புகும் வண்ணம் செவ்விய பாடல்கள் பல இயற்றியுள்ளார். இவர் உவமைகள், இயற்கை நலம் பெரிதும் வாய்ந்தன.

"மண்ணில் இன்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை யிழப்பாரோ
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால்
கைகொட்டிச் சிரியாரோ."

மதுரைக்கடுத்த சோழவந்தானில் வேளாள மர பிற் பிறந்த அரசஞ் சண்முகம் பிள்ளையென்பவர் இலக் கியம், இலக்கணம், சித்தர் நூல், சோதிடம் என்பவை களில் அளவிறந்த தேர்ச்சியுடையவர். இவர் சில ஆண்டுகட்கு முன் காலஞ்சென்றார். இவர் சோழவந் தான் கிண்ணிமடத்துத் தம்பிரானிடம் கல்வி கற்ற வர். இவர் மதுரைச் சங்கக் கலாசாலையில் போதகரா யும் இருந்தார். ஒரு பாட்டிற்குப் பல பொருள் கூறுவதில் இவர் இணையற்றவர். பல்வகைச் சித்திரக் கவி பாடுவதிலும் இவருடைய திறமை மிக வியக்கத் தக்கது. ஏகபாத நூற்றந்தாதி மாலை, மாற்றுமாலை, இன்னிசை இருநூறு, அந்தாதித்தொடை, நிகண்டு முதலிய அரிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டன. இவர் நுண்மாண் நுழை புலமுடையாரென்பது இவ ரது திருக்குறளாராய்ச்சியாலும் தொல்காப்பியப் பாயி ரவிருத்தியாலும் தெற்றெனப் புலப்படும். இவரு டைய திரிபுரயமுடைய வெண்பா ஒன்று வருமாறு:-

"கற்கொண் டெறிந்தாரைக் காலான் மிதித்தாரைச்
சொற்கொண்டு நிந்தித்த சுந்தரரை—முற்கொண்டாய்
மாண்ட தருமதுரை மன்றை வெனமறந்தாய்
நீண்ட தரு மதுரை நீ."

சண்முகம் பிள்ளை யென்னும் மற்றொரு பெருந் தமிழ்ப் புலவர் திருமயிலாப்பூரிற் சிறந்து விளங்கி னார். இவர் செவ்விய உரைநடையில் பல கட்டுரைகள் தாள்களில் எழுதியுள்ளார். இவரது இலக்கண ஆராய்ச்சியும் சைவ சித்தாந்த நூலாராய்ச்சியும்

மிகவும் போற்றத்தகுந்தன. மணிமேகலையை முதன் முதல் அச்சிட்டு வெளியிட்டவர் இவரென்ப. திருமுல்லைவாயிற் புராணம் இவரால் இயற்றப் பெற்றது. இவர் பல மாணவர்க்குக் கல்வி பயிற்றியவர்.

சென்னைக் கிறித்துவக் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதராய்த் திகழ்ந்த வி. கோ. சூரியநாராயண சாத்திரியா ரென்பவர், மதுரையிற் பிறந்து சபாபதி முதலியா ரென்பவரிடம் கல்விபயின்றவர். ஆங்கிலத்தில் பி. ஏ. (B. A.,) பட்டம் பெற்றவர். இவர் தமிழுக்காக இடைவிடாது உழைத்து மிக இளமையில் (1903-ம் ஆண்டு) இவ்வுலகை நீத்தனர். இவர்க்கு இயற்றமிழ் மாணவர் பலர். அந்தணருள் நடுநிலைமையும் தமிழார்வமும் உள்ளவர்களில் இவரைப்போல் எவரும் இல்லை. இவர் உயரிய செந்தமிழ்நடையிற் பேசுவதிலும் எழுதுவதிலும் வல்லவர்; நாடகப்புலமை சான்றவர்; பாவன்மை யுடையவர்; நல்ல புதுக் கதைகள் (நாவல்) எழுதியவர்; மேலைநாட்டுச் சார்பாய வரலாற்று ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்; கூத்தப் பெருமானிடம் பேரன்புடையவர். இவர் இளமையில் இறந்தது யாவராலும் துயருறத்தக்கது. இவர் "ஞானபோதினி" யென்னுந் திங்கள் தாளுக்குச் சில ஆண்டுகளாக உடன் தாட்டலைவராயிருந்தனர்; ரூபாவதி மானவிசயம், கலாவதி என்னும் நாடக நூல்கள் இயற்றியுள்ளார். மானவிசய மென்பது களவழி நாற்பதின் கதையினை யுட்கொண்டது. பாவலர் விருந்து என்னும் இவரது நூல் பலபொருள்களைப் பற்றிய பாடல்களின் தொகை. இவரது தனிப்பாசுரத் தொகை

என்னுங் காதற்பாட்டு அக்காலத்துச் சென்னைக் கவர்னருக்கு ஏற்பிக்கப்பட்டு டாக்டர் ஜி. யூ. போப் பையரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள் ளது. இவரது நாடக இயல் என்னும் இலக்கண நூல் நாடக முறையை நவில்வது; 'மதிவாணன்' என்பது உயரிய தமிழ்நடையி லெழுதப்பட்ட ஒரு சிறந்த புதுக்கதை. இவரது மொழியாராய்ச்சி, 'தமிழ்மொழி வரலாறு' என்னும் நூலினால் இனிது விளங்கும்.

பச்சையப்பன் கல்லூரியிற் றலைமைத் தமிழ்ப் பண்டிதராயிருந்த செல்வக் கேசவராய முதலியார் எம். ஏ., தமிழில் மிகுந்த ஆர்வமுடையவர். இவர் செந்தமிழ் நடையில் கட்டுரைகள் எழுதுவதிலும், மாணவர்க்குத் தமிழ்ப்பற்று விளைப்பதிலும் வல்லவர். தமிழில் எம். ஏ. தேர்வில் முதன் முதற் றேறியவர் இவரென்ப. தம் மக்களுக்குப் பண்டைத் தமிழாசிரி யர்கள் பெயரையே இவர் அமைத்திருப்பது கருதத் தக்கது. தாழ்மனமும், தூயஉள்ளமும் உடைய இவர் விரைவில் இவ்வுலகம் நீத்தது தமிழர் தவக்குறைவே. தமிழைப்பற்றி இவரெழுதிய கட்டுரை தமிழ்ப் பெருமையையுந் தமிழரது நாகரிகச்சிறப்பையும் இனிது விளக்குஞ் செவ்வியதோர் தனிநூலாகத் திகழ்கின்றது. அதனுள் இவர் தமிழ்நூல்களில் வட மொழிக் கலப்பை ஆய்ந்து அளவுகண்டுள்ளார். இக் கட்டுரையின் முடிவில் அகத்தியர் காலந்தொட்டு இக் காலம் வரையிலுள்ள புலவர்களின் பெயர்களையும் அவர் நூல்களின் பெயரையும் இவர்தொகுத்தமைத்த

அட்டவணை இலக்கியவரலாறு எழுதுவதற்குப் பெரி தும் துணைபுரிவதாகும்.

புதுக் கதைகள் (Novels) ஆங்கிலநாட்டில் தக்க புலவர்களால் மக்களியற்கையையும், உலக இயற்கை யையும் அவ்வப்போது ஆராய்ந்த புதுக்கருத்துக்களை யுங் கொள்கைகளையும் 'கடுத்தின்னுதாரைக் கட்டி பூசிக்கடுத்தின்பித்தாற் போலப்' பொதுமக்களுக்கு நயமுற அறிவுறுத்துவான் எழுதப்படும் பல்வேறு வகைப்பட்ட உரையிலக்கியமாகும். இதன் இயல் பறியாது இந்நாட்டிலே தமிழ் நன்கு பயிலாதவர்க ளும் தம்மனம் போனவாறு இவ்வகையிலக்கியத்தைப் பிழைபட்ட உரைநடையி லெழுதிப் பரப்புவது வழக் கமாய் விட்டது. இவ்வழக்கத்தை முழுவதும் மாற்றத் தக்க வழியில் தமிழறிஞர் முயலவேண்டும். பொருள் நயமில்லாத சொற்பிழைமலிந்த கதைகளை அறவே கண்டித்தொதுக்குவதுடன் பள்ளிக்கூடத்திற் பாடங் களாக வைத்தலையும் அகற்றவேண்டும். படித்தவர்க ளுட் சென்னை இராசதானிக் கல்லூரியில் நூற்கோ வையாளரா (Librarian) யிருந்த யாழ்ப்பாணம் சர வணப்பிள்ளை பி. ஏ., என்பார் 'மோகனாங்கி' யென் னும் ஒரு தமிழ்ப் புதுக்கதை இயற்றியுள்ளார். இராசமைய ரென்பார் 'கமலாம்பா' ளென்னும் ஓரழகியகதை யியற்றினர். இவ்விருவரும் இக்காலத் தில் இல்லை.

'பஞ்சாமிர்தம்' என்னும் பத்திரிகையின் தலை வராயிருந்த 'மாதவைய' ரென்பவர் புதுமைகள்

எழுதுவதில் வல்லவரென்ப. 'பதுமாவதி' 'விசய மார்த்தாண்டம்' என்னும் இவர் நூல்கள் செவ்விய உரை நடையில் உலகியலை விளக்குவன. 'சித்தார்த்தர்' என்னும் புத்தர் வரலாற்றை இவர் தனித்தமிழில் எழுதியிருப்பது மிகவும் போற்றத் தக்கது. இவர் வடமொழிப் பற்றிலுங் குறைபாடு டையரல்லர். இவர் எழுதிய பிற நூல்கள்: மூத்து மீனுட்சி, உதயவன், குசிகர் குட்டிக் கதைகள், தக்கிண சரித்திர வீரர் முதலியன. குறள் நானூறு திரட்டி இவர் பதித்துள்ளார்.

இந்நூற்ருண்டின் தொடக்கத்திலே சைவசித்தாந்த நூலறிவினைப் பரப்புதற்காகப் பல பெரியார் முயன்றனர். அவர்களுட் சிறந்தவர் அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர யதீந்திர அடிகள் ஆவர். இவர் வேளாள மரபினர். இவர் பலர்க்குத் தமிழுஞ் சித்தாந்தமும் போதித்தவர்; சித்தாந்த மென்னும் பத்திரிகைக்குத் தலைவராய்ப் பல காலம் விளங்கினர். இவர் தாயுமானவர் பாடற்றிரட்டுக்குச் செவ்வையான உரை வகுத்துள்ளார்; இக்காலத்து ஆராய்ச்சியில் ஈடுபட்டவர். இவர் இறைவன் மீது பொது மக்கள் வழங்கும் 'எச்சரிக்கை' முதலிய பாவினங்கள் பாடி உலகினர்க்கு அன்பு விளைத்திருக்கிருர்.

சென்னையில் சில காலத்துக்குமுன் தமிழ்ப் புலவர்க்கு அறிவுத் துணையாய் விளங்கிய கனகசுந்தரம் பிள்ளை கிறித்துவ கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியராய் விளங்கியவர். நூல்களைப் பிழையற அச்சிட

உதவி புரிவதில் இவர் இணையற்றவர். 'இல்லாண்மை' யென்னும் ஓர் உரை நடை நூலும் இவர் இயற்றியுள்ளார்; பல்கலைக் கழகத்தார் மேற் கொண்டுள்ள தமிழகராதிக்கும் சில காலம் தலைமை பூண்டிருந்தார். இவர் யாழ்ப்பாணத்திற் பிறந்தவர்.

சின்னாட்கு முன்னர் காலஞ்சென்ற சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர் தமிழ் நூலும் வடநூலும் நிலை கண்டுணர்ந்தவரென்ப. இவர் வண்ணார் பண்ணைச் சைவப் பிரகாச வித்தியாசாலைத் தலைமை யாசிரியராகத் திகழ்ந்தவர். பழைய ஆராய்ச்சி முறையில் இவர்தலை சிறந்தவர். இவரது தமிழ்ப் புலவர் சரித்திரம் அகராதி முறையில் எழுதப்பட்டுப் பெரிதும் பயன் தருகின்றது. தக்க பெரும் புலவர் சிலரின் வரலாறுகள் அதனுட் காணப்படவில்லை.

திருப்பரங்குன்றில் நெடு நாள் வதிந்திருந்த யாழ்ப்பாணம் காசி வாசி செந்தில்நாத ஐயர் ஆறுமுகநாவலரின் மாணாக்கர். இவர் சைவசமயச் சார்பான வட நூல்களையுந் தென்னூல்களையும் நன்கு பயின்றவர். இவருடைய தம்பி சிவ சம்பு நாதையர் இவர்க்கு மிகுதியுந் துணை புரிந்து இவருடன் ஒருங்கு வாழ்ந்தனர். செந்தில்நாத ஐயர் மணஞ் செய்து கொள்ளவில்லை. இவர் சைவசித்தாந்த நன்னெறி நின்றவர். புறச் சமய மறுப்பில் சோமசுந்தர நாயகருக்குப் பின் இவரே தலை நின்றவரெனலாம். இவர் கிறித்துமத நூலாகிய பைபிளின் கண்டனமாக விவிலிய குற்சிதமென்னுமோர் சிறுநூல் இயற்றியுள்ளார். இவரியற்

றிய நூல்களுள் நீலகண்ட பாடிய மொழி பெயர்ப்பு பெரிதும் பாராட்டுதற் குரியது. இவரியற்றிய பிற நூல்கள் சிவஞான போத வசனாலங்கார தீபம், தேவார வேதசாரம், சீகாழிப் பெருவாழ்வின் காருண்ய மாட்சி முதலிய பல.

யாழ்ப்பாணம் சபாரத்தின முதலியா ரென்பாரும் பழைய முறை ஆராய்ச்சியிலும், சைவசித்தாந்த உரை நூல்கள் எழுதுவதிலும் சிறந்தவர். பிரபஞ்ச விசாரம் இவரது சிறந்த நூல்.

திருநெல்வேலிப் பால்வண்ண முதலியா ரென்பவரும் சைவசித்தாந்தத்துக்காகப் பெரிதும் உழைத்தவர். இவர் சித்தாந்தக் கருத்துகள் அடங்கிய பல கட்டுரைகள் எழுதியதோடு துகளறுபோதம், திரிபதார்த்த இலக்கணம் முதலிய சைவநூல்களை வெளியிட்டனர்; தனித் தமிழிலே சொற்பொழி வாற்றுப் படையென்னும் உரைநூல் இயற்றியுள்ளார். தமிழ்ச் சொற்கள் அனைத்திற்கும் வேர்ச் சொல் (Root) காண்பான் இவர் தமது வாழ்நாண் முடிவி லெடுத்துக் கொண்டது முற்றுப் பெறுமுன் இவர் இறந்தது துயருறத்தக்கது.

நற்றிணைக்கு உரை வகுத்த கும்பகோணம் நாராயணசாமி அய்ய ரென்பார் சிறந்த சங்கநூற் பயிற்சியுடையவர். அவர் விரைவில் இவ்வுலகம் நீத்தது வருந்தத்தக்கது.

யாழ்ப்பாணத்து நா. கதிரைவேற் பிள்ளை யென்னும் புலவர் சைவசமயத்தை நிலை நாட்டுவதில் அள

வற்ற ஊக்கமுடையவர்; சதாவதானஞ் செய்தவர். இவரது கல்வித் திறமை இவர் தொகுத்த தமிழ்ப் பேரகராதி, சைவபூடண சந்திரிகை, சிவக்ஷேத்திராலய மஹோற்சவ உண்மை விளக்கம், சுப்பிரமணிய பராக்கிரமம் முதலிய நூல்களாலும், கூர்மபுராணம், சிவராத்திரிபுராணம், பட்டினத்தார்புராணம், அருணைக்கலம்பகம் முதலிய நூல்களுக்கு இவர் கண்ட உரைகளாலும், சொற்பொழிவுகளாலும் செவ்விதின் விளங்கும். இவர் சென்னை இராயப்பேட்டையில் பாலசுப்பிரமணிய பக்தசன சபையையும் வேறு பல சைவசபைகளையும் ஏற்படுத்தியவர்; முருகப்பெருமானிடத்துப் பேரன்புடையவர். இவர் தம்மீது இராமலிங்க அடிகளின் மாணாக்கர்கள் தொடுத்த வழக்குகளில் வெற்றிபெற்று தமிழ்மறைக்கு ஆக்கந் தேடினர். இவர் இளமையிற் காலஞ்சென்றது வருந்தத் தக்கது.

திருநெல்வேலியைச் சார்ந்த திருமந்திர நகரத்துள் சில காலங்களுக்கு முன்னிருந்த ஆறுமுக நயினர் பிள்ளை யென்பவர் நுணுகிய தமிழறிவும், சைவசித்தாந்த நூலறிவும் உடையவர்; தமிழர் தனிப் பெருமையை எடுத்து விளக்குவதில் மிகச் சிறந்தவர். இவர் 'மெய்கண்டான்' என்னும் தாள் ஒன்று செவ்விதாக நடத்தி வந்தார்; 'சாலிய அந்தணர் புராணமும்' சிவகளைப் புராணமும் இவர் இயற்றியுள்ளார். தமிழ்த் தொண்டிற் சிறந்த இவர் விரைவில் விண்ணுலகம் எய்தினமை மிகவும் துயருறத்தக்கது.

திரிசிரபுரம் மா. சாம்பசிவம் பிள்ளை, பி. ஏ. என்பார் சைவசித்தாந்த நூலறிவுடையவர்; முதுமைப்

பருவத்திலும் மிகுந்த உழைப்பாளி. பழங் கொள்கைகளை நல்லவெனினும் அல்லவெனினும் விடாப்பிடியாகப் பெருநம்பிக்கையுடன் போற்றும் பொருட்டு எதிர் நூல்கள் எழுதுவதில் இவர் இணையற்றவர்; இக்கால வரலாற்று ஆராய்ச்சிக்கு மிகவும் மாறுபட்டவர்.

தஞ்சையிற் சிறந்த வழக்கறிஞராயிருந்து ஆறுதலடைந்திருந்த திருவாளர் சீனிவாசம் பிள்ளை யென்பார் செவ்விய 'தமிழ் வரலாறு' ஒன்று எழுதியிருக்கிறார். அஃது இரண்டு பகுதிகளையுடையது. அதனுட் சில கொள்கைகள் மறுக்கத்தக்கன.

செங்கற்பட்டுச்சில்லா மாகறல் என்னும் ஊரைச் சார்ந்த கார்த்திகேய முதலியா ரென்பவர் தமிழ்ப் பெரும் புலமையும் இடைவிடா ஆராய்ச்சியும் உடையவர். இவரது தமிழ்ப் பற்று அளப்பில்லாதது. இவர் வரலாற்று ஆராய்ச்சி முறையிற் பெருவிருப்புடையவர்; ஆங்கிலம் பயிலாதவர். மிகுந்த உழைப்போடு இவர் எழுதியுள்ள மொழி நூலென்பது எளிதில் அறியாத பல பொருள்களை நுணுக்கமாக எடுத்துரைப்பதெனினும் அதன் ஆராய்ச்சி முறை பெரிதுந் திருத்தமடைதற் குரியது.

பாம்பன் குமரகுருதாச அடிகள் என்பார் வேளாள மரபிற் பிறந்து உயர்ந்த துறவற நிலையில் நின்று முருகனது திருவருள் பெற்றுச் சைவ சமயத்தை நிலைநாட்டுவான் கூரிய ஆராய்ச்சியோடு பட்ட புறச்சமய மறுப்பு இயற்றுவதிற் றலைசிறந்தவராய்த்

திகழ்ந்தார். இவரது 'சைவ சமய சரபம்' அதற்கொரு தக்க சான்றும். இவரியற்றிய 'நாலாயிரப் பிரபந்த விசாரம்' ஆழ்வார்களின் கொள்கைகளைத் தெளிவுற விளக்கிச் சைவத்தை நிலை நாட்டுவது. இவரது 'பரிபூரணானந்த போதம்,' 'தகராலய ரகசியம்,' 'சிவஞானதீபம்' முதலிய தத்துவ நூல்கள் இவரது சீரிய உபநிடத ஆராய்ச்சியையும் சைவசித்தாந்த நுண்ணூலாராய்ச்சியையும் இனிது விளக்கும். இவர் பாடியுள்ள சேந்தன் செந்தமிழ் என்னுஞ் சிறுநூல் தனித் தமிழ்ச் சொற்களாலமைந்த ஐம்பது வெண்பாக்களை யுடையது. இவரியற்றிய பாடல்கள் முருகப் பெருமானின் புகழை விளக்குவனவாய்ப் பல்வகைப் பட்டுப் பெருகி நிற்பன. சித்திரக் கவிகள் பாடுவதிலும் இவர் வல்லவர். இவர் பாடல்கள் பல சந்தச் சொல் நயமுடையன. இவர் முருகப் பெருமான் வரலாற்றினைக் 'குமாரசுவாமியம்' என்னும் பெருங் காப்பியமாகப் பாடியுள்ளார். இவர் பல சமய ஆராய்ச்சி யுடையவர். விரிந்த நோக்குடையவர். இவர்க்கு மிகவுங் கடமைப்பட்ட சைவ வுலகம் இவரைத் தக்க அளவு போற்றாதிருந்தமை தவக் குறையே.

திருநெல்வேலிக்கடுத்த தச்சநல்லூரில் வாழ்ந்திருந்த இலக்குமணப் போற்றி யென்பார் திருக்குறள் விளக்கத்திற் றலைசிறந்தவர். சுமைல்சு (Smiles) என்பார் எழுதிய ஒழுக்க முதலிய நூல்களை இவர் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இதுகாறும் இந்நூற்றுண்டிற் காலஞ்சென்ற புலவர்களைப்பற்றி ஒருவாறு சொல்லப்பட்டது. இனி இப்பொழுதுள்ள புலவர் பெருமக்களைப்பற்றிச் சிறிது கூறுவாம்.

துறைசையாதீனப் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்களிடம் கல்வி பயின்று கும்பகோணம் கலாசாலையிலும் சென்னை அரசாங்கக் கல்லூரியிலும் தலைமைத் தமிழாசிரியரா யிருந்து மகாமகோபாத்தியாயர் என்னும் பட்டம்பெற்ற அந்தணர் சிகாமணியாகிய உ. வே. சாமிநாதையர் பத்துப்பாட்டு, சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு, பரிபாடல், பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பெருங்கதை முதலிய உயரிய சங்க இலக்கியங்களைப் பழைய ஏடுகளிலிருந்து செவ்விய முறையில் அச்சுக்குக் கொண்டுவந்த தனிப் பெருமைக்கு உரியராவர். வேம்பத்தூர் திருவிளையாடல், நன்னூல் மயிலைநாதருரை, திருக்காளத்திப் புராணம் முதலிய பிற்காலத்து நூல்களையும் இவர் பதித்துள்ளார். இவர் நூலாராய்ச்சியிலும், அடங்கிய நெறியில் நின்று இடைவிடாது நூல்களைப் படிப்பதிலும், ஒவ்வொரு நூலின் பொருளையும் பலபட வகுத்துத் தொகுத்தும் ஒழுங்குபடுத்திப் பதிப்பிடுவதிலுஞ் சிறந்தவர். சங்க இலக்கியங்கள் ஒவ்வொன்றிலும் இவர் எழுதியிருக்கும் அரசர் வரலாறு, புலவர் வரலாறு, அரும்பொருள் விளக்கம் முதலியன இவரது ஆராய்ச்சி உழைப்பை நன்கு விளக்கும். புத்த சரித்திரம், உதயணன் கதை, சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி முதலியவற்றின்

கதைச் சுருக்கம் முதலியன இவருடைய உரைநடை நூல்கள். இவரது பேருழைப்புக்குத் தமிழுலகம் மிகவும் கடமைப் பட்டிருக்கின்றது.

இலங்கைக்குரிய திருவிளங்க மென்னும் வழக்கறிஞர் 'சிவப்பிரகாச'த்திற்கோர் தெளிவுரை வகுத்தவர்.

திருநெல்வேலிக் குறுக்குத் துறையி லிருந்த திருப்பதிசாரச்சாமி யென்னும் பெரியார் சிவப்பிரகாசத்துக்கோர் விரிவுரை யியற்றினர்.

வட ஆற்காட்டுச் சில்லாவைச் சேர்ந்த சிறுமணவூர் முனிசாமி முதலியா ரென்பவர் பொதுமக்களுக்கு மகிழ்ச்சியளிக்குஞ் செய்யுள்நூல்களும், உரைநடை நூல்களும் இயற்றி யுள்ளார்; சித்தர் நூல்களிற் பல அச்சிட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றார். அவருடைய நூல்களிற் சிறந்தன: பிரபஞ்சோற்பத்தி, நாரதர் கலகம், வைத்திய ரத்னாகரம், மூலிகை மர்மம், அனுபவ வைத்தியம், சிவமகா மந்திரம், நவக்கிரக மந்திரம், சோதிட விளக்க சிந்தாமணி, நவகண்ட ஆரூடம் முதலியன.

மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் சிறந்து விளங்கும் தமிழ்ப் புலவர்களுள் திருநாரண அய்யங்கார் அச்சங்கத் தாளாகிய 'செந்தமிழ்' என்பதற்குப் பதிப்புத் தலைவராவர். இவர் எழுதிய நன்னூற் குறிப்பு இவரது ஆராய்ச்சி நுட்பத்தை இனிது விளக்கும். இவர் அர்சினங் குமரரிடம் கின்னாத்துப் பரிசு பெற்றவரில் ஒருவர்.

இச்சங்கத்தின் சிறந்த அங்கத்தினராயும், சேதுபதியின் அரண்மனைப் புலவராயும் திகழும் ரா. இராகவையங்கார் சிலகாலம் 'செந்தமிழ்'ப் பதிப்புத்தலைவராய் இருந்தார். இவர் தென்னவராயன் புதுக்கோட்டையைச் சார்ந்தவர். இவர் 'வஞ்சிமாநகர்,' 'சேதுநாடுந் தமிழும்' முதலிய செவ்விய உரைநடை நூல்களை இயற்றியுள்ளார். இவர் 'செந்தமிழ்'த்தாளில் கம்பரைப் பற்றிப் பல அரிய நுண்ணிய கட்டுரைகள் எழுதியுள்ளார். இவர் கம்பராமாயணச் சொற்பொழிவில் வல்லவர் என்ப; சங்க இலக்கியச் சொன்னடையிற் சில பாட்டுக்கள் இயற்றியுள்ளார். பாற்கர சேதுபதியைப் பற்றியும் பிரிவாற்றாமை காரணமாக இவர் பல வெண்பாக்கள் பாடினார். இவர் வடமொழியிலும் சிறந்த பயிற்சியும் ஆர்வமும் உடையவர். இவரது ஆராய்ச்சி வன்மையைப் பழந்தமிழ்ப் புலவர் பலர் போற்றுகின்றார்கள்.

இவருடைய மைத்துனரான மு. இராகவையங்கார் தமிழகராதிப் பதிப்புக்குத் துணைபுரிகின்றவர். இவர் சேரன் செங்குட்டுவன், தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, வேளிர் வரலாறு என்னும் உரை நடை நூல்கள் எழுதினவர். இவர் கொள்கைகள் சிலவற்றிற்கு மறுப்புகள் எழுந்துள்ளன.

பச்சையப்பன் கலாசாலைத் தமிழாசிரியராகத் திகழ்ந்த ஆ. சிங்காரவேலு முதலியாரென்பார் பட்டினத்தடிகள் பாடல்கட்கோர் உரை வகுத்துள்ளார்.

தமிழ்க்கல்தைப் பேரகராதியாக மிகப் பயன்படுகின்றது. யாழ்ப்பாணத்து முத்துத்தம்பிப் புலவரது அபிதான கோசமும் இத்தன்மையதே.

சென்னைக் கிருட்டிணாம்பேட்டைத் திருவாளர் குப்புச்சாமி முதலியா ரென்பார் பல ஆண்டுகளாகச் சைவ சித்தாந்த மகாசமாச அமைச்சரா யிருந்தார். இவர் இயற்றிய திருக்குறள் விளக்கம் மூன்று புத்தகங்களாலாகிய பெரியதோ ருரைநடைநூல். இது பல அறிஞர்களாற் பெரிதும் பாராட்டப்படுகின்றது.

இலங்கை நவநீதகிருட்டின பாரதியாரது 'உலகியல் விளக்கம்' என்னும் உரை நடைநூலும் இத்தகையதே.

காரைக்குடிச் சொக்கலிங்கஞ் செட்டியா ரென்பவர் சைவத்தை நிலைநாட்டுவதில் மிகவும் பாடுபட்டவர். இவர் நகரத்தார் மரபினர். இவர் அந்தாதிப் பதிகம், பிள்ளைத்தமிழ் மாலை, கோவை, ஊசல், சந்த விருத்தம், நாமாவளிக்கண்ணி, சிலேடை என்னுஞ் சிறுகாப்பிய வகைகட்குரிய இலக்கியங்கள் பல இயற்றியுள்ளார். திருப்பத்தூர்ப் புராணம், பெருந்தோட்டத்து அகத்தீச்சுரப் புராணம் முதலிய புராண காவியங்களும் இவர் இயற்றியுள்ளார். இவரியற்றிய பாட்டு நூல்கள் நாற்பத் தொன்பது. உரைநடைநூல்கள் பதினான்கு. அவற்றுட் சிறந்தன வேதாந்தத்தெளிவு, மாயாவாதக்கோண் மறுப்பு, சிவஞான போதார்த்த லகுவசனம் என்பன.

தஞ்சாவூர்ச் சில்லா வாலையானந்த சுவாமிகளென்பார் இக்காலத்திற் சைவசித்தாந்தத்துக்காகப் பெரிதும் உழைப்பவர். இவர் எழுதிய சிவஞானபோத விளக்கமும், சித்தாந்தப்படமும் மிகவும் போற்றற்குரியன.

திருப்பாதிரிப் புலியூர் வீரசைவ ஞானியார் மடத் தலைவராகிய சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளென்பார் தமிழ்நூல்களையும் வடநூல்களையும் நன்கு பயின்று யாவருள்ளத்தையுங் கவரவல்ல எளிய தமிழ் நடையிற் புராணப்பெருஞ்சொல்லும் சித்தாந்த விரிவுரையும் இயற்றும் திறமை வாய்ந்தவர். இவர் பலர்க்குச் சமயக் கல்வியுந் தமிழ்க் கல்வியும் அளித்தவர்.

யாழ்ப்பாணத்திற் பிறந்து தில்லையிலும் திருநெல்வேலியிலும் செப்பறையிலும் வதிந்திருந்து இப்போது தில்லையிற் சிவஞானத்திருக்களியை நிறுவியவரும் அதன்றலைவருமாகிய செப்பறைச் சிதம்பர சுவாமிகளென்பார் சைவசித்தாந்தத்தைப்பற்றிய இருமொழி நூல்களிலும் கூரிய ஆராய்ச்சியுடையவர். இவர் சைவசித்தாந்த நுட்பங்களை நுணுகியறிவதில் இணையற்றவர்; துறவற வொழுக்கத்திலும் அத்தகையரே. தேவாரத்துள் 'தோடுடைய செவி' முதலிய சில அரிய செய்யுட்களுக்கு இவர் அகல உரை வகுத்துள்ளார்; அப்பர் சுவாமிகள் திருவிருத்தத்திற்கும் சிவப்பிரகாசத்திற்கும் செவ்விய உரை எழுதியுள்ளார்; திருக்குறளிற் சில செய்யுட்களுக்கும் விரி

வுரையியற்றியுள்ளார். இவர் மறுப்பு நூல்கள் எழுது வதில் ஊக்கமுடையவர். தொல்காப்பியச் சண்முக விருத்திமறுப்பு முதலியன இவரது எதிர் நூல்கள். இந்நூல்கள் உயரிய கடிய நடையிலிருப்பதாற் பலர்க் கும் பயன் படுதலில்லை.

திருநெல்வேலிச் சில்லா வெள்ளகால் என்னும் ஊரில் தொண்டை மண்டல உயர்தர வேளாள மரபிற் றோன்றிய ராவ் சாகிப் சுப்பிரமணிய முதலியா ரென்ப வர் தமிழ் நூலும் ஆங்கிலமும் இனிது பயின்று, மாட்டு மருத்துவத் தொழின் முறையில் அரசாங்க உயர்தர வேலையிலமர்ந்து ஆறுதல் அடைந்திருப்பவர் கள். தமிழ் மக்கட்குரிய உயரிய நன்னெறியினொழு கும் நடுநிலை திறம்பா உள்ளத்தவர். இவர் தமிழரின் தனிப் பெருமையையும் உயர் நாகரிகத்தையும் எடுத்து விளக்குவதில் இணையற்ற ஆர்வமுடையவர். கம்ப ராமாயண நயங்களைத் தெரிந்துரைப்பதில் மிக வல்ல வர். கம்பராமாயண இன் கவித்திரட்டு என்னும் இவரது நூல் அதற்குத் தக்க சான்றாகும். இக் காலத்து வரலாற்று ஆராய்ச்சியிலும் இவர் தலை சிறந்தவ ரென்பது 'இராமாயண உள்ளுறை பொரு ளும் தென்னிந்தியச் சாதி வரலாறும்' என்னும் இவ ரது உரை நடை நூலால் தெற்றெனப் புலப்படும். இவரது பாவன்மை அகலிகை வெண்பா, கோம்பி விருத்தம், நெல்லைச் சிலேடை வெண்பா முதலிய சிறு காப்பியங்களால் இனிது விளங்கும். ஆங்கிலத்தில் மில் டனெழுதிய சுவர்க்க நீக்கத்தின் முதற் காண்டத் தையும், எர்பர்ட் பென்சர் கல்வியைப்பற்றி யெழுதிய

வியாசத்தின் ஒரு பகுதியையும் முறையே செய்யுள் நடையிலும் உரை நடையிலும் இவர் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இவரது விடா முயற்சி பெரிதும் பாராட்டத்தகுந்தது.

இராமாயண வரலாற்றுராய்ச்சியிலே தலை சிறந்த மற்றொரு புலவர் யாழ்ப்பாணத்திற் பிறந்து திருவனந்தபுரத்தில் உயர்தர வேலையிலிருந்து இப்போது திருநெல்வேலிச் ஜில்லா சிவசைலத்திலே ஆறுதலடைந்திருக்கும் பொன்னம்பலப் பிள்ளை என்பார். இவர்கள் இக்கால ஆராய்ச்சியிற் பெரிதும் ஈடுபட்டவர்கள். இவரது வஞ்சிமா நகராராய்ச்சியும் நுட்பமிக்கதே. தமிழர் பழமை (Tamilan antiquary) என்பதில் இவரது கட்டுரைகள் வெளி வந்துள்ளன.

முன்னீர்ப்பள்ளம் ஆசிரியர் ஈசுரமூர்த்திப்பிள்ளை சில நண்பருடைய வாழ்க்கை வரலாறுகளை எளிய உரை நடையில் இயற்றியுள்ளார். இவர் நீதிநெறித் தாலாட்டு முதலிய செய்யுணூலும் இயற்றியுள்ளார்; விரிந்த நோக்குடையவர்.

துடிசைக்கிழார் சிதம்பரனார் என்பார் தனித் தமிழ்ப் பெரும்பற்றுடையவர். இவருடைய ஆராய்ச்சிகள் பல தாள்களில் கட்டுரைகள் வடிவாக வந்துள்ளன. இவரியற்றிய நூல்களாவன : நித்திய கரும விளக்கம், உருத்திராக்க மகிமை, துடியலூர்ப்புராண முதலியன

திருநெல்வேலிச் ஜில்லா விருதை சிவஞான யோகிக ளென்பார் கோயிற் பட்டியிலுள்ள தமிழ்

வைத்திய சங்கம், திருவிடர் கழகம், பக்திவினை கழகம் என்னும் அவைகளைச் செவ்விதின் நடாத்தி வருகின்றவர்கள். இவருடைய ஆராய்ச்சிகள் பல தாள்களில் வந்துள்ளன. இவர் சித்தநூற் பயிற்சி சான்றவர்; தமிழின் தனி மாண்பினை நிலைநாட்ட முன் வந்தவருள் இவரே முதல்வ ரென்ப. இவர் நீலகண்ட பாடியத்தைத் தமிழில் சூத்திர யாப்பால் மொழிபெயர்த்துள்ளார். வச்சிர சூசிகௌப நிடதத்தை அகவற்பாவால் தமிழிற் செய்துள்ளார். இவர் தம் முதுமைப் பருவத்திலும் முயற்சியிற் றலைசிறந்தவர்.

பள்ளிக்கூடங்கட்குரிய பாடப் புத்தகங்கள் எழுதுவதில் தலைசிறந்தவர் ஆசிரியர் கா. நமச்சிவாய முதலியா ரென்பவர். இவர் பல தொகுப்பான பாடப் புத்தகங்கள் எழுதியுள்ளார். சில பெருநூல்களும் இவரால் அச்சிடப்பட்டுள்ளன. இவர் தமிழ்ப்புலவர் பலர்க்குத் தக்க உதவி செய்துள்ளார்.

திருநெல்வேலியிற் பிறந்து சென்னைக் கிறித்துவக் கலாசாலையிலும், இலங்கைப் பல்கலைக் கழகக் கல்லூரியிலும் உயர்தரத் தமிழ்ப் போதகாசிரியராயும் தமிழகராதித் தலைவராயுமிருந்த S. அனவரத விநாயகம் பிள்ளை எம். ஏ., எல். டி., என்பார், தமிழ்ப் பெருமக்கள் வரலாறு, சைவ சித்தாந்த வரலாறு முதலிய உரைநடை நூல்கள் இயற்றியுள்ளார். இவர் சொல்லாராய்ச்சியிற் சிறந்தவர்; நச்சினார்க்கினியருரையைப்பற்றிய ஓராராய்ச்சி நூலும் இயற்றியிருக்கின்றார்.

யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டித ரென்பார் தேவார அடங்கன்முறை, சிவஞானபாடியத்தின் முற் பகுதி முதலியவற்றை ஆராய்ச்சியுடன் செவ்வையாக அச்சிட்டுள்ளார். தூத்துக்குடி பொ. முத்தைய பிள்ளையவர்கள் சிவஞானபோதம், சிவஞான சித்தி யார் முதலியவற்றிற்குப் புத்துரை வகுத்துள்ளார்.

திருவனந்தபுரம் இசைத் தமிழ்ச் செல்வர் தி இலக்குமணப் பிள்ளை திருவாங்கூர் அரசாங்கத்தில் உயர்தரப்பொருள் நிலையாளராயிருந்து ஆறுதலடைந் திருப்பவர். இவர் நினைவாட்சி யென்னும் ஒரு நூலி யற்றி அதன்கண் யாவர்க்கும் பொதுவாகிய உயர்ந்த கருத்துக்களை வெளியிட்டுள்ளார்; இசைத் தமிழ்ப் புலமையில் இணையற்றவர். தெலுங்கில் தியாகையர் கீர்த்தனம் போலத்தமிழிற் சிறந்த பல்வகை இன்னி சைப்பாடல்கள் அமைப்பதில் இவர் மிக்கதிறமை வாய்ந்தவர்; இசைக் கல்வியைப் பிறர்க்கு ஈவதிலும் ஆர்வமுடையவர். இவரது உயரிய கடவுட் கொள் கையும் தாழ்மனமும் இவரையறிந்தார் பலராலும் போற்றப் படுகின்றன.

கோயமுத்தூரில் வழக்கறிஞராயிருக்கும் C. K. சுப்பிரமணிய முதலியாரென்பார் இலக்கண இலக்கியப் பயிற்சியும் சைவ சித்தாந்த நூலறிவு மிக்குடைய வர். இவர் சிவனடிப் பேரன்பு மிக்கவர்; சைவ சமயச் சொற்பொழி வியற்றுவதில் வல்லவர். மணிவாசகப் பெருமான், திருவள்ளுவனார் கூறிய நீத்தார் பெரு மை யனைத்திற்கும் சிறந்தோர் எடுத்துக் காட்டாக

ஆதல் விளக்குவான் பொருட்டு அவர் இயற்றிய 'மாணிக்கவாசகர் பெருமை' போற்றற்குரியது. இவர் பெரிய புராண ஆராய்ச்சி வல்லவர்.

சென்னைச் ச. சச்சிதானந்தம் பிள்ளை பி. ஏ. டி., தமிழிலுஞ் சைவத்திலும் அளவற்ற ஆர்வ முடையவர்; சைவசித்தாந்தச் சொற்பொழிவியற்று வதில் திறமைசான்றவர்; இக்கால வரலாற்று ஆராய்ச் சியிற் றலைசிறந்தவர். இவர் பல அரிய கட்டுரைகள் இயற்றியுள்ளார். இவரது நூல்களிற் சில, "சைவ சமய உணர்ச்சிக்காக நாம் செய்ய வேண்டிய வேலை யாது?" "சிவசின்னங்களணிவதேன்?" என்பன.

திருநெல்வேலிச் சில்லா குலசேகரன் பட்டினம் இராமநாத பிள்ளை யென்பார் தமிழறிவு சான்ற சிவ நெறியாளர். தனித்தமிழிலேயே எப்போதும் பேசு தலும் எழுதுதலுந் தம்பெருங் கடமையாகக் கொண் டவர். இவரது தமிழார்வம் நாடெங்கும் பரவுவதாக. இவரியற்றிய நூல்கள் தனித் தமிழ் மணம் கமழ்வன. அவை, மனையறம், திருவள்ளுவர் திருநாள், மண விளக்கம், மனை விளக்கம் முதலியன.

சென்னை இராயப்பேட்டை திரு. வி. கலியாண சுந்தர முதலியார் செந்தமிழ் நயந்தோன்ற எழுதுவதி லும் பேசுவதிலும் தலைசிறந்த வன்மையாளர். இவர் சென்னை இராயப்பேட்டை வெசிலிக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியரா யிருந்தவர். தமிழ்ப்புலவர் குழாத்துள் அரசியலியக்கங்களில் மிகவும் பயின்றவர்

இவரே. இவர் 'தேசபக்தன்' தாளுக்கு ஆசிரியராயி ருந்தவர். இவர் இப்போது 'நவசக்தி' யென்னும் தாளுக்குத் தலைவர். இவரியற்றிய செவ்விய உரை நூல்கள்: என் கடன் பணி செய்து கிடப்பதே, காந்தியடிகளும் மனிதவாழ்க்கையும், பெண்ணின் பெருமை, முருகன் அல்லது அழகு, சைவத் திறவு, சைவத்தின் சமரசம், கடவுட் காட்சியும் தாயுமானு ரும், இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், தமிழ் நூல்களிற் பௌத்தம், தமிழ்த்தென்றல், தமிழ்நாடும் நம்மாழ்வாரும், நாயன்மார் முதலியன. இவர் இள மையில் சில தமிழ்நூல்களுக்கும் உரை எழுதியுள் ளார். இவரெழுதிய நூல்கள் தமிழறிஞர் பாராட் டத்தக்கன. இவருக்குத் தமிழ்நாடு என்றும் கட மைப் பட்டுள்ளது.

திருநெல்வேலியைச் சார்ந்த முந்நீர்ப்பள்ளம் பூரணலிங்கம்பிள்ளை பி. ஏ., ஆங்கிலத்திலுந் தமிழி லுஞ் சிறந்த புலமையுடையவர். இவர் சிலகாலம் 'ஞானபோதினி' யென்னுஞ் செந்தமிழ்த் தாளுக் குத் தலைவராய்த் திகழ்ந்தவர். இவர் பல அரிய கட்டுரைகள் எழுதிப் பல தாள்களில் வெளியிட்டுள் ளார். தமிழிலக்கிய வரலாற்றை முதன் முதல் தொகுத்தெழுதியவர் இவரே. அஃது ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளது. தமிழ் இந்தியா என்னும் இவ ரது நூல் தமிழர் நாகரிகத்தின் தொன்மையையும் கடவுட் கொள்கையின் உயர்வினையும் செவ்விதிற் றெரிப்பது. இவரது உரைநடை நூல்கள் பல.

திருநெல்வேலிக் கார்காத்த வேளாள மரபிற் குரிய இரா. ப. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல். என்பார் செந்தமிழ் நலங்கனிந்த சொற்பொழி வாற்றுவதிலும் உரைநடை யெழுதுவதிலும் ஒப்பற்ற ஆர்வமுந் தி மையு முடையவர். சட்டத்துறையிற் பயிலுமிவ தமக்குக் கிடைத்த ஒழிவு நேரங்களில் எழுதிய திரு குறள் நூல்நயம், தமிழ் நாட்டுப் பெண்மணிகள் மு லிய நூல்கள் இனிமை மிக்க செந்தமிழ் உரை நடை குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இவரது கம்பர மாயணக் கட்டுரை ஆராய்ச்சித் திறம் மிக்கது. இவ சிலகாலம் சென்னைப் பச்சையப்பன் கலாசாலையி தமிழ்ப் போதகாசிரியரா யிருந்தார். இவர் குச் செய்யக் கருதுந் தொண்டுகள் பலவுஞ் சிறக் இவர் இப்போது அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தி தமிழ் விரிவுரையாளராய்த் திகழ்கின்ருர்.

மதுரை அமெரிக்கன் மிசன் கல்லூரித் தமிழ சிரியராயிருக்கும் கார்மேகக் கோனர், சிறந்த சங் நூற்புலவர். இஃது அவரெழுதிய பண்டைப் புலவ வரலாறு என்பதனுல் விளங்கும்.

தஞ்சைப்புலவர் உலகநாதபிள்ளை யென்பா தமிழ்ப் பெரும் புலமையும் இக்கால ஆராய்ச்சியு உடையவர். இவர் எழுதியுள்ள 'கன்றுங் கனியுதவும்,' 'கரிகால் வளவன்' முதலிய உயர்ந்த உரைநடை நூல் கள் புலவரால் போற்றத் தக்கன. இவர் ஆங்கில அரசிளங் குமரரிடம் கிள்ளாத்துப் பரிசு பெற்றவர்.

தூத்துக்குடிக்கடுத்த ஒட்டநத்தமென்னும் ஊரினராகிய சேகவீரபாண்டிய னென்பார் கம்ப ராமாயணச் சொற்பொழிவாற்றுதலில் வல்லவர். இவர் திருக்குறட் குமரேச வெண்பா வென்னும் பெருநூலொன்று இயற்றத் தொடங்கியுள்ளார். இவர் ஆத்திசூடிக்குப் பேருரை எழுதியுள்ளார். அது அச்சேறவில்லை. ஒவ்வொரு குறட்கும் ஒவ்வொரு கதையமைந்த வெண்பா இயற்றுதல் இவர் கருத்து. இவர் முயற்சி தழைக்க.

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை யென்பார் சோதிட நூல் வாயிலாகச் சிலப்பதிகாரக் கால முதலியவற்றைத் திட்பமாகத் தீர்மானித்துள்ளார்.

தமிழிலே செவ்விய உரைநடை நூல்கள் இயற்றும் காரைக்குடி வைத்தியலிங்கம் பிள்ளை யென்பார் உரை நூல்கள் இயற்றுவாருள் முயற்சி மிக்கவர். சிற்றூர் க. ப. சந்தோஷம் மணி திருநாவுக்கரசு முதலியார், பெரியபுராண வாராய்ச்சியிற் சிறந்த லால்குடி, சரவண முதலியார் முதலிய தமிழ்ப்புலவர் பலரைப் பற்றி ஈண்டு விரிப்பிற் பெருகும் என்று அஞ்சி விடுத்தாம்.

தமிழ்ப் புதுக்கதைகள் மருதுயாக எழுதுவாருள் ஆரணி குப்புசாமி முதலியார், போன்னுசாமிப் பிள்ளை முதலியோர் சிறந்தவர். இவர்களுடைய உரைநடை திருத்தமுறுதற்குரியது.

நாடக நூல்கள் இயற்றுவாருள் சென்னைச் சிறுவழக்கு மன்றத்தலைவரா யிருந்தவரும், சுகுண விலாச

சபையின் அமைச்சரும் ஆகிய சம்பந்த முதலியாரியற்றிய நாடகங்கள் பெரிதும் பாராட்டப்படுகின்றன. அவற்றுட் சிறந்தன லீலாவதி சுலோசனை, மனோகரன், சாரங்கதரன், இரண்டு நண்பர்கள், மார்க்கண்டேயர் முதலியன.

அச்சின் வசதி மிகுந்த இக்காலத்திலே செய்தித்தாள்கள் பல வெளிப்பட்டுப் பொது மக்கட்கு நிகழ்காலச் செய்திகளையும் பல நற்கொள்கைகளையும் அறிவுறுத்துகின்றன. அவை யாவற்றுள்ளுந் தலை சிறந்தது. 'நவசக்தி' என்னும் கிழமைத்தாள் ஆகும். தமிழில் அரசியலியக்கக் கருத்துக்களை விரிவுற நன்கு தெரிக்கும் தாள் அஃதே.

கரந்தைத் தமிழ்ச்சங்கம் நடத்திவரும் திங்கட்டாளாகிய 'தமிழ்ப் பொழி'லும், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நடத்திவரும் 'செந்தமிழ்ச் செல்வி'யும், மறைமலையடிகள் நடத்தி வரும் அறிவுக் கடலாகிய 'ஞானசாகர'மும் உயரிய தமிழ் நடையும் நுண்ணிய மாண்புமிக்க ஆராய்ச்சி நயங்களும் பொதுளித் திகழ்வன ஆதலால், அவை தமிழ் ஆராய்ச்சி மாணவர்களாற் பெரிதும் போற்றத் தகுந்தன. கரந்தைத் தமிழ்ச் சங்க வாயிலாகத் தமிழ்க்கும் தமிழர்க்கும் தமது உடல், பொருள், ஆவி மூன்றினையும் பெரிதாமுதவும் செந்தமிழ்ப் புரவலர் த. வே. உமாமகேசுரம் பிள்ளையவர்கட்குத் தமிழுலகம் செய்யக் கடவதாய கைம்மாறென்னை!

பண்டிதமணி மு. கதிரேசஞ்செட்டியா ரென்பார் மகிபாலன்பட்டியில் நகரத்தார் மரபிற் பிறந்தவர். இவர் சோழவந்தான் சண்முகம் பிள்ளையவர்கள் மாணாக்கர்; பெரிய புராணம், சிலப்பதிகாரம், திருவாசகம் முதலிய தமிழ்ப்பெரும் நூல்களின் நுண்ணிய நயங்களைத் திட்பமாகவும் தெளிவாகவும் எடுத்துரைப்பதிற் றலை சிறந்தவர்; இரு மொழியிலும் வல்லவர். வடமொழியினின்று 'சுக்கிரநீதி' யென்னும் பெருநீதி நூலைப் பிழையற்ற அழகிய செந்தமிழ் நடையில் இவர் மொழி பெயர்த்துள்ளார். அந்நூலினால் இவரது மொழி பெயர்ப்புத்திறம் விளங்கும். 'சுலோசனை,' 'உதயணன் கதை' முதலிய உரை நூல்களையும் இவர் இயற்றி யுள்ளார். செய்யுளியற்றுவதிலும் வல்லவர். இவரது வடமொழி வன்மையையும், மொழிபெயர்ப்புத் திறமையையும், வடமொழி வேதாகம முதலிய பெருநூல்களைத் தமிழுரை நடையில் மொழிபெயர்த்தற்குப் பயன் படுத்திப் பெரும்பயன் துய்ப்பதற்கு நகரத்தார் முதலிய தமிழ்ச் செல்வர்கள் முன் வருவார்களாக!

தமிழ்த் தொன்னூலாராய்ச்சியின் பொருட்டுத் திரிசிரபுரம் ஆசிரியர் சவரிராயபிள்ளை யென்னும் கத்தோலிக்கக் கிறித்துவப் புலவரால், சில ஆண்டுகளாகச் செவ்வையாக நடத்தப்பட்டுவந்த தமிழர் பழமை (Tamilian Antiquary) என்னும் தாள் இப்போது நின்றுவிட்டது. அதிற் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் வந்துள்ளன.

இந்நூற்றாண்டிலே பெண் பாலாருள்ளும் பலர் கல்வி கற்கவும் சொற்பொழி வியற்றவும் முன் வந்துள்ளார்கள். பாண்டி நாட்டில் திருக்குற்றாலத்துக்கடுத்த காசிமேசபுரம் புலவர் கிருட்டிணப்பிள்ளை திருமகளாராய சேண்பகத் தம்மாளவர்களது அளவிறந்த இலக்கியப் பயிற்சி அறிஞராற் பெரிதும் வியக்கத்தக்கது. அவரது பாவன்மை அவரியற்றிய கிருட்டிணப்பிள்ளை வரலாற்றால் இனிது விளங்கும்.

மறைமலையடிகளின் அருமை மகளாகிய நீலாம்பிகை யென்னும் பெண்மணி ஒப்பற்ற தனித்தமிழ்ப் பற்றுடையவ ரென்பது தனித் தமிழிலேயே முற்றிலு மெழுதிய அவரது 'தனித் தமிழ்க் கட்டுரை' யென்னும் நூலால் தெள்ளிதிற் புலனாகும். அவ்வினிய உரைநடை நூல் கட்டுரை யெழுதக் கருதுவார்க்குச் சிறந்ததோர் முன் மாதிரியாக விளங்குகின்றது. அவரது மூப் பெண்மணிகள் வரலாறும் அத்தகையதே.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் புலவராயிருக்கும் வேங்கடசாமி நாட்டா ரென்பவர் புரைதீர்ந்த தமிழ்ப் பெரும் புலமையுடையவர். இவர் மாணவர்க்குக் கல்வி போதிப்பதில் ஒப்பற்ற ஊக்கமும் திறமையும் உடையவர்; சொற்பொழி வாற்றுவதிலும் வல்லவர்; இக்கால ஆராய்ச்சி முறையிலுங் கைதேர்ந்தவர். தாம் இருக்கும் இல்லத்திற்குத் 'திருநாவுக்கரசு நிலையம்' என்று திருப்பெயர் அமைத்தமை இவர் அப்பெரியார்மாட்டு வைத்த

பேரன்பினையும் கற்றடங்கி ஒழுகுதற் கேதுவாகிய இவரது தாழ்மனத்தையும் புலப்படுத்தும். இவர் நல்லிசைப் புலவர் பலருடைய வாழ்க்கை வரலாறுகளை நுண்ணிதின் ஆய்ந்து தனித்தனி வெவ்வேறு உரை நடை நூல்கள் இயற்றியுள்ளார். அகத்தியர், நக்கீரர், கபிலர் என்னும் பெரும் புலவர்க்கு வாழ்க்கை வரலாறு வகுத்துள்ளார். இப்படியே மற்றப் புலவர்க்கும் வாழ்க்கை வரலாறு அமைதல் மிகவும் வேண்டிய தொன்றே. இவரது வரலாற்றுராய்ச்சியின் திட்ப நுட்பங்கள் கள்ளர் சரித்திரமென்னும் இவரது உரை நடை நூலிற் காணப்படும். இவரது இலக்கிய ஆராய்ச்சியின் நயங்கள் 'கண்ணகி கற்புமாண்பு' என்னும் இவரது கட்டுரையின் கண்ணே மிளிர்ந்து இலங்குவன. இவர் பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணத்திற்கு எழுதியுள்ள செவ்விய உரை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்படுகின்றது. மாணவர்கட்குரிய ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நீதி நூல்கள் பலவற்றிற்கும் இவர் எளிய இனிய உரை வகுத்துள்ளார். செந்தமிழ் விளக்கும் பெருந்தொண்டினையே தமது வாழ்வாகவும் வைப்பாகவுங் கருதும் இப்புலவர்தலைவர் வாயிலாக இன்னும் வெளிவராத பல தமிழ்ப் பெருநூல்கள் அச்சூர்தியேறி உலவும் வண்ணம் தமிழ்ப் பெருஞ் செல்வர்கள் முன் வந்து பொருளுதவியும் ஊக்கமும் அளிப்பாராக.

சென்னை அரசாங்கத்தில் அளவைப் பெரும் பிரிவில் மேற்பார்வைக்குரிய உயர்தர வேலையி